உ

ஸ்ரீ சிவ ராமஜெயம்

# ஆலய விக்கிரக நிர்மாண ஆயாதி சிற்ப இரகசியம்

## மஹா கணபதி வணக்கம்

மாதலத்து மகிமைகொள் ஆலயம்
வேதநூல் துணையாக விரித்திட
ஆதரித்தொ டருள்தர வாரணன்
பாதபத்மம் பரவி பணிகுவாம்.

## சிவன் உமை வணக்கம்

தேசமேன்மை விளங்க தேவாலயம்
ஆசில்நூல்கொடு அன்பர் பணிசெய
பாசமாமலர் மாதுமையா ளொடு
ஈசனெந்தை பிரானை இறைஞ்சுவாம்.

## திருமால் லக்ஷ்மி வணக்கம்

உலகம்வாழ உயர்திருக் கோயில்கள்
நிலவுநற் பணிநூல் நிறைவேறுதற்
கலையில்மாபுகழ் பூமகள் தன்னொடும்
இலகுநாரணன் நற்பதம் யேற்றுவாம்.

## 4. பிரம்மா சரஸ்வதி வணக்கம்

நாததத்துவ நான்மகள் தன்ஞெடும்
வேதபுஸ்தகம் தந்த விமலனே
தீதகற்றும் திருப்பணி சிற்பநூல்
பூதலம் தழைக்க புகழ்ந்தேத்துவாம்.

## 5. உபாசஞமூர்த்தி வணக்கம்

வையமோங்க வளந்தரு மாஸ்தீக
தெய்வமாதி திருப்பணி நூல்செய
ஐயன்எந்தை குகேசனும் அன்போடு
தெய்வகுஞ்சரி வள்ளிஎன் சென்னியே.

## 6. மஹாமயன் (தேவ சிற்பி) வணக்கம்

திருமுகம் ஐந்தும் சடைமுடிகொண்டு திகழ்சக்கரசூலகதையும்
மருவிய அபய ஜபமாலைவலமாய் வலைசங்கு டமருகம் கண்டி
புரியுந்நற்போத புஷ்தகம் இடமாய் புண்ணியமூர்த்தியாம் விஷ்வ
பிரமனும் சர்வகர்மகர்த்தவ்ய பெருமை சற்குருவினைப் பணிவாம்.

## 7. மயன் (சிற்பாச்சாரியார்) வணக்கம்

ஆயிரத்தெண் சிவாலயம் நூற்றெட்டு
தாயின்நல்ல திருப்பதி தாரணிக்
கேயசிற்பவி லக்ஷண நூற்சொற்ற
தூயசிற்பியர் தாள்தொழு தேத்துவாம்.

## 8. ஈசனருளாலியற்றியது

எளியனேன் சிற்றறிவிற் கெட்டியவா றிப்பார்
தெளியவே சிற்பத்தின் சீரைத்—தெளிவாக
வானேறும் பெம்மானருளதனலோர் நூலாத்
தேனூறச் சொன்னேன் தெரிந்து.

6-4

## 9. சற்குரு வணக்கம்

கூர்த்தமதி சீர்த்தநடை திருப்போரூர்வாழ்
குமரனருள் பெருசீலன் கோதில்கேள்வி
ஆர்த்தபுகழ் ஆத்திகனுய் ஆலயாதி
அரும்பணியில் ஆற்றிவந்த எந்தையாகும்
பார்த்தசாரதி தபதிஎன்னும் சீலன்
பாதமலர் நிதம்போற்றி பரிந்தாட்கொண்ட
வார்த்தைமிகுசோதிட நூல்வல்ல ஆசான்
வளந்தரும் சின்னப்பன் தாள்வணக்கம் செய்வாம்.

## 10. அவையடக்கம்

எண்ணில் பலகலைபரந்த இருநிலத்தில்
இணையில்லா சிற்பனூல் ஆய்ந்துதேர்ந்தோர்
மண்ணில் புதைப்பொருள்போல் மறைத்துமாண்டார்
மற்றதனை தெரிந்தவரை மறையாவண்ணம்
அண்ணல் அருள்தூண்டுதலால் ஆவல்கொண்டு
ஆதரிக்கும் உலகமென அச்சிட்டேன்ஆல்
புண்ணியநற் தொழில்புரிவோர் புலவோர்மிக்கோர்
புகழ்கண்டு புரைநீக்கி பொருப்பரன்றே.

## 11. நூற் சிறப்பு

வெளியிட்ட யின்னூலின் விளக்கங் கேளீர்
வெகுசூட்சம் பார்ப்பதற்கு வைத்ததாமோர்
ஒளியுள்ள கண்ணுடிபோலே தோற்றும்
ஓதியிடும் பலன்க ளனுபோக மாகுந்
தெளிவாக யாசானைத்தேடா வண்ணஞ்
திகழ்பெறவே ரகசியத்தைக் விளக்கிக் காட்டி
அளவாக யிதிற்கூறு மர்மமான
யரும்பலனைச் சொல்லலுற்றே னறியத்தானே.

## 12. ஆக்கியோன் பெயர்

இஃது இந்நூலாசிரியருடைய உபதேச மூர்த்தியும் திருப்போரூர் ஸ்ரீமத் மௌன சுவாமிகள் மடாலய அதிபரான ஸ்ரீமத் சம்பந்தமூர்த்தி சுவாமிகள் இயற்றியது.

---

கடல்சூழ்ந்த புவியில்வாழ் மானிடர்கள் சிற்பபலன்
காணுதற்குநன்மை தீமைக் கனிவுகூர்ந்து
திடமுடனே பற்பலனூலை ஆராய்ந்து வேண்டியதைப்
பனுவலாய்ச் சேர்த்தெடுத்து செய்துவைத்தோன்
படிமிசையில் திருப்போரூ ரதனில்வளர் வீரசைவ
பார்த்தனிட தவச்சுதனுய்ப் பாரில்வந்தோன்
நெடிய புகழ்பெரும் கணேசமூர்த்தி பேர்
சிற்பத்தை ஆய்ந்தெடுத்த நிபுணன்ருனே.

## 13. சிற்பாச்சாரி லக்ஷணம்

என்னயுக தருமமிது கலியினில்லா
தின்பமிகு நான்காய ஜாதிகொள்வர்
பன்னறிய சிற்பனூன் விவேகமுள்ளார்
பத்தியுயர் சிந்தனையறத்தின் மிக்கார்
நன்னடைய ராசாரமுள்ளார் னூலோர்
நயமான வாக்குளர்தாஞ் சிற்பர்கண்டாய்
சொன்னவிவர் யாலயாதி கோவினல்ல
சுகமான வாழ்ண்டு ஜகமுங்கொள்வார்.

(காக்கையர் சிற்பம்)

## 14. சிற்பாச்சாரியும் அவனுடைய சிறப்பும்

சில்பிமாதாசிலா புத்திரா
தாசத்வம் சர்வ பூஜித
சில்பினம் கல்பித்தம் தெய்வம்
சில்பி பிரம்ம மயம்ஜெகத்

(மய சிற்பம்)

## 15. சிற்ப முறையுடனும் முறை தவறியும் செய்பவர்கள் அடையும் பயன்

சாற்ருேணப் பஞ்சாங்க முகூர்த்தங் கண்டே
சரியான யாலயத்தி ஞேக்கம் பார்த்து
ஏற்றமிலாக் குற்றங்க ணீக்கிநல்ல
வியல்பான நகராதி கிரகமீருய்
மாற்ருென்ருப் பொறுத்தமொடு நிமித்தங்கண்டு
வகுத்ததோர் சிற்பனவ னிந்திரன்போல்
யேற்றதோர் வாழ்வுளஞ மஃதேயில்லா
னிடிவீழ்ந்த மரம்போலே குடியும்பாழாம்

(காக்கையர் சிற்பம்)

## 16. சிற்பமுறை தவறிய கர்த்தனும் அடையும் பயனும்

ஆலயம் அமைக்கும் கர்த்தன் அறிவுள்ள சிற்பன் அல்லா
வேலையனுலே செய்விப்பின் வேதனை பலவும் சூழ
நீல்புவி தன்னின் நீண்டு நிறையங்கள் பலவும் யெய்தி
சாலவே துயருற்று சூழ்வன் சற்குரு சாபமீதே,

## 17. சிற்பன் மகிழ செய்யும் நட்பு

நல்லதோர் சிற்பனுக்கு நட்பொடு இடங் கோலுங்கால்
சொல்லு பூந்துகிலும் பொன்னும் சுமங்கலப் பொருளு மீந்து
வல்லவை வரைந்து கேட்டு வளம்பெற முடிவுங் கொண்டால்
செல்வமாம் மயன் சொன்ன சிற்பநூல் பலிக்குந்தானே.

# 18. ஆலய இட அமைப்பும் அதன்பெயரும்

## ஸ்ரீ அப்பர் சுவாமிகள் தேவாரம்

பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்
பெருங்கோயில் லெழுபதினெட்டு மற்றுங்
கரக்கோயில் கடிபொழில்சூழ் ஞாழற்கோயில்
கருப்பறியல் பொருப்பனைய கொகுடிகோயில்
இருக்கோதி மறையவர்கள் வழிப்பட்டெத்தும்
இளங்கோயில் மணிக்கோயில் ஆலக்கோயில்
திருக்கோயில் சிவனுறையுங்கோயில் சூழ்ந்து
தாழ்ந்திறைஞ் சத்தீவினைகள் தீரும்அன்றே.

-: இதன் பொருள் :-.

I குன்றுமேல் எடுப்பிக்கப்பட்ட கோயிலும் யானை படுக்கும் முதுகு மட்டத்துக்குமேல் உயரமாக கட்டப்பட்ட பெரிய கோயில்களுக்கும் பெருங்கோயில், மாடக்கோயில், மலை மல்கு கோயில், திருமலைக்கோயில், தூங்கானை மாடக் கோயில் என பல பெயர்கள் பெறும்.

II குன்றின்மேல் கோயில் கட்டப்பட்டிருந்து கீழ்புறம் ஊரில் அமைந்த கோயிலுக்கு தாழக்கோயில் எனப் பெயர் பெறும்.

III தேர் வடிவமாக சக்கரங்களோடு அமைக்கப்பெற்ற கொயி லுக்கு கரக்கோயில் என்று பெயர் பெறும்.

IV மரத்தடியில் அமைக்கப்பட்ட கோயிலுக்கு ஞாழர் கோயில் என்று பெயர் பெறும்.

V முல்லை கொடியுள்ள இடங்களில் அமைக்கப்பட்ட கோயி லுக்கு கொகுடிக் கோயில் என்று பெயர் பெறும்.

VI ஆலமரத்தடியில் அமைக்கப்பட்ட கோயிலுக்கு ஆலக் கோயில் என்று பெயர் பெறும்.

VII ஆழ்வார்களால் பாடப்பெற்ற கோயிலுக்கு மணிக்கோயில் மாமணிக் கோயில் என்று பெயர் பெறும்.

VIII கிருமத்தின் மத்தியில் சிவன் கோயிலும், கிருமம் சுற்றிலும் சிறு சிறு கோயிலும் அமைந்து இருந்தால் சிவன் கோயி லுக்கு ஸ்ரீ கோயில் என்றும் மற்ற சிறு கோயில்களுக்கு திருமுற்றம் என்று பெயர் பெறும்.

## 19. கோபுர கட்டட அமைப்பும் அதன் பெயரும்

ஏக தள விமானம் அல்லது விமானத்தின் மேல் நிலை, கழுத் தடியிலிருந்து பண்டிகை மகாபத்மம் வரையில்.

I வட்டமாய் இருக்கும் கோபுரங்களுக்கு விருத்த விமானம்.

II சதுரமாய் இருக்கும் கோபுரங்களுக்கு சதுரஷ விமானம்.

III ஆறு பட்டையாய் இருக்கும் கோபுரங்களுக்கு சட்கோண விமானம்.

IV எட்டு பட்டையாய் இருக்கும் கோபுரங்களுக்கு அஷ்ட கோண விமானம்.

V எதிர்புறம் மரமாடி போலும், இரண்டு மூலையாய் பின்னால் யானை முதுகு போலும் இருக்கும் கோபுரங்களுக்கு கெஜப் பிரஷ்ட விமானம். தூங்கானை மாட விமானம் அத்தி புஷ்ட விமானம் என்றுபெயர்,

VI இரண்டு பக்கம் மர மாடியும், ஒன்றுக்கு மேல்பட்ட கலசங் கள் இருக்கும் கோபுரங்களுக்கு சத்தி நிளம். மகா துவார கோபுரம். இராஜ கோபுரம் என்று பெயர்.

## 20. கோபுர கட்டட அளவும் அதற்குறிய பெயரும்

I அகலம் கொண்ட அளவு உயரம் வைத்துக் கட்டிய கோபுரத்துக்கு யேகபூமம் (ஏகதள விமானம்) என்று பெயர்.

II அகலம் 7 பங்கு செய்து உயரம் 10 பங்கு வைத்து கட்டிய கோபுரத்துக்கு சாந்தீக விமானம் என்று பெயர்.

III அகலம் 1 பங்கு உயரம் $1\frac{1}{2}$ பங்கு வைத்து கட்டிய கோபுரத்துக்கு பவுஷ்டீக விமானம் என்று பெயர்.

IV அகலம் 1 பங்கு உயரம் $1\frac{3}{4}$ பங்கு வைத்து கட்டிய கோபுரத்துக்கு செய்ங்கள விமானம் என்று பெயர்.

V அகலம் 1 பங்கு உயரம் 2 பங்கு வைத்து கட்டிய கோபுரத்துக்கு அற்புத விமானம் என்று பெயர்.

## 21. திருவுருவம் நிர்மாணம் செய்யும் முறை

கர்த்தாவானவர் சிற்ப சாஸ்திரியை அழைத்து தேவாலயம் கட்டவேண்டும் என்று வினவிடில் சில்பியானவன் கட்ட வேண்டிய இடத்தைக் கூர்ந்து கவனித்து இடவசதிக்குத் தக்க வாறு ஆலயம் செய்தல் வேண்டும். அதாவது:

1. கிராமப் பெயர்.
2. சுவாமியின் திருவுருவப் பெயர்.
3. கர்த்தர் பெயர். (கோயில் கட்ட முன்வந்தவர்)

இந்தப் பெயர் எழுத்துக்குள்ள நாமநட்சத்திரத்தை குறித்துக்கொண்டு பிறகு திருவுருவம் நிர்ணயம் செய்ய வேண்டும்.

விபரம் :—தேவாங்குலத்தில் ஒற்றை நெம்பருள்ளனவாகக் கொண்டு கீழ்க்கண்டபடி பஞ்சவிம்சம் (25) பொருத்தங்கள் பார்த்து நல்ல பொருத்தம் உள்ளவையாகக் குறித்து அதில் வரும் நட்சத்திரத்திற்கும் மேலே குறிப்பிட்டவர்கள் நட்சத்திரத் திற்கும் தாராபலன், சந்திரபலன் உள்ள பொருத்தம் நன்றாக இருக்கிறதா என்று பார்த்துக்கொள்ளவேண்டும். இந்தப்படி பொருத்தம் பார்த்து நன்றாக இருக்கும் அளவுபடி திருவுருவம் செய்து பிரதிஷ்டை செய்தால் நாளுக்குநாள் ஆலய விருத்தியும் வழிபடும் கிராம மக்களும் கர்த்தரும் அஷ்ட ஐஸ்வரியங்களுடன் சௌக்கியமாக வாழ்வார்கள். ஷை பொருத்தங்கள் திருவுருவத் திற்கு இல்லாவிட்டால் அந்த இடத்தில் மூர்த்தி தத்வம் குறைவு பட்டு பலரும் கவனிப்பில்லாமல் இருக்கும். கர்த்தருக்கு இல்லா விட்டால் ஆலயம் புதுப்பித்ததும் கர்த்தருக்கு (எஜமானருக்கு) பலவித கஷ்டங்களும் சுகமின்மையும். அகால முர்த்திப்பும், கிராமத்திற்கு இல்லாவிட்டால் கிராம க்ஷேமம் குறைந்து மக்கள் கஷ்டத்திற்கு ஆளாவார்கள். ஆதலால், சிற்பி ஆனவன் இவைகளைக் கவனித்து பொருப்புடன் செய்யவேண்டும்.

## 22. பஞ்சவிம்ச பொருத்தங்களும், பார்க்கும் விபரமும்

### I. கெற்பப் பலன்

ஆயத்தை (திருவுருவத்தின் உயர அளவை) 8ல் வகுக்க வரு மிச்சம், கெற்பம். மிச்சம் வராமல்போனால் 8 யையே வைத்துக் கொள்ள வேண்டியது மீதி.

1வது கெருடகெற்பம் திசை கிழக்கு தெய்வம் இந்திரன், மிகுந்த சுபம், நான்குவகை ஜாதியர்களுக்கும் பொருத்தமாய் இருக்கும்.

2வது புரு கெற்பம் திசை தென்கிழக்கு தெய்வம், அக்கினி மத்திபம், வறுமையும், தனநஷ்டமும், அக்கினிபயமு முண்டாகும்

3-வது சிம்ம கெற்பம், திசை தெற்கு, தெய்வம், எமன் மிகுந்த ஜெயமுண்டாம். இஃது வேடர்களுக்காகும் என்பாரும் முளர்.

4-வது ஸ்வான கெற்பம், திசை தென்மேற்கு. தெய்வம் நிருதி, வறுமை மத்திபம் இஃது குறவர்களுக்காகும் என்பாரு முளர்.

5-வது சர்ப்ப கெற்பம், திசை மேற்கு, தெய்வம் வருணன் தனவானுய் சுகத்துடன் வாழ்வார் அரசு சகல காரியங்களும் ஜெயமாகும்.

6-வது காக்கை கெற்பம், திசை வடமேற்கு, தெய்வம் வாயு வறுமை, இது நீச்சர்களுக்காகும் என்பாருமுளர்.

7-வது கெஜ கெற்பம், திசை வடக்கு தெய்வம் குபேரன் குபேர சம்பத்துண்டாகும்.

8-வது கழுதை கெற்பம், திசை வடகிழக்கு தெய்வம் ஈசானியன். எவர்களுக்கும் ஆகாது வறுமை, மனையும்' சீக்கிரத்தில் முடியாது.

## II. ஆதாய பலன்

ஆயத்தை 8-ல் பெருக்கி 12-ல் வகுக்க வருமிச்சம் ஆதாயம்

ஆதாயம் 1-க்கு சுபம் விசேஷ பலன்.

,, 2-க்கு தனபாக்கியமுண்டாம்.

,, 3-க்கு பாக்ய விருத்தி, சௌக்கியமுண்டு.

,, 4-க்கு கீர்த்தி சகல சௌக்யமுண்டாம்.

,, 5-க்கு புத்திரர் அற்பம் மத்திபம்.

,, 6-க்கு வசியம், மத்திமம்.

,, 7-க்கு சுகம், ஞானம் உண்டாகும்.

,, 8-க்கு ஞானம், சுபம் சந்தோஷமுண்டாம்.

,, 9-க்கு தானியம், மிகுந்த யோகமுண்டு.

,, 10-க்கு செல்வம், சுபம் உண்டாகும்.

,, 11-க்கு வீரியம், தரும சிந்தையும் உண்டு.

,, 12-க்கு சம்பத்து உத்தமம்.

## III. விரைய பலன்

ஆயத்தை 9-ல் பெருக்கி 10-ல் வகுக்க வருமிச்சம் விரையம்

விரையம் 1-க்கு வறுமை, சகலமும் குன்றிப்போகும்.

,, 2-க்கு தீது, வீடு தீப்படும், பயமுண்டாம்.

,, 3-க்கு செல்வம், மிகுந்த சுபமுண்டாம்.

,, 4-க்கு யோகம் மத்திமம்.

,, 5-க்கு செலவு, மிகுந்த சுபம், வீண் செலவு.

,, 6-க்கு சுபம் மத்திமம் என்பாருமுளர்.

,, 7-க்கு செலவு மிகுந்த சுபகரம்.

,, 8-க்கு தனலக்ஷிமி வாசம், பிணி முதலாகியதுண்டு.

,, 9-க்கு நாசம், மத்திமம்.

,, 10-க்கு சம்பத்து, மரண பயம் உண்டாகும்.

## IV. யோனிப் பலன்

ஆயத்தை 3-ல் பெருக்கி 8-ல் வகுக்க வருமிச்சம் யோனி.

1-வது கிழக்கு கெருட யோனி (அல்லது) துஜயோனி மனைவி மக்களால் குடும்ப விர்த்தியும் பாக்கியமுமுண்டாம்.

2-வது தென்கிழக்கு பூனை யோனி மிகுந்த வறுமையும் களவு வியாகூலம் முதலியவை உண்டாகும்.

3-வது தெற்கு சிம்மயோனி தனயோக போகபாக்யங்கள் உண்டாகும்.

4-வது தென்மேற்கு சுவானயோனி (அல்லது) நாய் யோனி பிணி கலக முதலியவை உண்டாகும்.

5-வது மேற்கு சர்ப யோனி லக்ஷ்மி கடாட்சம் தன பூ லாபம் முதலியவை உண்டாகும்.

6-வது வடமேற்கு எலியோனி (அல்லது) காக்கையோனி குடும்ப கலகமும், பொருள் நஷ்டமும் தரித்திரமும் உண்டாகும்.

7-வது வடக்கு கெஜயோனி கீர்த்தி ஞானயோகம் பாக்கிய முண்டாம்.

8-வது வடகிழக்கு காகயோனி (அல்லது) கழுதை யோனி (அல்லது) முயல் யோனி தரித்திரம் ஜாதி பிரஷ்டத்துவம், பிணியுண்டாம்.

## V. வாரப் பலன்

ஆயத்தை 9-ல் பெருக்கி 7-ல் வகுக்க வரு மிச்சம் வாரம்.

1-வது ஆதிவாரம் குரோதமுண்டாம். மத்திமம் ஆனாலும் பிதுராஜித சொத்தை விருத்தி செய்யும் என்பாருமுளர்.

2 வது சோமவாரம் நாளுக்கு நாள் மிகுந்த நலமுண்டாகும்

3 வது மங்களவாரம் தன நஷ்டமும் துக்கமுமுண்டாகும்.

4 வது புதவாரம் மிகுந்த லக்ஷ்மிகரமுண்டாகும்.

5 வது குருவாரம் புத்திர பாக்கியம் தன சம்பத்துண்டாகும்.

6 வது சுக்கிரவாரம் சகல காரிய நலமுண்டு.

7 வது சனிவாரம் சோரபயம் துக்கமுண்டாகும்.

## VI. திதி பலன்.

ஆயத்தை 4ல் பெருக்கி 30ல் வகுக்க வருமிச்சம் திதி வாஸ்து புருஷன் வலக்கரமாகிய பூர்வபக்ஷம் உத்தமம். இடக்கரமாகிய அமரபக்ஷம் மத்திமம் ஆனால் இவ்விரண்டும் பக்ஷங்களிலும்,

1 வது பிரதமை உத்தமத்தில் மத்திமபலன் (அதாவது) சௌக்கியத்தில் கவலை தரும் என்பதாம்.

2 வது துதியை இன்பமுண்டு.

3 வது திருதியை ஜெயமுண்டாகும்.

4 வது சதுர்த்தி மத்திமபலன் அதிக துன்பமுண்டு.

5 வது பஞ்சமி நன்மை புத்திர சம்பத்துண்டாகும்.

6 வது சஷ்டி மத்திமம்.

7 வது சப்தமி யோக பாக்கியமும் சுகமுமுண்டாகும்.

8 வது அஷ்டமி அதிக துன்பமும் கவலை தரும். ஆனால் பூர்வபட்சமாயின் சுபபலனைத் தரும் என்பாருமுளர்.

9 வது நவமி மனையில் தீபமில்லாமல் அதிக துன்பம் தரும்.

10 வது தசமி பாக்கியமும் நன்மையுமுண்டாகும்.

11 வது ஏகாதசி சிறுமை மத்திமம்.

12 வதுதுவாதசி செல்வம் கல்வி முதலாகியதுமுண்டாகும்.

13 வது திரியோதசி கல்வி முதலாகிய சம்பத்துண்டு.

14 வது சதுர்த்தசி மனை பாழாம் துன்பமுண்டாகும்.

15 வது பூரணை எல்லாம் உத்தமமாயிருக்கும் (அல்லது) அம்மாவசை அதிக துன்பமும் கவலையுந்தரும்.

## VII நட்சத்திரப் பலன்.

ஆயத்தை 8ல் பெருக்கி 27ல் வகுக்க வருமிச்சம் நட்சத்திரம்

1 வது அசுவனி, எல்லாம் வசியமாகும் வெற்றியுண்டாம்.

2 வது பரணி; கிரகம் பூர்த்தியாகா முன் தலைவன் மறிப்பன் பேய் பூதம் வசிக்கும் வறுமையுண்டாகும்.

3-வது கிருத்திகை, வீட்டுக்கு அக்கினிபயம் வறுமையுண்டாம்.

4-வது ரோகினி, ஜெயம் உண்டாம் உத்தமம்.

5-வது மிருகசீரிஷம், மிகுந்த ஜெயமுண்டாம்.

6-வது திருவாதிரை, சௌக்கியப் பலன் இருந்தாலும் மத்திமம்.

7-வது புனர்பூசம், புத்திரபாக்கியம் செல்வமுண்டாகும்.

8-வது பூசம், சந்ததி, சௌக்கிய விருத்தியுண்டாகும்.

9-வது ஆயில்யம், 10-வது மகம், 11-வது பூரம் } சௌக்கிய குறைவும் மரணவஸ்தையும் பேய் பூதம் வாசமும் பெருமை சுத்தமும் நீங்கும்

12-வது உத்திரம், 13-வது அஸ்தம் } நாளுக்கு நாள் மிகுந்த நலமுண்டாகும்

14-வது சித்திரை, பிணி முதலியவையுண்டாகும்.

15-வது சுவாதி, மிகுந்த சுகமுண்டு ஆனாலும் அதிக சிரமம்

16-வது விசாகம், துன்பமாகிய சஷ்டாஷ்டகம் உண்டாகும்.

17-வது அனுஷம், சகலசௌக்கியமும் கல்வியுமுண்டாகும்

18-வது கேட்டை, 19-வது மூலம், 20-வது பூராடம், — பகைபிணி குடும்ப விரோதம் இல்லம் பாழாம், பேய் பூதம் வாசம் செய்யும் ஆகிலும் மூலம் உத்தமம்என்பாருமுளர்

21-வது உத்திராடம், சுபகரமுண்டாகும்.

22-வது திருவோணம், சௌக்கிய முண்டாகும்,

23-வது அவிட்டம், சுபபலனும் நடக்கும்.

24-வது சதயம், லக்ஷ்மி வாச முண்டாகும்-

25-வது பூரட்டாதி, செல்வம் சுத்தம் நீங்கும்.

26-வது உத்திராட்டாதி, யோக பாக்கியங்களும் மிகுந்த சுபகரமுண்டாகும்.

27-வது ரேவதி, வசிப்பவர்களுக்கு எந்நாளும் பிணி.

## VIII ஸ்திரீ இராசிப் பலன்.

ஆயத்தை 4ல் பெருக்கி 12ல் வகுக்க வருமிச்சம் ஸ்திரீ. இராசியாம்.

1-வது மேஷம், குடும்ப விருத்தியானாலும் பல பிணியுண்டு

2-வது ரிஷபம், பெருமையும் புண்ணிய விருத்தியுமுண்டு.

3-வது மிதுனம், தன தான்யமுண்டாயினும் மத்திமபலனும் நடக்கும்.

4-வது கடகம், சுபம், ஜெயம், பூர்ண ஆயுள் உண்டாகும்.

5-வது சிம்மம் வசிகரம், செல்வம் இவைகளுண்டாகும்.

6-வது கன்னி ஞானம், ஆயுள் விருத்தியுண்டாகும்.

7-வது துலாம் போக பாக்கியம், செல்வமுண்டாகும்.

8-வது விருச்சிகம் சகல நன்மையும், ஒன்றுக்கொன்று பொருந்தாமல் நடக்கும்.

9-வது தனுசு சுபகாரம் செல்வம் சமமாய் நடக்கும்.

10-வது மரகம் நாளுக்கு நாள் பொருளும், சௌக்கியமும், புத்திரவிருத்தியு முண்டாகும்.

11-வது கும்பம் செல்வம், துன்பம், இரண்டும் சமமாய் நடக்கும்.

12-வது மீனம் ஜெயமுண்டு தாமதமாய் நடக்கும்.

## IX புருஷ இராசிப் பலன்.

ஆயத்தை 7ல் பெருக்கி 12ல் வகுக்க வருமிச்சம் புருஷ இராசியாம்.

| | |
|---|---|
| 2 ரிஷபம்<br>5 சிம்மம்<br>8 விருச்சிகம்<br>11 கும்பம் | இந்நான்கும் ஸ்திர இராசிகள் துன்பம் தரும் மத்திமபலனாய் நடக்கும். |
| 3 மிதுனம்<br>6 கன்னி<br>9 தனுசு<br>12 மீனம் | இந்நான்கும் உபய இராசிகள் உத்தம பலனாய் நடக்கும். |
| 1 மேஷம்<br>4 கடகம்<br>7 துலாம்<br>10 மகரம் | இந்நான்கும் சர இராசிகள் உத்தம பலனாய் நடக்கும். |

## X யோகப் பலன்.

ஆயத்தை 4-ல் பெருக்கி 27-ல் வகுக்க வருமிச்சம் யோகம்

1-வது விஷ்கம்பம். அசுபம் தீதாம்.

| | |
|---|---|
| 2-வது பிரீதி<br>3-வது ஆயுஷ்மான்<br>4-வது சௌபாக்கியம்<br>5-வது சோபனம் | இந்நான்கும் தன லாப சுப யோகங்கள் உத்தமம் |
| 6-வது அதிகண்டம். | அசுபம் தீதாம். |
| 7-வது சுகர்மம்<br>8-வது திருதி | இந்த இரண்டும் சுபயோகங்கள் உத்தமம் |
| 9-வது சூலம்<br>10-வது கண்டம் | இந்த இரண்டும் அசுபயோகங்கள் மத்திமம். |
| 11-வது விருத்தி<br>12-வது துருவம் | இந்த இரண்டும் சுபயோகங்கள் உத்தமம். |

13-வது வியகாதம், அசுபம் தீதாம்.

14-வது அரிஷணம், தனலாபம்.

15-வது வஜ்ஜிரம், அசுபம் தீதாம்.

16-வது சித்தி, தனலாபம் உத்தமம்.

17-வது விதிபாதம், தீதாம்.

18-வது வரியான், உத்தமம்.

19-வது பரீகம் தீது மத்திமம்.

| | |
|---|---|
| 20-வது சிவம்<br>21-வது சித்தம்<br>22-வது சாத்தியம்<br>23-வது சுபம்<br>24-வது சுப்பிரமம்<br>25-வது பிரமம்<br>26-வது ஐந்திரம் | இவை ஏழும் சுபயோகங்கள் தனலாப போக பாக்கியங்கள் உண்டாகும். |

27-வது வைதிருதி அசுபம் தீது.

## XI கரணப் பலன்

ஆயத்தை 5ல் பெருக்கி 11ல் வகுக்க வருமிச்சம் கரணம்

| | |
|---|---|
| 1-வது பாவம்<br>2-வது பாலவம்<br>3-வது கௌலவம் | இவை ஆறும் நன்மை உண்டாகும் |
| 4-வது தைதுலே<br>5-வது கரசை<br>6-வது வணசை | உத்தமம். |
| 7-வது பத்திரை<br>8-வது சகுனி<br>9-வது சதுஷ்பாதம்<br>10-வது நாகவம்<br>11-வது கிமஸ்துக்கினம் | இவை ஐந்தும் தீது அதமம். |

## XII. அம்ஸப் பலன்

ஆயத்தை 4ல் பெருக்கி 9ல் வகுக்க வருமிச்சம் அம்ஸம்.

1-வது தஸ்கார அம்ஸம் மகிமை உண்டாகும்.

2-வது புத்தியம்ஸம் நன்மை உண்டாகும்.

3-வது சத்தி அம்ஸம் செல்வமுண்டாகும்.

4-வது புஷ்கராம்ஸம் தான்யவிருத்தியுண்டாகும்.

5-வது இராஜாம்ஸம் க்ஷேமமுண்டாகும்.

6-வது யோகராம்ஸம் யோகமுண்டாகும்.

7-வது சனியாம்ஸம் நோய்உண்டாகும்,

8-வது தரித்திராம்ஸம் நாசம் உண்டாகும்.

9.வது சுகராம்ஸம் தனவிருத்திஉண்டாகும்.

## XIII. வம்ஸப் பலன்

ஆயத்தை 9-ல் பெருக்கி 4-ல் வகுக்க வருமிச்சம் வம்ஸம்.

1-வது பிராமணவம்ஸம், சுபகரமுண்டாகும் நான்கு வருணத் தாருக்கும் உத்தமம்.

2-வது க்ஷத்திரிய வம்ஸம், ஜெயம் வெற்றியுண்டாகும்.

3-வது வைசிய வம்ஸம், தனம் செல்வ முதலியவை யுண்டாகும்.

4-வது சூத்திர வம்ஸம், மத்திம பலனுண்டாகும்.

## XIV. வயதின் பலன்

ஆயத்தை 27-ல் பெருக்கி 100-ல் வகுக்க வருமிச்சம் வயதாம். வயது 1 முதல் 27 வரையில் சுபமில்லை. அதம பலன் என்றும்,

28 முதல் 50 வரையில் மத்திம பலன் என்றும்,

51 முதல் 100 வரையில் உத்தம பலன் என்றும் சிற்பநூல் கூறுவது ஆதலால் எல்லாப் பொருத்தங்களும் நன்ருய் இருந்தால் 27-க்குமேல் உத்தமம் என்று நூல்கள் கூறுகிறது.

நகரம் கோவில் இவைகளுக்கு வயது 1-க்கு 10 ஆகவும் கல்வீடு தடாகம் கூபம் இவைகளுக்கு வயது 1-க்கு 3 ஆகவும் கூரைவீடு முதலியவைக்கு வயது 1-க்கு 1 ஆகவும் கொள்க.

## XV. பூதப் பலன்

ஆயத்தை 3-ல் பெருக்கி 5-ல் வகுக்க வருமிச்சம் பூதம்.

1-வது பிரிதியுபூதம், செல்வம் உண்டாகும்.

2-வது அப்புபூதம், சந்தோஷம் உண்டாகும்.

3-வது தேயுபூதம், மரணபயம் உண்டாகும்.

4-வது வாயுபூதம், ஆதாயமுண்டாகும்..

5-வது ஆகாயபூதம், செலவு உண்டாகும்.

## XVI. நேத்திரப் பலன்

ஆதிவாரம் முதல் மனையின் வாரம் வரையில் எண்ணி வந்த தொகையை 3-ல் பெருக்கி அந்த தொகையை அசுவனி முதல் எண்ணித் தள்ளியபின் அப்பால் நட்சத்திரம் ஒன்பதும் ஒற்றைக் கண்கள் மேல் நட்சத்திரம் 12-ம் இரட்டைக் கண்கள் இவற்றிற்கு மேல் 6-ம் குருடு எனப்படும். விபரம் அட்டவணையில் பார்க்க.

2 கண்கள் உத்தமம்.

1 கண் மத்திமம்.

நேத்திரம் இல்லாது அதமமானது. அது கூடாது.

## XVII. சூஸ்திரப் பலன்

ஆயத்தை 7-ல் பெருக்கி 5-ல் வகுக்க வருமிச்சம் சூஸ்திரம்.

1-வது பாலசூஸ்திரம், உத்தமம்.

2-வது யௌவன சூஸ்திரம், சுபகரம்.

3-வது கௌமார சூஸ்திரம், நன்மை.

4-வது விருத்த சூஸ்திரம், பீடை.

5-வது மரண சூஸ்திரம், மரணபயம்.

## XVIII. கணப் பலன்

மனையின் நட்சத்திரத்திற்குறிய எந்தக்கணமோ அதுவே மனையின் கணமுமாகும்.

## மனையின் நட்சத்திரம்

| | | |
|---|---|---|
| அசுவனி | ஆயின் | தேவகணம் |
| பரணி | ஆயின் | மனிதகணம் |
| கிருத்திகை | ஆயின் | ராக்ஷஸகணம் |
| ரோகணி | ஆயின் | மனிதகணம் |
| மிருகசீரிஷம் | ஆயின் | தேவகணம் |
| திருவாதிரை | ஆயின் | மனிதகணம் |
| புனர்பூசம் | ஆயின் | தேவகணம் |
| பூசம் | ஆயின் | தேவகணம் |
| ஆயிலியம் | ஆயின் | ராக்ஷஸகணம் |
| மகம் | ஆயின் | ராக்ஷஸகணம் |
| பூரம் | ஆயின் | மனிதகணம் |
| உத்திரம் | ஆயின் | மனிதகணம் |
| அஸ்தம் | ஆயின் | தேவகணம் |
| சித்திரை | ஆயின் | ராக்ஷஸகணம் |
| சுவாதி | ஆயின் | தேவகணம் |
| விசாகம் | ஆயின் | ராக்ஷஸகணம் |
| அனுஷம் | ஆயின் | தேவகணம் |
| கேட்டை | ஆயின் | ராக்ஷஸகணம் |
| மூலம் | ஆயின் | ராக்ஷஸகணம் |
| பூராடம் | ஆயின் | மனிதகணம் |
| உத்திராடம் | ஆயின் | மனிதகணம் |
| திருவோணம் | ஆயின் | தேவகணம் |
| அவிட்டம் | ஆயின் | ராக்ஷஸகணம் |
| சதயம் | ஆயின் | ராக்ஷஸகணம் |
| பூரட்டாதி | ஆயின் | மனிதகணம் |
| உத்திரட்டாதி | ஆயின் | மனிதகணம் |
| ரேவதி | ஆயின் | தேவகணம் |

தலைவன் (அல்லது) எஜமானன் கணமும் கிரகம் (அல்லது) திருவுருவம் கணமும் ஒன்ருகில் நலம் உண்டாகும்.

தேவகணமும் மனிதகணமும் வந்தால் உத்தம பலன்.

ராக்ஷஸ கணமும் மனிதகணமும் வந்தால் மகிமை யுண்டாகும்.

ராக்ஷஸ கணமும் தேவகணமும் வந்தால் பகையும் சத்துருக்களால் எக்காலத்திலும் கஷ்டமும் ஏற்படும்.

## XIX. அமிர்தாதியோகப் பலன்.

மனையின் வரர நட்சத்திர சம்பந்தத்தா லுண்டாகுவது அமிர்தாதியோகங்கள்.

| நட்சத்திரம். | ஞாயிறு | திங்கள் | செவ்வாய் | புதன் | வியாழன் | வெள்ளி | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| அசுவனி | சி | சி | சி | ம | அ | அ | சி |
| பரணி | பி | சி | சி | சி | சி | சி | சி |
| கிருத்திகை | சி | ம | சி | அ | ம | சி | அ |
| ரோகணி | சி | அ | அ | சி | உ | ம | அ |
| மிருகசீரிஷம் | சி | அ | சி | சி | ம | சி | சி |
| திருவாதிரை | சி | சி | ம | சி | ம | சி | சி |
| புனர்பூசம் | சி | அ | சி | சி | அ | சி | சி |
| பூசம் | சி | சி | சி | சி | அ | உ | சி |
| ஆயிலியம் | சி | சி | சி | சி | சி | ம | ம |
| மகம் | ம | ம | சி | சி | அ | ம | அ |
| பூரம் | கி | சி | சி | அ | சி | சி | சி |
| உத்திரம் | அ | சி | அ | அ | ம | சி | உ |
| அஸ்தம் | அ | சி | சி | ம | சி | அ | ம |
| சித்திரை | சி | பி | சி | சி | சி | சி | ம |
| சுவாதி | சி | அ | சி | சி | அ | சி | அ |
| விசாகம் | உ | ம | ம | சி | சி | சி | சி |
| அனுஷம் | ம | சி | சி | அ | சி | சி | சி |
| கேட்டை | ம | சி | உ | சி | பி | ம | சி |
| மூலம் | அ | சி | அ | ம | சி | அ | சி |
| பூராடம் | சி | உ | சி | அ | சி | பி | சி |
| உத்திராடம் | அ | ம | பி | அ | சி | சி | சி |
| திருவோணம் | அ | அ | சி | சி | சி | ம | சி |
| அவிட்டம் | ம | சி | சி | பி | சி | சி | சி |
| சதயம் | கி | சி | ம | சி | ம | சி | அ |
| பூரட்டாதி | கி | சி | ம | சி | ம | சி | அ |
| உத்திரட்டாதி | அ | சி | அ | சி | சி | சி | சி |
| ரேவதி | அ | சி | சி | உ | சி | அ | பி |

| | |
|---|---|
| அ. அமிர்தயோகம்<br>சி. சித்தயோகம் | இவ்விரண்டும் உத்தமமான யோகங்கள் சுபகரமுண்டு. |
| உ. உத்பாதயோகம்<br>பி. பிரபலா நிஷ்டையோகம் | இவ்விரண்டும் மத்திமமான யோகங்கள், |

ம. மரணயோகம், இது அதமமானயோகம்.

## XX. பஞ்சகப் பலன்

மனைக்கு வந்த வாரம் திதி நட்சத்திரம் இராசி இவற்றின் தொகைகளைக் கூட்டி 9-ல் வகுக்க வருமிச்சம் பஞ்சகம்.

1-வது மரண பஞ்சகம். ஆகாது அதமம்.

2-வது அக்கினி பஞ்சகம். ஆகாது அதமம்.

3-வது நிஷ்பஞ்சகம். உத்தமம் சுபம்.

4-வது இராஜ பஞ்சகம். ஆகாது அதமம்.

5-வது நிஷ்பஞ்சகம். உத்தமம் சுபம்.

6-வது சோர பஞ்சகம். ஆகாது அதமம்.

7-வது நிஷ்பஞ்சகம். உத்தமம் சுபம்.

8-வது ரோக பஞ்சகம். ஆகாது அதமம்.

9-வது நிஷ்பஞ்சகம். உத்தமம் சுபம்.

சகல பொருத்தங்கள் இருந்து பஞ்சக பொருந்தங்கள் இல்லாவிட்டால் ஷை கெட்ட பஞ்சகங்களுக்கு ஆலயம் முகூர்த்தம் செய்யும் காலங்களில், அடியில் கண்ட பிரீதி செய்யவும்.

1-வது மரண பஞ்சகம் ரத்தின தானம்.

2-வது அக்கினி பஞ்சகம் சந்தனக் குழம்பு தானம்.

4-வது இராஜ பஞ்சகம் எலுமிச்சம் பழம் தானம்.

6-வது சோர பஞ்சகம் தீபதானம்.

8-வது ரோக பஞ்சகம் தான்னிய தானம்.

## XXI. அஷ்டலக்ஷ்மி பலன்

ஆயத்தை 3-ல் பெருக்கி 8-ல் வகுக்க வருமிச்சம் லக்ஷ்மி

1-வது இராஜலக்ஷ்மி இராஜயோக பலன்.

2-வது கீர்த்திலக்ஷ்மி கீர்த்தி உண்டாகும்.

3-வது தனலக்ஷ்மி தனவரும்படி உண்டாகும்.

4-வது தான்யலக்ஷ்மி தான்யவிருத்தியுண்டாகும்.

5-வது தைரியலக்ஷ்மி தைரியமுண்டாகும்.

6-வது வீரியலக்ஷ்மி சுபம் உண்டாகும்.

7-வது ஜெயலக்ஷ்மி ஜெயம் உண்டாகும்.

8-வது வரலக்ஷ்மி ஞானம் உண்டாகும்.

## XXII. அஷ்டதிக்குபாலகர் பலன்

ஆயத்தை 9-ல் பெருக்கி 8-ல் வகுக்க வருமிச்சம் அஷ்டதிக்கு பாலகர்கள்.

1-வது இந்திரன் போகம் உண்டாகும்.

2-வது அக்கினி வாதை உண்டாகும்.

3-வது எமன் மரணவஸ்தை.

4-வது நிருதி சுகம் உண்டாகும்.

5-வது வருணன் இன்பமுண்டாகும்.

6-வது வாயு தனமுண்டாகும்.

7-வது குபேரன் செல்வமுண்டாகும்.

8-வது ஈசானியன் சந்தோஷமுண்டாகும்.

## XXIII: அதிதேவதைப் பலன்

மனைக்கு வந்த வயதை 5-ல் பெருக்கி 8-ல் வகுக்க வரும் மிச்சம் அதிதேவதை.

1-வது இந்திரன் யோகசித்தியுண்டாகும்.

2-வது அக்கினி அவஸ்த்தையுண்டாகும்.




3-வது எமன் உயிர்ச்சேதமுண்டாகும்.

4-வது நிருதி சுகம் உண்டாகும்.

5-வது வருணன் இன்பசுக முண்டாகும்.

6-வது வாயு தனசம்பத்துண்டாகும்.

7-வது குபேரன் குபேரசம்பத்துண்டாகும்.

8-வது ஈசானியன் சுபசௌக்கியங்களுண்டாகும்.

## XXIV தாரா பலன்

திருவுருவத்தின் நாம நட்சத்திரம் அல்லது திருநட்சத்திரம் முதல், உருவ ஆயத்துக்கு வந்த நட்சத்திரம் வரையில்எண்ணிய தொகையை 9ல் வகுக்க வருமிச்சம் தாரா பலன்

தாராபலன் 1க்கு ஜென்மம், கிலேசமுண்டாகும்.

,, 2க்கு சம்பத்து, சம்பத்துண்டாகும்.

,, 3க்கு விபத்து, விபத்துண்டாகும்.

,, 4க்கு க்ஷேமம், க்ஷேமம் உண்டாகும்.

,, 5க்கு பிரத்தியருக்கு, பிரத்தியருக்கு காரிய நஷ்டமுண்டாகும்.

,, 6க்கு சிநேகம், சிநேகவாஞ்சையுண்டாகும்.

,, 7க்கு வதை, வதையுண்டாகும்.

,, 8க்கு மைத்திரம், சுபமுண்டாகும்.

,, 9க்கு பரமமைத் திரம், சுபசந்தோஷமுண்டு

## XXV சந்திரா பலன்

திருவுருவ நாம நட்சத்திரம் அல்லது திரு நட்சத்திரம் இராசி முதல் உருவ ஆயத்துக்கு வந்த இராசி வரையில் எண்ணிவந்த தொகை சந்திரா பலன்.

சந்திரா பலன் 1க்கு திரேக சௌக்கியம்.

" 2க்கு தன ஆனி சுக்கில பக்ஷம் உத்தமம் என்பாருமுளர்

" 3க்கு திரவியலாபம்.

" 4க்கு ரோகபயம, கிருஷ்ணபக்ஷம் உத்தமம் என்பாருமுளர்

" 5க்கு காரியவிகல்பம். சுக்கிலபக்ஷம் உத்தமம் என்பாருமுளர்.

" 6க்கு சத்துருநாசம்

" 7க்கு சௌக்கிய விருத்தி உண்டாகும்

" 8க்கு ரோகவிருத்தி, கிருஷ்ணபக்ஷம் உத்தமம் என்பாருமுளர்

" 9க்கு காரிய தாமதம், சுக்கிலபக்ஷம் உத்தமம் என்பாருமுளர்

" 10க்கு உத்தியோக விருத்தியுண்டாகும்.

" 11க்கு இஷ்டகன சித்தியாகும்.

" 12க்கு தனவிரயம் கிருஷ்ண பக்ஷம் உத்தமம் என்பாருமுளர்.

முக்கியக் குறிப்பு:—

மேல் காட்டவந்த ஆதாய விரயாதிகளில் பெருக்கி வகுத்ததில் மிச்சம் வராவிட்டால், வகுத்த எண்ணை மிச்சமாகக் கொள்ளவேண்டும்.

---

# நாம நட்சத்திரங்கள்

| நட்சத்திரங்கள் | 1 பாதம். | 2 பாதம். | 3 பாதம். | 4 பாதம். |
|---|---|---|---|---|
| அசுவனி | சு | சே | சோ | ல |
| பரணி | லி | லூ | ல | லோ |
| கிருத்திகை | அ | இ | உ | எ |
| ரோகணி | ஒ | வ | வி | வு |
| மிருகசீரிஷம் | வே | வோ | க | கி |
| திருவாதிரை | கு | க | ங | ச |
| புனர்பூசம் | கே | கோ | ஹ | ஹி |
| பூசம் | ஹீ | ஹே | ஹோ | டா |
| ஆயிலியம் | டி | டு | டே | டோ |
| மகம் | ம | மி | மு | மெ |
| பூரம் | மோ | ட | டி | டு |
| உத்திரம் | டே | டோ | ப | பி |
| அஸ்தம் | பூ | ஷ | ண | ட |
| சித்திரை | பெ | பொ | ர | ரி |
| சுவாதி | ரு | ரே | ரோ | த |
| விசாகம் | தி | து | தே | தோ |
| அனுஷம் | ந | நி | நு | நே |
| கேட்டை | நோ | ய | யி | யு |
| மூலம் | யே | யோ | ப | பி |
| பூராடம் | பூ | த | ப | ட |
| உத்திராடம் | பே | போ | ஜ | ஜி |
| திருவோணம் | ஜீ | ஜே | ஜோ | கா |
| அவிட்டம் | க | கீ | கு | கெ |
| சதயம் | கோ | ஸா | ஸி | ஸு |
| பூரட்டாதி | ஸ | ஸோ | த | தீ |
| உத்திரட்டாதி | து | ஸ்ரீ | ச | ய |
| ரேவதி | தே | தோ | ச | சி |

உதாரணம் :—

1. கிராமப் பெயர் :- தியாகராயநகர் நாமநட்சத்திரம் விசாகம் 1 பாதம்

2. மூர்த்தி பெயர் :-கற்பகவிஞயகர். நாமநட்சத்திரம் மிருகசீரிஷம் 3-பாதம் திருநட்சத்திரம் சித்திரை.

3. கர்த்தா பெயர்:-கோவிந்தராஜன் நாம நட்சத்திரம் புனர்பூசம் 2-பாதம்

இதன்படி குறிப்பிட்டுகொண்டு மனை ஆயாதி என்னும் சிற்ப இரகசியம் முதல் பாகத்தில் கொடுத்துள்ள பஞ்ச விம்ச பொருத்தபடி நெம்பர் 17-க்கு உள்ள பொருத்தத்தை கவனிக்கவும் அல்லது கீழே தரும் கணிதபடி செய்துக்கொள்ளவும்.

நெம்பர் 17-க்கு தேவாங்குலமாக வைத்துக்கொள்ளவும்.

1. அங்குலம் 17-ஐ 8 ல் வகுக்க மீதி 1 கெற்பமாகும். அதன் பலன் :—தெய்வம் இந்திரன் சுப பலன்.

2. அங்குலம் 17 ஐ 8 பெருக்கி 12ல் வகுக்க மீதி 4 ஆதாய மாகும் பலன். பல சௌகரியமும் கீர்த்தியுமுண்டு.

3. அங்குலம் 17 ஐ 9ல் பெருக்கி 10ல் வகுக்க மீதி 3 விரய மாகும் பலன் செல்வம் மிகுந்த சுபமுண்டு.

4. அங்குலம் 17 ஐ 3 ல் பெருக்கி 8ல் வகுக்கமீதி 3 யோனி யாகும் பலன். சிம்மயோனி தனயோகமுண்டு.

5. அங்குலம் 17 ஐ 9ல் பெருக்கி 7ல் வகுக்க மீதி 6 வார மாகும் பலன் சுக்கிரவாரம் சகல காரிய நலமுண்டு.

6. அங்குலம் 17 ஐ 4ல் பெருக்கி 30 ல் வகுக்க மீதி 8 திதி ஆகும் பலன் பூர்வ அஷ்டமி சுப பலனுண்டு.

7. அங்குலம் 17ஐ 8ல் பெருக்கி 27ல் வகுக்க மீதி 1 நட்சத்திரமாகும், பலன் அசுவனி வெற்றியுடன் வசியமாகும்

8. அங்குலம் 17ஐ 7ல் பெருக்கி 12ல் வகுக்க மீதி 11 புருஷ ராசியாகும் கும்பம் பலன் மத்திமபலன்.

9. அங்குலம் 17 ஐ 4ல் பெருக்கி 12ல் வகுக்க மீதி 8 ஸ்திரீ ராசியாகும் பலன். விருச்சிகம் சமபலன்:

10. அங்குலம் 17 ஐ 4ல் பெருக்கி 27ல் வகுக்க மீதி 14 யோகமாகும் பலன் அரிஷணம் தனலாபம்.

11. அங்குலம் 17 ஐ 5ல் பெருக்கி 11ல் வகுக்க மீதி 8 கர்ணமாகும் பலன் சகுனி அதமபலன்

12. அங்குலம் 17 ஐ 4 ல் பெருக்கி 9ல் வகுக்க மீதி 5 அம்சமாகும் பலன் இராஜாம்சம் க்ஷேமம் உண்டு.

13. அங்குலம் 17 ஐ 9ல் பெருக்கி 4ல் வகுக்க மீதி 1 வம்சமாகும் பலன் பிராமணஜாதி உத்தமபலன்.

14. அங்குலம் 17 ஐ 27ல் பெருக்கி 100ல் வகுக்க மீதி 59 வயதாகும் அதாவது சுமார் 590ஷு க்ஷேமமுண்டு.

15. அங்குலம் 17 ஐ 3ல் பெருக்கி 5ல் வகுக்க மீதி 1-பூதமாகும் பலன் பிரிதியுபூதம் செல்வமுண்டு.

16. அங்குலம் 17 க்கு வந்தவாரம் ஆதிவாரமுதல் எண்ண 6 ஆகும் அதை 3ல் பெருக்க 18 அசுவனி முதல் 9 ஒற்றைக்கண் மற்ற 12 வரையில் இரட்டை கண் மற்ற

6 குருட்டு கண் ஆகும். 18க்கு ஒன்பதுக்கு மேல் 21 வரையில் இரட்டை கண் ஆனதால் 2 கண் உள்ள தாகும் பலன்:—உத்தமமாகும்.

17. அங்குலம் 17ஐ 7ல் பெருக்கி 5ல் வகுக்கமீதி 4ஐசூஸ்திர மாகும் பலன் விருத்த சூஸ்திரம் மத்திபம்.

18. அங்குலம் 17க்கு வந்த நட்சத்திரம் அசுவனி கணம் தேவகணமாகும் பலன் மூர்த்தி நாம நட்சத்திரம் மிருக சீரீஷம் அதுவும் தேவகணமானதால் பலன் உத்தம மாகும்.

19. அங்குலம் 17க்கு வந்த சுக்கிரவாரம் அசுவனி நட்சத் திரம் கூடியது யோகமாகும் பலன் அமிர்தயோகம் சுப பலன்.

20. அங்குலம் 17க்கு வந்த வாரம் திதி நட்சத்திரம் இராசி இவைகளை கூட்டி 9ல் வகுக்க வரும் மீதி 5 பஞ்சக மாகும் பலன் நிஷ்பஞ்சகம் உத்தம பலனுகும்.

21. அங்குலம் 17 ஐ 3ல் பெருக்கி 8ல் வகுக்க மீதி 3 லட்சுமி ஆகும் பலன் தனலட்சுமி தனவரும்படி யுண்டு.

22. அங்குலம் 17 ஐ 9ல் பெருக்கி 8ல் வகுக்க மீதி 1 அஷ்ட திக்கு பாலகர் ஆகும் பலன் இந்திரன் யோக சித்தி.

23. அங்குலம் 17க்கு வந்த வயது 59 ஐ 5ல் பெருக்கி 8ல் வகுக்க மீதி 7 அதிதேவதை யாகும் பலன் குபேரன் குபேர சம்பத்துண்டு.

24. அங்குலம் 17க்கு வந்த நட்சத்திரம் அசுவனி வரை கிராம நட்சத்திரம் விசாக முதல் எண்ணி 9-ல் வகுக்க மீதி 4 தாராபலனுகும் பலன் க்ஷேமதாரை க்ஷேமமுண்டு.

25. அங்குலம் 17க்கு வந்த நட்சத்திர இராசி மேஷம் வரை ஷி கிராம நட்சத்திர விசாகம் 1-ம் பாத இராசி துலாம் முதல் எண்ண 7 சந்திரபலனுகும். சௌக்கிய விருத்தி.

26. அங்குலம் 17க்கு வந்த நட்சத்திரம் அசுவனி வரை மூர்த்தி நாம நட்சத்திரம் மிருக சீரிஷம் முதல்எண்ணி 9-ல் வகுக்கமீதி 6: தாரா பலனுகும் பலன் தெய்வானுக் கூலம். சினேக வாஞ்சையாகும்.

27. அங்குலம் 17க்கு வந்த நட்சத்திரம் இராசி மேஷம் வரை மூர்த்தி நட்சத்திரம் மிருக சீரிஷம் 3-ம் பாதம் இராசி மிதுனம் முதல் எண்ண 11-சந்திரபலனுகும் பலன் இஷ்ட கன சித்தியாகும்.

28. அங்குலம் 17க்கு வந்த நட்சத்திரம் அசுவனிவரை கர்த்தா பெயர் நாம நட்சத்திரம் புனர்பூசம் முதல் எண்ணி 9-ல் வகுக்க மீதி 4 தாராபலனுகும் பலன் க்ஷேம தாரை க்ஷேம முண்டாகும்.

29. அங்குலம் 17க்கு வந்த நட்சத்திர இராசி மேஷம் வரை கர்த்தா நாம நட்சத்திரம் புனர்பூசம் 2-ம் பாத இராசி மிதுனம் முதல் எண்ண 11-சந்திர பலனுகும். பலன் இஷ்டஜன சித்தியாகும்.

மேலே குறிப்பிட்ட கிராமம், மூர்த்தி கர்த்தா உள்பட நவ விம்சம் (29) பொருத்தங்கள் கூறப்பட்டன. இவைகளில் 3 பொருத்தம் மத்திபமாகவும் 1 பொருத்தம் அதமமாகவும் இருக்கின்றன. ஏறக்குறைய பெருவாரியான பொருத்தங்கள் நன்ருயிருக்கின்றன. இதுபோல் கணித்து இடவசதிக்கு தக்கவாறு மூர்த்தியினுடைய அளவு நிர்ணயம் செய்துக்கொள்ள வேண்டும். மூர்த்தியின் அளவு தேவாங்குலம் கணக்கில்தான் நிர்ணயம் செய்தல் வேண்டும். அங்குலம் கணக்கில் பொருத்தம் சரிவராதபோது தேவாங்குலயவை கணக்கில் பொருத்தம் பார்க்கலாம்.

குறிப்பு:—யவை 8 கொண்டது 1 அங்குலமாகும் ஆங்கில அங்குலம். 1 3/8 கொண்டது 1 தேவாங்குலமாகும்.

## 23 ஆலய கெற்ப கிரக நிர்மாணம் செய்யும் முறை.

மூல பிம்பத்தின் ஆயஅளவின் உயரம் லல்லாடம் முதல் பாத பரியந்தம்வரையிலாவது அல்லது லல்லாடம்முதல் கடிகைபரியந்தம் வரையிலாவது அளவுஎடுத்து அது எத்தனை அங்குலம் இருக்கிறதோஅந்த அளவுபோல் மூன்றுபங்கு கெற்ப கிரக உள்விஸ்தாரம் வைக்கவேண்டியது. ஷை ஒரு பங்கு ஒவ்வொரு சுவர் கனம் வைக்கவேண்டியது. ஆக சுவர் பொருத்தி அளவு 5 பங்கு ஆகும் ஷை சுவர் கனம் இடவசதி சௌகரியம் முதலியவைகளை உத்தேசித்து கீழ்க்கண்ட அளவு படியும் செய்யலாம்.

1. கெற்ப கிரக உள் விஸ்தாரத்தை 2 பங்கு செய்து 1 பங்கு ஒவ்வொரு சுவர் வைக்கலாம்.
2. கெற்ப கிரக உள் விஸ்தாரத்தை 9 பங்கு செய்து 4 பங்கு ஒவ்வொரு சுவர் கனம் வைக்கலாம்.
3. கெற்ப கிரக உள் விஸ்தாரத்தை 12பங்கு செய்து 5பங்கு ஒவ்வொரு சுவர் கன்ம் வைக்கலாம்.
4. கெற்ப கிரக உள் விஸ்தாரணத்தை 18 பங்கு செய்து 7 பங்கு ஒவ்வொரு சுவர் கனம் வைக்கலாம்.

## 24 கெற்ப கிரக பிரிவுமான அளவின் முறை.

1. கெற்ப கிரக உள் விஸ்தாரத்தை 10 பங்கு செய்து 1 பங்கு எந்த அளவோ அதுபோல் அந்திராளம் 6 பங்கும் அர்த்த மண்டபம் 10 பங்கும் மகாமண்டபம் 6 பங்கும் ஒரு வாய் பத்தி 4 பங்கும் ஆக 36 பங்கு லக்ஷணம் கூறுகிறது.

## 25 அந்திராளம் அளவின் முறை

கற்ப கிரக உள் விஸ்தாரத்தைக்கொண்டு அந்திராளம் ½ பங்கும் (அல்லது) ¾ பங்கும் (அல்லது) 1 பங்கும் வைக்கலாம்.

### மற்றும் வேறுவித அளவு

கற்ப கிரக உள்விஸ்தாரத்தை 5 பங்கு செய்து அந்திராளம் 4 பங்கும் (அல்லது) 4-½ பங்கும் (அல்லது) 3 பங்கும் (அல்லது) 7 பங்கு செய்து 5 பங்கும் வைக்கலாம்.

## 26 அந்திராளம் பிரிவுமான அளவின் முறை

அந்திராளமானது கற்பகிரகத்தின் உள் அளவு எவ்வளவு அகலமோ அதே அகலம் உள் அளவு இருக்கவேண்டும். வெளி பொருத்தி அளவு மட்டும் பாதவர்க்கத்தின் கால் உயரத்தில் 9ல் 1 பங்கு உள் அடங்கி குறைந்திருத்தல் வேண்டும்.

## 27 அர்த்த மண்டப பிரிவுமான அளவின் முறை

அர்த்த மண்டப வெளி அளவானது கற்பகிரக பொருத்தி, அளவுக்கு 1-¼ பங்கும் (அல்லது) 1-½ பங்கும் வைக்கலாம் இது அந்திராள அளவுக்கு பெருத்து இருக்க வேண்டும்.

## 28 மகா மண்டப அளவின் முறை

மகாமண்டப வெளி அளவானது கெற்ப கிரக பொருத்தி அளவுக்கு 3 பங்கு அளவு அகலம் வைத்தல் வேண்டும். அல்லது 2 பங்கு அளவாவது இருத்தல் வேண்டும்.

## 29 கற்பகிரக வாசக்கால் அளவின் முறை

கற்பகிரக உள் விஸ்தாரத்தை 3 பங்காக்கி 1 பங்கு வாசக் கால் உத்தளவு அகலம் வைக்கவும் அல்லது 5 ல் 3-பாகமும் 7 ல் 4 பாகமும் 9 ல் 5 பாகமும் 11-ல் 6-பாகமும் 2-ல் 1 பாகமும் 15-ல் 8 பாகமும் 17ல் 9-பாகமும் வைக்கலாம்.

டி அகலங்களுக்கு உள் உயரம் 1-ல் 2 பங்கும் அல்லது 3-ல் 7 பங்கும் 5ல் 9 பங்கும் வைக்கலாம்.

## 30 இராஜகோபுர முகதுவாரம் அளவின் முறை

கற்ப கிரகம் பொருத்தி விஸ்தாரம் கொண்ட அளவு வாசக் கால் உள்அளவு அகலம் வைக்கவும் அல்லது சட்டதலை அல்லது முகபந்திர அளவு ஆவது வைக்கலாம். பக்க சுவர்கள் பக்கம் 1-க்குகற்ப கிரக பொருத்தி அளவு வைக்கவும் அல்லது இட வச திக்கும் பொருள்வசதிக்கும் தக்கவாறு $\frac{3}{4}$ பங்கு அளவாவது $\frac{1}{2}$ பங்கு அளவாவது இருத்தல் வேண்டும். உயரம் முன் சொன்ன கற்ப கிரக வாசக்கால் அளவில் சொல்லியபடி வைக்க வேண்டியது. கோபுர வாயல்படியின் நிலைக்கால் 4-ம் நான்கு வேதமாகும் ஆத லால் 2 வாயல்படிகள் அவசியம் இருத்தல்வேண்டும் 1 வாயல்படி இருப்பது மத்திய பக்ஷமாகும்.

கோபுர வாயல் அகலம் அளவில் $\frac{3}{4}$ பங்கு நிகளம் இருத்தல் வேண்டும். அல்லது $\frac{1}{2}$ பங்கு அளவாவது இருத்தல் நலம்.

குறிப்பு:—பொருத்தி அளவு என்பது கால் புறவாய் அளவு ஆகும்.

## 31 கற்ப கிரக உயர்வு அளவின் முறை

கற்ப கிரக கால் புறவாய் விஸ்தாரம் எவ்வளவோ அதுவே உபபீடம் மேல் மட்டம் முதல் கற்ப கிரக யாளம் மேல் மட்டம் உள்ள அளவாகும் டி அளவு 4 பாக பிரிவுமானமாகிறது அவை யாவன :

| | | | |
|---|---|---|---|
| அதிஷ்டானம் | பங்கு | 1 | |
| பாதவர்க்கம் | ,, | 2 | |
| பிரஸ்தம் | ,, | 1 | ஆக பங்கு 4 |

## 32 கற்ப கிரக கட்டட மூன்றுவிதமான வேலைகளின் பெயர்

டி வேலைகள் மூன்று வகைகளாக தனித்தனி பெயருடன் செய்யப்பட்டு வருகின்றன.

அவையாவன

1. உத்திரமட்ட வேலை
2. இரட்ட பஞ்சாங்க வேலை.
3. முகபத்திர வேலை

ஆக வேலைகள் 3 வித பிரிவுமானமாகும்.

## 33 உப பீட உயர அளவின் முறை

உப பீடமானது அதிஷ்டான உயரத்தில் $\frac{1}{4}$ பாகமாவது $\frac{1}{2}$ பாகமாவது $\frac{3}{4}$ பாகமாவது அல்லது சமபாகமாவது அல்லது 3ல் 1 பங்காவது உயரம் வைக்கலாம்.

குறிப்பு: உபபீடம் என்பது சந்நதி அதிஷ்டானம் கீழ்ப் படி, மட்டம். அதாவது பேஷ்டு மட்டம். உயரம் ஆகும்.

## 34 உத்திரமட்ட வேலையின் வரிசைமானங்களும் அதன் பங்கு லக்ஷண விபரங்களும்

### I உபபீட வர்வர்க்க அளவின் முறை

இது 6 பங்குடன் 4 வரிசை மானங்களுடன் கூடியவை.

அவையாவன

| | | | |
|---|---|---|---|
| பிரதம வர்க்கம் | பங்கு | 1 | |
| உபான வர்க்கம் | ,, | 1 | |
| கண்ட வர்க்கம் | ,, | 3 | |
| பட்டிகை வர்க்கம் | ,, | 1 | ஆக பங்கு 6 |

### II அதிர்ஷ்டான அளவின் முறை

இது 8 பங்குடன் 2 வரிசை மானங்களுடன் கூடியது.

அவையாவன

| | | |
|---|---|---|
| கூராதிவர்க்கம் | பங்கு | 1 |

அதிஷ்டான வர்க்கம் பங்கு 7 — ஆக பங்கு 8

III பாத வர்க்க அளவின் முறை

இது 24-பங்குடன் 3 வரிசைமானங்களுடன் கூடியது.

அவையாவன

| | | | |
|---|---|---|---|
| வேதிகை வர்க்கம் | பங்கு | 1 | |
| கால் வர்க்கம் | ,, | 21 | |
| போதிகை வர்க்கம் | ,, | 2 | ஆக பங்கு 24 |

ஷை கால்கள் விமான லக்ஷணத்துக்கு தக்கவாறு அதில் கூறியபடி பங்கீடுசெய்து வைத்தல் வேண்டும்.

IV பிரஸ்தல அளவின் முறை

இது 22 பங்குடன் 6-வரிசை மானங்களுடன் கூடியது, அவையாவன

| | | | |
|---|---|---|---|
| உத்திரம் வர்க்கம் | பங்கு | 4 | |
| கம்பு வர்க்கம் | ,, | 1 | |
| எழுதக வர்க்கம் | ,, | 4 | |
| கம்பு வர்க்கம் | ,, | 1 | |
| கபோதக வர்க்கம் | ,, | 7 | |
| யாளம் வர்க்கம் | ,, | 5 | — ஆக பங்கு 22 |

ஷை கபோதகங்களில் பாதவார்க்கத்திலுள்ள கால்கள் மையமாக பூரி கூண்டுகள் அமைத்தல் வேண்டும்.

## 35 இரட்ட பஞ்சாங்க வேலையின் வரிசைமானங்களும் அதன் பங்கு லக்ஷண விபரங்களும்

I உப பீட அளவின் முறை

இது 6 பங்குடன் 5 வரிசை மானங்களுடன் கீழ்கண்ட அதி தேவதைகளை உடையது.

அவையாவன

| | | |
|---|---|---|
| பிரதம வர்க்கம் | பங்கு | 1 |
| உபான பத்மம் வர்க்கம் | ,, | 1 |
| கண்ட வர்க்கம் | ,, | $2\frac{1}{2}$ |
| கம்பு வர்க்கம் | ,, | $\frac{1}{2}$ |
| பட்டிகை வர்க்கம் | ,, | 1 ஆக பங்கு 6 |

இந்த வர்க்கங்கள் பூமி தேவியும் நந்திகேஸ்வர். பிரம தேவர் முதலிய தேவதைகளின் அம்சமாகும்.

## II அதிர்ஷ்டான அளவின் முறை

இது 23 பங்குடன் 9-வரிசை மானங்களுடன் கீழ் கண்ட அதிதேவதைகளையும் உடையது

அவையாவன

| | | |
|---|---|---|
| கனதி வர்க்கம் | பங்கு | 2 |
| உபான வர்க்கம் | ,, | 3 |
| செகதி வர்க்கம் | ,, | 6 |
| குமுதக வர்க்கம் | ,, | 5 |
| கம்பு வர்க்கம் | ,, | 1 |
| கண்டம் வர்க்கம் | ,, | 2 |
| கம்பு வர்க்கம் | ,, | 1 |
| பட்டிகை வர்க்கம் | ,, | 2 |
| கம்பு வர்க்கம் | ,, | 1 ஆக பங்கு 23 |

இந்த வர்க்கங்கள் சீதேவி, விஷ்ணு, விநாயகர் முதலிய தேவதைகளின் அம்சமாகும்.

### வேறுவித அளவு

ஷை அதிஷ்டானத்தை 3 பங்கு செய்வது அல்லது 5-பங்கு செய்வது. 29-பங்கு செய்வது 27-பங்கு செய்வது, 25-பங்கு செய்வது, 24-பங்கு செய்வது 20-பங்கு செய்வது இந்த விதமான அளவுகளில் யேதாகிலும் ஒரு அளவைக்கொண்டு பிரிவுமானம் செய்யலாம்.

## III பாதவர்க்க அளவின் முறை.

இது 6-பங்குடன் இரண்டு வரிசை மானங்களுடன் கீழ் கண்ட அதிதேவதைகளையுடையது.

அவையாவன

வேதி கை வர்க்கம் பங்கு 1
கால் வர்க்கம் ,, 5 ஆக பங்கு 6

அல்லது 7-பங்காக்கி

வேதி கைவர்க்கம் பங்கு 1
கால் வர்க்கம் ,, 6 ஆக பங்கு 7

தவிற ஷெ கால் உயரத்தை 3-பங்காக்கி 2-பங்கு காலாகவும் 1-பங்கு போதிகையாகவும் பிரிவுமானம் செய்யவும் தவிற மேல் படி கால் உயரத்தை 9-பங்காக்கி 1-பங்கு கால் அகலம் வைக்க வேண்டும்.

கற்ப கிரக பொருத்தி அளவுக்கு 6-கால் பிரிப்பதுண்டு.

அவையாவன.

மேல் விமானங்களுக்கு பிரிவுமானம் செய்யும் கர்ணகூடுக்கு பக்கங்களுக்கு 2 கால் வீதம் இரண்டு பக்கம் 4-காலும் பஞ்சரம் துரைகள் பாந்தாகவும் மையத்தில் சாலைக்கு 2 காலும் ஆக கால் 6 ஆகும். அதிக பக்ஷமாக கால் வைப்பதற்கும் விமான லக்ஷணத்தில் கூறியபடி பிரிவு செய்துக்கொள்ள வேண்டியது.

மேற்படி போதிகை 16-பங்குடன் 5-வரிசைமானங்களாகிறது.

அவையாவன

| | | | |
|---|---|---|---|
| தாடி வர்க்கம் | பங்கு | 2 | |
| அல்லி கால் வர்க்கம் | ,, | ½ | |
| பலகை வர்க்கம் | ,, | 6 | |
| வீரகண்டம் வர்க்கம் | ,, | 3½ | |
| போதிகை வர்க்கம் | ,, | 4 | ஆக பங்கு 16 |

இந்த வர்க்கங்கள் அஷ்ட பாலகர்கள் அஷ்ட சத்திகள் தபோ தனர்கள் ரிஷீஸ்வரர்கள் முதலியவர்களின் அம்சமாகும்.

## IV பிரஸ்தல அளவின் முறை

இது 22 பங்குடன் 6-வரிசை மானங்களுடன் கீழ் கண்ட அதிதேவதைகளை யுடையது.
அவையாவன

| | | |
|---|---|---|
| உத்திர வர்க்கம் | பங்கு | 4 |
| கம்பு வர்க்கம் | ,, | 1 |
| எழுதக வர்க்கம் | ,, | 4 |
| வாஜினம் கம்பு வர்க்கம் | ,, | 1 |
| கபோதக வர்க்கம் | ,, | 7 |
| யாளம் வர்க்கம் | ,, | 5 ஆக பங்கு 22 |

பிரஸ்தலத்தை 21-பங்கும் செய்யலாம் மேற்படி கபோதக வர்க்கத்தில் பாத வர்க்கத்தில் வரும் கால்மையாக நாசி கூண்டு அமைத்தல் வேண்டும்,

இந்த வர்க்கங்கள் தேவர்கள் சித்தி வித்தியாதரர் கின்னரர் கிம்புருடர் முதலிய தேவதைகளின் அம்சமாகும்.

# 36 முகபத்திர வேலையின் வரிசைமானங்களும் அதன் பங்கு லக்ஷண விபரங்களும்

## I உபபீட அளவின் முறை

இது 29-பங்குடன் 16-வரிசை மானங்களுடன் கூடியது.

அவையாவன

| | | |
|---|---|---|
| பிரதம பாத வர்க்கம் | பங்கு | 3 |
| பத்ம வர்க்கம் | ,, | 3 |
| கம்பு வர்க்கம் | ,, | ½ |
| கண்ட வர்க்கம் | ,, | ½ |
| கம்பு வர்க்கம் | ,, | ½ |

| | | |
|---|---|---|
| அதோ பத்மம் வர்க்கம் | பங்கு | ½ |
| குமுத வர்க்கம் | ,, | 2 |
| ஊர்த்த பத்மம் வர்க்கம் | ,, | ½ |
| கம்பி வர்க்கம் | ,, | ½ |
| கண்டம் வர்க்கம் | ,, | 8½ |
| உத்திர வர்க்கம் | ,, | 2 |
| கம்பு வர்க்கம் | ,, | ½ |
| எழுதக வர்க்கம் | ,, | 1½ |
| வாஜினம் கம்பு வர்க்கம் | ,, | ½ |
| கபோதகம் வர்க்கம் | ,, | 3 |
| யாள வர்க்கம் | ,, | 2 |

ஆக பங்கு 29

## II அதிஷ்டான அளவின் முறை

இது 4-பங்குடன் 4-வரிசை மானங்களாலும் கீழ் கண்ட பிரிவின் படி உள்ளது.

| | | |
|---|---|---|
| 1-பாதம் வர்க்கம் | பங்கு | 1 |
| 2-செகதி வர்க்கம் | ,, | 1 |
| 3-குமுதகம் வர்க்கம் | ,, | 1 |
| 4-பட்டிகை வர்க்கம் | ,, | 1 ஆக பங்கு 4 |

1-பாதம் 7-பங்குடன் 4-வரிசை மானங்களுடன் கூடியது. அவையாவன

| | | |
|---|---|---|
| கனதி வர்க்கம் | பங்கு | 2 |
| கீழ் கம்பி வர்க்கம் | ,, | ½ |
| பத்மம் வர்க்கம் | ,, | 3½ |
| மேல் கம்பி வர்க்கம் | ,, | 1 ஆக பங்கு 7 |

2-செகதி வரிசை 7-பங்குடன் 3-வரிசை மானங்களுடன் கூடியது.

அவையாவன

| | | |
|---|---|---|
| செகதி வர்க்கம் | பங்கு | 5 |
| ஊர்த்த பத்ம வர்க்கம் | ,, | 1 |
| கம்பு வர்க்கம் | ,, | 1 ஆகபங்கு 7 |

3. குமுத வரிசை 11 பங்குடன் 5 வரிசைமானங்களுடன் கூடியது.

அவையாவன

| | | |
|---|---|---|
| கம்பு வர்க்கம் | பங்கு | 1 |
| அதோபத்ம வர்க்கம் | ,, | 1 |
| குமுத வர்க்கம் | ,, | 7 |
| ஊர்த்த பத்ம வர்க்கம் | ,, | 1 |
| கம்பு வர்க்கம் | ,, | 1 ஆக பங்கு 11 |

4. பட்டிகை வரிசை 9 பங்குடன் 4 வரிசைமானங்களுடன் கூடியது.

அவையாவன

| | | |
|---|---|---|
| கண்டம் வர்க்கம் | பங்கு | 4 |
| கம்பு வர்க்கம் | ,, | 1 |
| பலகை வர்க்கம் | ,, | 3 |
| கம்பு வர்க்கம் | ,, | 1 ஆக பங்கு 9 |

## III. பாதவர்க்க அளவின் முறை

இது 6 பங்குடன் 2 வரிசை மானங்களாகி அனேக பிரிவினை ஆகிறது

அவையாவன

| | | |
|---|---|---|
| வேதிகை வர்க்கம் | பங்கு | 1 |
| கால் வர்க்கம் | ,, | 5 ஆக பங்கு 6 |

1. வேதிகை வர்க்கமானது 9 பங்குடன் 4 வரிசைமானங்களுடன் கூடியது

அவையாவன

| | | |
|---|---|---|
| கண்ட வர்க்கம் | பங்கு | 4 |
| கீழ் கம்பு வர்க்கம் | ,, | 1 |
| அதோபத்மம் வர்க்கம் | ,, | 3 |
| மேல் கம்பு வர்க்கம் | ,, | 1 ஆக பங்கு 9 |

2. கால்வர்க்கம் 3 பங்குடன் 2 வரிசைமானங்களுடன் கூடியது

அவையாவன

| | | |
|---|---|---|
| கால் வர்க்கம் | பங்கு | 2 |
| போதிகை வர்க்கம் | ,, | 1 ஆக பங்கு 3 |

3. ஷை போதிகையானது 19 பங்குடன் 5 வரிசைமானங்களுடன் அனேக பிரிவினையுடையது.

அவையாவன

| | | | |
|---|---|---|---|
| 1. | தாடி | பங்கு | 2 |
| 2. | அல்லிக் கால் | ,, | 4 |
| 3. | பலகை | ,, | 5 |
| 4. | வீரகண்டம் | ,, | 3 |
| 5. | போதிகை | ,, | 5 ஆக பங்கு 19 |

4. தாடி வர்க்கம் 5 பங்குடன் 3 வரிசைமானங்களுடன் கூடியது

அவையாவன

| | | |
|---|---|---|
| கீழ் கம்பு | பங்கு | 1 |
| அதோபத்மம் | ,, | 2 |
| கழுத்து | ,, | 2 ஆக பங்கு 5 |

5. அல்லிக்கால் வர்க்கம் 7 பங்குடன் 2 வரிசைமானங்களுடன் கூடியது

அவையாவன

| | | |
|---|---|---|
| கீழ் கம்பு | பங்கு | 1 |
| குடம் பங்கு | ,, | 6 ஆக பங்கு 7 |

6. பலகை வர்க்கம் 4-பங்குடன் 4-வரிசைமானங்களுடன் கூடியது.

அவையாவன

| | | |
|---|---|---|
| ஊர்த்தபத்மம் | பங்கு | $1\frac{1}{2}$ |
| கழுத்து | ,, | $\frac{1}{2}$ |

| | | |
|---|---|---|
| அதோபத்மம் | ,, | $1\frac{1}{2}$ |
| பலகை | ,, | $\frac{1}{2}$ ஆக பங்கு 4 |

7. வீரகண்ட வர்க்கம் கமுத்தாக வைக்கவும்.

8. போதிகை 4-பங்குடன் 4-வரிசை மானங்களுடன் கூடியது.

அவையாவன

| | | |
|---|---|---|
| கண்டம் | பங்கு | 1 |
| மதலை | ,, | 1 |
| நாணுதல் | ,, | 1 |
| பூ முனை | ,, | 1 ஆக பங்கு 4 |

## IV. பிரஸ்தல அளவின் முறை

இரட்ட பஞ்சாங்க வேலையின் அளவுபடி கைத்துக்கொள்ள வேண்டியது.

## 37. தேவ கோஷ்ட அளவு

கற்ப கிரக வெளி புறம் மையத்தில் தேவ கோஷ்டம் கும்ப பஞ்சரம் உயர அளவு லக்ஷண விபரம்

பாதவர்க்கத்தில் வேதிகைக்குமேல் உத்திரம் கீழ்மட்டம்வரையில் உள்ள அளவு 36-பங்குடன் 15-வரிசைமானங்களாகிறது.

அவையாவன

| | | |
|---|---|---|
| கால் வர்க்கம் | பங்கு | 6 |
| தாடி வர்க்கம் | ,, | 1 |
| கண்ட வர்க்கம் | ,, | $\frac{3}{4}$ |
| குடவர்க்கம் | ,, | 2 |
| கண்டவர்க்கம் | ,, | 1 |
| பலகை வர்க்கம் | ,, | $2\frac{1}{8}$ |
| கண்டவர்க்கம் | ,, | $1\frac{1}{8}$ |

| | | |
|---|---|---|
| உத்திரவர்க்கம் | ,, | 7/8 |
| எழுதக வர்க்கம் | ,, | 7/8 |
| கபோதக வர்க்கம் | ,, | 2 |
| யாளி வர்க்கம் | ,, | 1½ |
| வேதிகை வர்க்கம் | ,, | 4 |
| கெளம் வர்க்கம் | ,, | 3 |
| கெடம் வர்க்கம் | ,, | 6 |
| கலசம் | ,, | 3 ஆக பங்கு 36 |

தேவகோஷ்டமானது கற்ப கிரக மையங்களில் 3
அந்திராளம் பக்கமையம் 2
ஆக கோஷ்டம் 5

## 38. தேவ கோஷ்டங்களில் அமைக்கும் திரு உருவங்கள்

1. கிழக்கு பார்த்த சிவசந்நிதானத்தில் முறையே 1, கணபதி 2 தக்ஷிணாமூர்த்தி 3 விஷ்ணு அல்லது லிங்கோர்ப்பவ மூர்த்தி 4-பிர்மா 5-துர்கை முதலியன பிரதிஷ்டை செய்தல் வேண்டும.

2. கணபதி சந்நிதானங்களுக்கு மேலே சொன்னபடியாகிலும் அல்லது முறையே-1 நிர்தன கணபதி 2-தக்ஷண கணபதி 3-விஷ்ணு கணபதி, 4-பிரம கணபதி 5-துர்கை முதலியன பிரதிஷ்டை செய்தல் வேண்டும்.

3. முருகன் சந்நிதானங்களுக்கு முதல் அயிட்டத்தில் கூறியபடியாகிலும் அல்லது முறையே 1. கணபதி 2. சுப்பிரமணியர், 3. ஸ்கந்தர், 4. குகன், 5. துர்கை முதலியன பிரதிஷ்டை செய்தல் வேண்டும்.

4. விஷ்ணு முதலிய சந்நிதானங்களுக்கு முறையே விஷ்ணு-1 கணபதி-2 நரசிம்ம மூர்த்தி-3 சீனிவாச பெருமாள் 4-பரமபத மூர்த்தி 5-துர்கை முதலியன பிரதிஷ்டை செய்தல் வேண்டும். அல்லது 1-கணபதி 2-லக்ஷ்மி 3. நாராயண மூர்த்தி

4-நரஸிம்மமூர்த்தி, 5-துர்கை முதலியன பிரதிஷ்டையும் செய்யலாம்.

5. தாயார் சந்நிதிகளில் அஷ்டலஷ்சுமிகளுள் பிரதிஷ்டை செய்யதல்வேண்டும்.

6. அம்பாள் சந்நிதானங்களுக்கு முறையே 1-கணபதி -சாமுண்டி அல்லது கௌமாரி 3-வைஷ்ணவி 4-பிராமணி துர்கை முதலியனவை பிரதிஷ்டை செய்தல் வேண்டும்.

7. மற்ற ஆலயங்களுக்கு 1-வது அயிட்டத்தில் சொன்ன படி பிரதிஷ்டைகள் செய்தல் வேண்டும்.

## 39. கற்ப கிரக வாயல்படி நிற்கும் பலன்

1. பட்டிகை வர்க்கம் மேல் மட்டத்தில் வாசக்கால் கீழ் குறுக்கு வைத்தல் உத்தம பக்ஷமாகும்

2. கண்ட வர்க்கம் மட்டத்தில் வாசக்கால்வைப்பது மத்திப பக்ஷமாகும்.

3. குமுத வர்க்கம் மட்டத்தில் வாசக்கால் வைப்பது அதம பக்ஷமாகும்.

5. உபானு மட்டத்தில் வாசக்கால் வைப்பது அதமா அதமம் ஆகும்.

## 40. கோமுக வைக்கும் திக்கின் விபரம்

மேலே சொன்ன வர்க்கங்களில் வைப்பது: அதே பலன் ஆகும். தவிற கோமுகங்கள் வடக்கு அல்லது கிழக்கு முகமாவது இருக்கும்படி நிர்மாணம் செய்தல் வேண்டும்.

## 41. கற்ப கிரகம் கட்டவேண்டிய அமைப்பு விபரம்

கணபதி, முருகன், சிவன், விஷ்ணு, பிடாரி, லட்சுமி முதலிய தேவதைகளின் ஆலயம் சதுரமாக அமைத்தல் வேண்டும்.

அம்பாள், சத்தி-துர்கை, ரங்கநாதர் முதலிய தேவதைகளின் ஆலயம் அகலத்துக்கு ¾ பங்கு நிகளம் கற்பகிரகம் உத்தளவு இருக்கும்படி நிர்மாணம் செய்யவேண்டும்.

## 42. ஆலயம் அமைக்க வேண்டிய திக்கின் விபரம்

பிடாரி, துர்கை முதலிய ஆலயம் வடக்கு திக்கு பார்த்தது போல் கட்டவேண்டும். கணபதி ஆலயம் எந்த திக்கு பார்த்தாவது இருக்கலாம் மற்ற ஆலயங்கள் வடக்கு திக்கு பார்த்தது போல் கட்டக்கூடாது. மற்ற மூன்று திக்கும் பார்க்கலாம்.

தவிற ஒவ்வொரு கிராமங்களிலும் சிவன் ஆலயம் முருகன் ஆலயம் அம்பாள் ஆலயம் முதலியவை கிராம மத்தியிலும் விஷ்ணு ஆலயம் நிருதி மூலையிலும் ஐயனர் ஆலயம் தெற்கு திக்கிலும் பிடாரி ஆலயம் வடக்கு திக்கிலும் அமைப்பது ரொம்ப விசேஷமாகும் ஷை ஆலயங்களை கிராம மக்கள் பாது காத்து வருவார்களானுல் அவர்கள் நாளுக்கு நாள் க்ஷேமமாக வாழ்வார்கள் ஷை ஆலயம் பாழடைந்து கவனிக்காமல் இருந்தால் க்ஷேமம் குறைந்து பலவித துன்பம் அடைவார்கள்.

## 43. வாகன கொரடு துஜஸ்தம்பம் பலிபீடம் இருக்கவேண்டிய ஸ்தானங்கள்

விஞயகர் சிவன் முதலிய ஆலயங்களில் அதன தன் வாகன கொரடு சுவாமிக்கு முன் பாகத்திலும் நடுவில் பலிபீடமும் அதற்கு அடுத்த படி துஜஸ்தம்பமும் வைக்க வேண்டும்.

முருகன் விஷ்ணு சத்தி முதலியஆலயங்களுக்கு அதனதன் வாகன கொரடு சுவாமிக்கு முன் பாகத்திலும் நடுவில் துஜஸ் தம்பமும் அதற்கு அடுத்த படி பலிபீடம் வைக்க வேண்டும்.

## 44. வாகன கொரடு துஜஸ்தம்பம் பலிபீடம் கட்டட அளவின் பிரமாணம்

கற்பகிரக பொருத்தி அளவை 5-பாகம் செய்து 3-பாகம் வாகன கொரடும் ஷை கொரடை 4-பாகம் செய்து 1-பாகம்

நாராசமும் 3 பாகம் பலிபீடம் அல்லது முன் சொன்ன முர்த்திக்கு தக்கவாறு துஜஸ் தம்பமும் அடுத்தாற்போல் 1-பாகம்நாராசமும் 3-பாகம் துஜஸ்தம்பம் அல்லது பலிபீடமும் வைக்க வேண்டும் தவிர ஷை அளவு எல்லாம் கற்ப கிரக பொருத்தி அளவை கொண்டு கற்பகிரக முதல் 3-5-7-9-10-20 இந்த பாகங்களில் இடவசதியை கவனித்து அளந்துவைக்க வேண்டும்.

## 45. வாகன கொரடு பலிபீடம் வைக்க வேண்டிய உயர அளவு பிரமாணம்

கற்பகிரகத்திலுள்ள மூல திருஉருவம் உயரத்தில் நேத் திரத்துக்கு கீழ் மட்டம், அல்லது முக்கு நுனி, மோவாய் கட்டை, தோள், மார்பு-நாபி-பாதம் ஆக சப்தவிதமான அளவில்எந்த அளவில் வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளலாம். ஷை உயரத் துக்கு வாகனம் பலபீடம் உயரம் அளவுபோக மீதி உயரத்துக்கு முன் பக்கங்களில் கூறிய உபபீட அளவுபடி வேலை மானம் செய்துக்கொள்ளவும்.

## 46. துஜஸ்தம்பம் உயர அளவின் விபரம்

கற்ப கிரக யாள மட்டமும் கற்பகிரக ஒவ்வொரு நிலை கோபுர கழுத்தடி மட்டமும். அல்லது ஸ்தூபி கலச மட்டம் வைக்க வேண்டியது. பூமி மட்டத்திலிருந்து தேவையான உயரம் வரை யில் அளந்து 5-ல் ஒரு பாகம் பூமிக்கடியில் புதைமானமாக அளவுஎடுத்துக் கொள்ளவேண்டும். அல்லது 8-ல் 1-பாகமாவது 11-ல் 1-பாகமாவது பூமிகடியில் புதை மானம் அளவு எடுத்துக் கொள்ளலாம் மீதியுள்ள மரத்தை 5-பாகம் அல்லது 8, 11, இந்த அளவுகளில் உயரந்துக்கு தக்கபடி பாகம் செய்து அதில் ஒரு பங்கு திருஷ்டி பலகை உயரம் வைக்கவும். ஷை திருஷ்டி பலகை உயரத்தை 3-பங்கு செய்து 4-பங்கு அகலம் வைக்கவும்.

## 47. மூலதேவதைகளுக்கு எதிரில் தக்க வாகனம் அமைக்கும் விபரம்

கணபதிக்கு - மூஷிகம்

சிவனுக்கு - ரிஷபம்

முருகனுக்கு - மயில் அல்லது யானை

விஷ்ணுவுக்கு - கெருடன்

அம்பாள்-துர்கை-பிடாரி-லக்ஷ்மி

முதலியவைக்கு-சிம்மம்

ராமருக்கு - ஆஞ்சநேயர்

ஆண்டாளுக்கு - அன்னம்

தெய்வானைக்கு - யானை

பைரவர்க்கு - நாய்

திரௌபதைக்கு - போதராஜர்

முதலியவை முன்பாகத்தில் அமைத்தல் வேண்டும்.

## 48. கற்பகிரகத்தில் மூர்த்திகள் இருக்க வேண்டிய ஸ்தான விபரம்

கற்பகிரக உத்தளவில் பின் சுவர் முதல் மையம் வரையில் பத்து பாகம் செய்து நடுவில் 10 வது பாகம் லிங்கமூர்த்தி அமைத்தல்வேண்டும். 9-வது பாகம் பிரமமூர்த்தி அமைத்தல் வேண்டும். 8-வது பாகம் விஷ்ணுமூர்த்தி அமைத்தல்வேண்டும். 7-வதுபாகம் சுப்பிரமணியர் அமைத்தல் வேண்டும்.

6-வது பாகத்தில் சங்கரி, சரஸ்வதி, லக்ஷிமி முதலிய தேவதைகளும்

5-வது பாகத்தில் மற்ற யேனைய தேவதைகளும்

4-வது பாகத்தில் கணபதியும்

3-வது பாகத்தில் பைரவரும்

2-வது பாகத்தில் சத்தி, துர்கை, பிடாரி முதலிய தேவதைகளும்

1-வது பாகத்தில் பூத பிசாசு வாசஸ்தலமானதால் இதில் எந்ததேவதைகளும் ஸ்தாபிதம் செய்யக்கூடாது.

வேறு சிலர்:—விஷ்ணு ஆலயங்களில் கற்பகிரகத்தின் உத்தளவை 3 பாகம் செய்து பின் சுவர் 1 பாகம் மூலமூர்த்தியையும் 2 வது பாகம் நடுவில் உற்சவமூர்த்திகள் வைப்பார்கள். 3-வது ஆரம்ப இடம் பட்டர்கள் பொழக்கமான இடமாக வைப்பார்கள்.

## 49 அலங்கார ஆசனம் அளவு

கற்பகிரக உத்தளவில் 3-ல் 1-பாகம் அல்லது 2-ல் 1-பாகம் அலங்கார ஆசனபீடம் நிகளம் வைக்கவேண்டும். இதில் $\frac{3}{4}$ பாகம் அகலமும், $\frac{1}{2}$ பாகம் அல்லது $\frac{3}{4}$ பாகம் அகலமும் $\frac{1}{2}$ பாகம் அல்லது $\frac{3}{4}$பாகம் அல்லது சரிபாகம் இடம் மூர்த்தியை அனுசரித்து உயரம் வைக்கவும். இதனுடைய உயரம் வேலைபாடு பங்குலக்ஷணம் உபபீட அளவுப்போல் பங்கீடு செய்துக்கொள்ள வேண்டியது.

## 50 பிராகார அமைப்பின் லக்ஷண விபரம்

உள் பிராகாரமானது கற்பகிரக பொருத்தி அளவைக்கொண்டு $\frac{1}{2}$ பங்கு $\frac{3}{4}$ பங்கு 1 பங்கு $1\frac{1}{2}$ பங்கு வரையில் இடவர்க்கத்தை அனுசரித்து அமைக்கவேண்டும். தவிர பிரகார சுற்றுபுரத்தில்— அக்கினி திக்கில் பாகசாலையும், நிருதி திக்கில் நாடகசாலையும்

வாயுவுதிக்கில் போகசாலே (சயனசாலே) யும், ஈசானிய திக்கில் யாகசாலேயும் நிர்மிக்கவேண்டும். வாயற்படிக்கு இருபக்கமும் துவார பாலகர்கள் இருக்கவேண்டும்.

ஆகம முதலியவற்றில்

கிழக்கு - அக்கினிமூலே. இதன் மத்தியில் தனஸ்தானமும்-

அக்கினிதிக்கில் - பாகஸ்தானமும், யாகசாலேயும் - அக்னி குண்டமும்,

அக்கினிமூலேக்கும் தெற்குதிக்குக்கு மத்தியில் - புஷ்பசாலே, ஸ்நான சாலே - உதக ஸ்தானமும்,

தெற்கு திக்கில் - ஞானசாஸ்திர நூல்கள் வைக்குமிடமும்.

தெற்கு - நிருதிமூலே - இதன் மத்தியில் - சந்தனம் - புஷ்ப தோட்டமும்,

மேற்கு தர்ம பிரசங்கஸ்தானமும்

வாயுவுதிக்கில் சயனஸ்தானமும்

வடக்கு கிணறும்

ஈசானியதிக்கில் யாகசாலே (அல்லது) சயனசாலே

ஈசானிய மூலேக்கும் கிழக்குக்கு மத்தியில் வாத்திய ஸ்தானமும் அமைக்கவேண்டும்.

## 51 பிரகார பரிவார தேவதைகள் இருக்கவேண்டிய ஸ்தான விபரம்

ஆலயசுற்றுபிராகாரங்களில் இருக்கவேண்டிய தேவதைகள் சிவாலயங்களின் எதிரில் சந்நிதியை பார்த்தபடி வலதுபுறத்தில் சூரியனும் இட புறத்தில் சந்திரனும் அக்னிதிக்கில் நவநாயக்கர்

என்னும் நவக்கிரஹமும் - வீரபத்திரர், காளியும் - தெற்குதிக்கில சப்த மாதாக்களும்-நிருதிதிக்கில் கணபதியும்-மேற்கு திக்கில் சிவ லிங்கமும் - வாயுவுதிக்கில் முருகனும் - வடக்கு திக்கில் ஈஸ்வரி - ஸரஸ்வதியும் - ஈசானியதிக்கில் பைரவமூர்த்தியும் - கோமுகம் எதிரில் சண்டேசுரர் முதலிய தேவதைகள் பிரதிஷ்டை செய்வித்தல் வேண்டும்.

கணபதி - முருகன் முதலிய பிரதான ஆலயங்களுக்கு பிரகா ரங்களில் அந்தந்த சுவாமிகள் பரிவர்த்தனமாக இடங்களை மாற்றி அமைக்கவேண்டும்.

விஷ்ணு ஆலயங்களில் அக்னி திக்கில் ஆஞ்சிநேயரும், வலதுபுறத்தில் - தாயாரும், நம்மாழ்வாரும் - இடதுபுறத்தில் - ஆண்டாள் - உடையவர் - ஸ்ரீ ராமர் முதலிய மூர்த்திகளும், பாக சாலையில் - மடப்பள்ளி நாச்சியார் முதலிய தேவதைகள் அமைத்தல்வேண்டும்.

## 52 ஏகதள விமான அகலம் பிரிவுமான லக்ஷண விபரம்

கற்பகிரக கால்புரா அளவை 8 பங்கு செய்து 1 பங்கு 2 பக்கங்களுக்கும் கழிவு மானம் செய்துக்கொள்ள வேண்டும். மீதி 7 பங்கை வேதிகை விஷ்தாரம் வைத்துக்கொள்ளவும். ஷை வேதிகையை 4 பங்கு செய்து 1 பங்கு இரண்டு பக்கம் கழிவு மானம் செய்து மீதி 3 பங்கை கழுத்து அகலம் வைத்துக் கொள்ளவும். ஷை கழுத்தை 3 பங்கு செய்து 1 பங்கு முகபத் திரம் பஞ்சரம் வைக்கவும். பண்டிகையை 3 பங்கு செய்து 1 பங்கு நாசி கூண்டு வைக்கவும்.

## 53 திவிதள, திரிதள விமான அகல பிரிவு மான லக்ஷண விபரம்

I கற்பகிரக கால்புரா அளவை 6 பங்கு செய்வது

அவையாவன

| | | |
|---|---|---|
| கர்ண கூடு | பங்கு | 1 |
| பஞ்சரம் | ,, | 1 |
| சாலை | ,, | 2 |
| பஞ்சரம் | ,, | 1 |
| கர்ணகூடு | ,, | 1 ஆக பங்கு 6 |

அல்லது

II கற்பகிரக கால்புரா அளவை 7 பங்கு செய்வதுண்டு

அவையாவன

| | | |
|---|---|---|
| கர்ண கூடு | பங்கு | 1 |
| பஞ்சரம் | ,, | 1 |
| சொருவு சாலை | ,, | ½ |
| மைய சாலை | ,, | 2 |
| சொருவு சாலை | ,, | ½ |
| பஞ்சரம் | ,, | 1 |
| கர்ண கூடு | ,, | 1 ஆக பங்கு 7 |

அல்லது

III கற்பகிரக கால்புரா அளவை 10 பங்கு செய்வதுண்டு

அவையாவன

| | | |
|---|---|---|
| கர்ண கூடு | பங்கு | 1 |
| பாந்து | ,, | ½ |
| செகத்திர சாலை | ,, | 1 |
| பாந்து | ,, | ½ |
| சொருவு சாலை | ,, | ½ |

| | | |
|---|---|---|
| மைய சாலை | ,, | 3 |
| சொருவு சாலை | ,, | ½ |
| பாந்து | ,, | ½ |
| செகத்திர சாலை | ,, | 1 |
| பாந்து | ,, | ½ |
| கர்ண கூடு | ,, | 1 ஆக பங்கு 10 |

## 54. 5 நீளம் முதல் 15 நீளம் வரை கட்டும் இராஜ கோபுர அகல பிரிவு மான லக்ஷண விபரம்

I முகதுவார கால்புரா அளவை 15 பங்கு செய்வது

அவையாவன

| | | |
|---|---|---|
| கர்ண கூடு | பங்கு | 1¼ |
| பாந்து | ,, | 1 |
| செகத்திர சாலை | ,, | 1½ |
| பாந்து | ,, | 1 |
| சொருவு சாலை | ,, | 1¼ |
| மைய சாலை | ,, | 3 |
| சொருவு சாலை | ,, | 1¼ |
| பாந்து | ,, | 1 |
| செகத்திர சாலை | ,, | 1½ |
| பாந்து | ,, | 1 |
| கர்ண கூடு | ,, | 1¼ ஆக பங்கு 15 |

மேலே சொன்ன மைய சாலை பங்கு 3-க்கு 1 பங்கு வாசக்கால் அகலமும் 1½ பங்கு உயரமும் வைக்கவேண்டும்.

இதற்கு மரமாடி பக்கம் 8 பங்கு செய்வது

அவையாவன

| | | |
|---|---|---|
| கர்ண கூடு | பங்கு | $1\frac{1}{4}$ |
| பாந்து | ,, | $\frac{1}{2}$ |
| செகத்திர சாலே | ,, | $\frac{1}{2}$ |
| பாந்து | ,, | $\frac{1}{2}$ |
| சொருவு சாலே | ,, | $\frac{1}{4}$ |
| மைய சாலே | ,, | 2 |
| சொருவு சாலே | ,, | $\frac{1}{4}$ |
| பாந்து | ,, | $\frac{1}{2}$ |
| செகத்திர சாலே | ,, | $\frac{1}{2}$ |
| பாந்து | ,, | $\frac{1}{2}$ |
| கர்ண கூடு | ,, | $1\frac{1}{4}$ ஆக பங்கு 8 |

இந்த இராஜ கோபுரங்களுக்கு (விமானங்களுக்கு) கலசம் (ஸ்தூபி) 5, 7, 9, இந்த கணக்குப்படி இடவர்க்கங்களே கவனித்து வைக்க வேண்டியது.

(அல்லது)

II முகதுவார கால்புரா அளவை 16 பங்கு செய்வதுண்டு

அவையாவன

| | | |
|---|---|---|
| கர்ண கூடு | பங்கு | $1\frac{1}{4}$ |
| பாந்து | ,, | 1 |
| செகத்திர சாலே | ,, | $1\frac{1}{2}$ |
| பாந்து | ,, | 1 |
| சொருவு சாலே | ,, | $1\frac{1}{4}$ |
| மைய சாலே | ,, | 4 |

| | | |
|---|---|---|
| சொருவு சாலை | ,, | $1\frac{1}{4}$ |
| பாந்து | ,, | 1 |
| செகத்திர சாலை | ,, | $1\frac{1}{2}$ |
| பாந்து | ,, | 1 |
| கர்ண கூடு | ,, | $1\frac{1}{4}$ ஆக பங்கு 16 |

ஷை மைய சாலை பங்கை 3 பாகமாக்கி 1 பங்கு வாசக்கால் அகலம் $1\frac{1}{2}$ பங்கு உயரம் வைக்கவும்.

இதன் பக்க மரமாடி கால்புரா அளவை 9 புங்கு செய்வது

அவையாவன

| | | |
|---|---|---|
| கர்ண கூடு | பங்கு | $1\frac{1}{4}$ |
| பாந்து | ,, | $\frac{1}{2}$ |
| செகத்திர சாலை | ,, | $\frac{3}{4}$ |
| பாந்து | ,, | $\frac{1}{2}$ |
| சொருவு சாலை | ,, | $\frac{1}{2}$ |
| மைய சாலை | ,, | 2 |
| சொருவு சாலை | ,, | $\frac{1}{2}$ |
| பாந்து | ,, | $\frac{1}{2}$ |
| செகத்திர சாலை | ,, | $\frac{3}{4}$ |
| பாந்து | ,, | $\frac{1}{2}$ |
| கர்ண கூடு | ,, | $1\frac{1}{4}$ ஆக பங்கு 9 |

இந்த இராஜ கோபுரங்களுக்கு (விமானங்களுக்கு) கலசம் 7, 9, 11, இந்தப்படி இடவர்க்கத்தை அனுசரித்து வைக்க வேண்டியது.

(அல்லது)

III முகதுவார கால்புரா அளவை 17 பங்கு செய்வதுண்டு

அவையாவன

| | | |
|---|---|---|
| கர்ண கூடு | பங்கு | 1 |
| பஞ்சரம் | ,, | 1 |
| செகத்திர சாலை | ,, | 2 |
| பஞ்சரம் | ,, | 1 |
| சொருவு சாலை | ,, | 1 |
| மைய சாலை | ,, | 5 |
| சொருவு சாலை | ,, | 1 |
| பஞ்சரம் | ,, | 1 |
| செகத்திர சாலை | ,, | 2 |
| பஞ்சரம் | ,, | 1 |
| கர்ண கூடு | ,, | 1 ஆக பங்கு 17 |

ஷை மைய சாலையை 3 பங்கு செய்து 1 பங்கு வாசக்கால் அகலம் $1\frac{1}{2}$ பங்கு உயரம் வைக்கவும்.

இதன் பக்க மரமாடி கால்புரா அளவை 13 பங்கு செய்வது

அவையாவன

| | | |
|---|---|---|
| கர்ண கூடு | பங்கு | 1 |
| பஞ்சரம் | ,, | 1 |
| செகத்திர சாலை | ,, | 1 |
| பஞ்சரம் | ,, | 1 |
| மைய சாலை | ,, | 5 |

| | | |
|---|---|---|
| பஞ்சரம் | பங்கு | 1 |
| செகத்திர சாலே | ,, | 1 |
| பஞ்சரம் | ,, | 1 |
| கர்ண கூடு | ,, | 1 ஆக பங்கு 13 |

இந்த இராஜ கோபுரங்களுக்கு கலசம் 9, 11, 13, இந்த கணக்குப்படி இடவர்க்கங்களை கவனித்து வைக்க வேண்டியது.

## விமான உயரவரி வர்க்க பங்குமான லக்ஷண விபரம்

## 55 ஏகதளம் (1 நிலே) விமான பங்கு லக்ஷண விபரம்

ஷை விமானம் உயரம் 4 பங்குடன் 3 வரிசைமானங்கள் ஆகிறது

அவையாவன

| | | |
|---|---|---|
| கௌம் | பங்கு | 1 |
| சிகரம் | ,, | 2 |
| ஸ்தூபி | ,, | 1 ஆக பங்கு 4 |

குறிப்பு :- கௌம் என்பது கண்டம், கழுத்து, கால், கந்தரம், கிரீவை, சிரோதரம், என பலவகை பெயர்கள் உண்டு.

சிகரம் என்பது :- கெடம், சிரஸ்சு, மூர்த்தம், சிகை, மௌலி மஸ்தகம், சீரஷம், என பலவகை பெயர்கள் உண்டு.

ஸ்தூபி என்பது :- கலசம், ஸ்தூகை, கடம், கீலகம், சளுகம், சூளிகை, என பலவகை பெயர்கள் உண்டு.

## 56 துவிதளம் (2 நிலே) விமான லக்ஷண விபரம்

இது 16 பங்குடன் 5 வரிசைமானங்களாகின்றன

அவையாவன

| | | |
|---|---|---|
| கீழ் 1-ம் கர்ண கூடு | பங்கு | 5 |
| ,, 1-ம் பிரஸ்தளம் | ,, | 2 |
| கெளம் | ,, | 3 |
| சிகரம் | ,, | 4 |
| ஸ்தூபி | ,, | 2 ஆக பங்கு 16 |

குறிப்பு :- கர்ணகூடு என்பது பாதவர்க்கம், கால், அடுக்கு என பலவகை பெயர்கள் உண்டு.

குறிப்பு :- பிரஸ்தளம் என்பது மஞ்சம், உள்நாட்டிய கால் என பலவகை பெயர்கள் உண்டு.

## 57 திரிதள (3 நிலை) விமான லக்ஷண விபரம்

இது 16 பங்குடன் 7 வரிசைமானங்களாகின்றன

அவையாவன

| | | |
|---|---|---|
| 1-ம் கர்ண கூடு | பங்கு | $3\frac{1}{2}$ |
| 1-ம் பிரஸ்தளம் | ,, | $1\frac{1}{2}$ |
| 2-ம் கர்ண கூடு | ,, | 3 |
| 2-ம் பிரஸ்தளம் | ,, | $1\frac{1}{4}$ |
| கெளம் | ,, | 2 |
| சிகரம் | ,, | $3\frac{1}{4}$ |
| ஸ்தூபி | ,, | $1\frac{1}{2}$ ஆக பங்கு 16 |

## 58 பஞ்சதள (5 நிலை) கோபுர லக்ஷண விபரம்

இது 21 பங்குடன் 11 வரிசைமானங்களாகின்றன

| | | |
|---|---|---|
| 8-ம் கர்ண கூடு | ,, | 4 |
| 8-ம் பிரஸ்தளம் | ,, | $1\frac{3}{4}$ |
| 9-ம் கர்ண கூடு | ,, | $3\frac{1}{2}$ |
| 9-ம் பிரஸ்தளம் | ,, | $1\frac{1}{2}$ |
| 10-ம் கர்ண கூடு | ,, | 3 |
| 10-ம் பிரஸ்தளம் | ,, | $1\frac{1}{4}$ |
| 11-ம் கர்ண கூடு | ,, | $2\frac{1}{2}$ |
| 11-ம் பிரஸ்தளம் | ,, | 1 |
| 12-ம் கர்ண கூடு | ,, | 2 |
| 12-ம் பிரஸ்தளம் | ,, | 1 |
| கெளம் | ,, | $1\frac{1}{4}$ |
| சிகரம் | ,, | $2\frac{3}{4}$ |
| ஸ்தூபி | ,, | $1\frac{1}{4}$ ஆக பங்கு 88 |

## 63 பஞ்சதளம் (15 நிலை) கோபுர லக்ஷண விபரம்

இது 113 பங்குடன் 31 வரிசை மானங்களாகின்றன.

அவை யாவன.

| | | |
|---|---|---|
| 1-ம் கர்ண கூடு | பங்கு | $8\frac{1}{2}$ |
| 1-ம் பிரஸ்தளம் | ,, | 4 |
| 2-ம் கர்ண கூடு | ,, | 8 |
| 2-ம் பிரஸ்தளம் | ,, | $3\frac{3}{4}$ |
| 3-ம் கர்ண கூடு | ,, | $7\frac{1}{2}$ |
| 3-ம் பிரஸ்தளம் | ,, | $3\frac{1}{2}$ |

| | | |
|---|---|---|
| 4-ம் கர்ண கூடு | ,, | 7 |
| 4-ம் பிரஸ்தளம் | ,, | 3¼ |
| 5-ம் கர்ண கூடு | ,, | 6½ |
| 5-ம் பிரஸ்தளம் | ,, | 3 |
| 6-ம் கர்ண கூடு | ,, | 6 |
| 6-ம் பிரஸ்தளம் | ,, | 2¾ |
| 7-ம் கர்ண கூடு | ,, | 5½ |
| 7-ம் பிரஸ்தளம் | ,, | 2½ |
| 8-ம் கர்ண கூடு | ,, | 5 |
| 8-ம் பிரஸ்தளம் | ,, | 2¼ |
| 9-ம் கர்ண கூடு | ,, | 4½ |
| 9-ம் பிரஸ்தளம் | ,, | 2 |
| 10-ம் கர்ண கூடு | ,, | 4 |
| 10-ம் பிரஸ்தளம் | ,, | 1¾ |
| 11-ம் கர்ண கூடு | ,, | 3½ |
| 11-ம் பிரஸ்தளம் | ,, | 1½ |
| 12-ம் கர்ண கூடு | ,, | 3 |
| 12-ம் பிரஸ்தளம் | ,, | 1¼ |
| 13-ம் கர்ண கூடு | ,, | 2½ |
| 13-ம் பிரஸ்தளம் | ,, | 1 |
| 14-ம் கர்ண கூடு | ,, | 2 |
| 14-ம் பிரஸ்தளம் | ,, | 1 |
| கௌம் | ,, | 1½ |
| சிகரம் | ,, | 3 |
| ஸ்தூபி | ,, | 1½ ஆகபங்கு 113 |

குறிப்பு:-துவிதளம் (2 நிலை) விமானம் முதல் மேல்கொண்டு வரும் ஒவ்வொரு தள கோபுரங்களுக்கும் கீழ்கண்ட பங்கு பிரகாரம் கர்ண கூடு பிரஸ்தளம் அளவை மாறி மாறி பங்கு அளவுபடி கொடுத்துக் கொள்ளவும்.

ஏகதளம் (1 நிலை) கோபுரம் முதல் எத்தனை நிலை கோபுர மானாலும் மேல் தளத்துக்கு கௌம் சிகரம் ஸ்தூபி என வருவதற்கு இதன் பங்குபடி அளவு செய்துக்கொள்ள வேண்டியது.

## 64 கர்ணகூடு உயரம் பங்கு அளவு லக்ஷண விபரம்

இது 9 பங்குடன் அநேக பிரிவினையுடன் 4 வரிசை மானங் களாகின்றன.

அவையாவன

| | | | |
|---|---|---|---|
| 1 வேதிகை | பங்கு | 1 | |
| 2 கால் | ,, | 1½ | |
| 3 போதிகை | ,, | 1 | |
| 4 அடுக்கு | ,, | 5½ | ஆக பங்கு 9 |

### I கர்ணகூடு வேதிகை பங்கு அளவு லக்ஷணம்

இது 7 பங்குடன் 5 வரிசை மானங்களாகின்றன.

அவையாவன

| | | | |
|---|---|---|---|
| கழுத்து | பங்கு | 3 | |
| கம்பு | ,, | ½ | |
| எழுதகம் (அதோபத்மம்) | ,, | 2 | |
| பலகை | ,, | 1 | |
| மேல்கம்பு | ,, | ½ | ஆக பங்கு 7 |

## II கர்ணகூடு கால் பங்கு அளவு லக்ஷணம்

இது 4 பங்குடன் 2 வரிசை மானங்களாகின்றன.

அவையாவன

| | | | |
|---|---|---|---|
| கால் | பங்கு | 3 | |
| கால் தொங்கல் | ,, | 1 | ஆக பங்கு 4 |

## III கர்ணகூடு போதிகை பங்கு அளவு லக்ஷணம்

இது 7 பங்குடன் 6 வரிசை மானங்களாகின்றன.

அவையாவன

| | | | |
|---|---|---|---|
| கீழ்கம்பு | பங்கு | $\frac{1}{2}$ | |
| ஊர்த்தபத்மம் | ,, | $1\frac{1}{2}$ | |
| கழுத்து | ,, | 1 | |
| அதோபத்மம் | ,, | $1\frac{1}{2}$ | |
| பலகை | ,, | 1 | |
| மேல்கழுத்து | ,, | $1\frac{1}{2}$ | ஆக பங்கு 7 |

## IV கர்ணகூடு அடுக்கு பங்கு அளவு லக்ஷணம்

இது 21 பங்குடன் 13 வரிசை மானங்களாகின்றன.

அவையாவன

| | | |
|---|---|---|
| உத்திரம் | பங்கு | 1 |
| எழுதகம் | ,, | 1 |
| கபோதகம் | ,, | 3 |
| யாளம் | ,, | 1 |
| வேதிகை | ,, | 1 |
| கழுத்து | ,, | 2 |

| | | |
|---|---|---|
| உத்திரம் | ,, | ¾ |
| எழுதகம் | ,, | ¾ |
| தூக்கோடு | ,, | 2 |
| கையுருவி | ,, | ¾ |
| பண்டிகை | ,, | 6 |
| கண்ணுடி சட்டம் | ,, | ¾ |
| பல்யபத்மம் | ,, | 1 ஆக பங்கு 21 |

குறிப்பு :-ஷை கர்ணகூடு பங்கு அளவு லக்ஷணபடி சாலை பஞ்சரம், செகத்திரசாலை, சொருவுசாலை, முதலியவைகளுக்கும் பங்கீடு செய்தல் வேண்டும். முன்வரும் முகப்பத்திரம் அகலம் 3-ல் 1-பங்கு வைக்கவும். தவிர, ஏறுசாலைகளுக்கு வாசக்கால் அகலங்களுக்கு உயரம் 1½ பங்கு வைத்து அதற்குமேல் கர்ணகூடு அடுக்குக்கு சொல்லிய பங்கு லக்ஷணம் போல் வைத்துக் கொண்டு பிரஸ்தளத்திலுள்ள யாள மட்டம் கலசம் உள்பட இருக்கும்படி அமைத்தல் வேண்டும். மீதியுள்ள கர்ண கூடு செகத்திர சாலை, சொருவு சாலை இவைகளுக்கு கர்ணகூடு பங்கு அளவுக்குமேல் 9-ல் 1 பங்கு கலசம் உயரம் அமைத்தல் வேண்டும். ஷை கலசங்கள் எல்லாம் பிரஸ்தளத்திலுள்ள கபோதகம் கீழ் மட்டத்துக்குள் பொருந்தும்படி அமைத்தல் வேண்டும். தவிர. பஞ்சரமாவது, பஞ்சரத்து அகல அளவில் 3-ல் 1 பங்கு முகப்பத்திரம் வைத்து கர்ணகூடு அடுக்கின் அளவு போல் தூக்கோடு வரையில் செய்து அதற்குமேல் நாசிமுக கூண்டு அமைத்தல் வேண்டும். பக்க பாந்து சுவர்களை தூக்கோடு அளவை கபோதக மாக செய்து அதன் மேல் யாளம் செய்து மீதியுள்ள பங்குகளிக்கு உள் நாட்டு கழுத்து அமைத்தல் வேண்டும். ஷை கழுத்தானது கர்ணகூடு அடுக்கு பங்கிலுள்ள கழுத்து பிரிக்கும் உள் அளவை கொண்டு மேலேயுள்ள தூக்கோடுக்கு மேல் உள் நாட்டு கழுத்து பிரித்தல் வேண்டும். ஷை கழுத்து உயரமானது கர்ணகூடு பங்கு மட்டம் சரியாய் இருத்தல் வேண்டும்.

## 65 பிரஸ்தள உயர பங்கு அளவு லக்ஷண விபரம்

இது 16 பங்குடன் 6 வரிசைமானங்களாகின்றன.

அவையாவன

| | | |
|---|---|---|
| உத்திரம் | பங்கு | 3 |
| கம்பு | ,, | 1 |
| எழுதகம் | ,, | 3 |
| கம்பு | ,, | 1 |
| கபோதகம் | ,, | 5 |
| யாளம் | ,, | 3 ஆக பங்கு 16 |

குறிப்பு :-ஷை எழுதகத்தில் மதியம் என்ற வேலைபாடு எழுதகத்துக்கு பதில் செய்யலாம் பிரஸ்தளம் அகலத்தில் 3-ல் 1 பங்கு மையத்தில் முகபத்திரம் அமைக்கலாம் தவிர கபோதக வரிசையில் கர்ணகூடு பஞ்சரம் செகத்திர சாலை சொருவு சாலை மையசாலை. இவைகளின் கால்கள் மையமாக (நாசிமுக கூண்டுகள் அமைத்தல் வேண்டும்.

## 66 கெனம் உயர பங்கு அளவு லக்ஷண விபரம்

இது 4 பங்குடன் 3 வரிசைமானங்களாகின்றன.

அவையாவன

| | | |
|---|---|---|
| வேதிகை | பங்கு | 1 |
| கால் | ,, | 2 |
| போதிகை தாடி குடம் பலகை | ,, | 1 ஆக பங்கு 4 |

## 67 சிகரம் உயர பங்கு அளவு லக்ஷண விபரம்

இது 44 பங்குடன் 11 வரிசைமானங்களாகின்றன.

அவையாவன

| | | |
|---|---|---|
| உத்திரம் | பங்கு | 2 |
| கம்பு | ,, | 1 |
| எழுதகம் | ,, | 2 |
| தூர்க்கோடு | ,, | 3 |
| ஊர்த்தபத்மம் | ,, | 2 |
| கழுத்து (அல்லது) மாலை கட்டு | ,, | 1 |
| அதோபத்மம் | ,, | 2 |
| பண்டிகை | ,, | 22 |
| மாலை கட்டு | ,, | 1 |
| கண்ணடி சட்டம் | ,, | 2 |
| புல்ய பத்மம் (மஹாபத்மம்) | ,, | 6 ஆக பங்கு 44 |

## 68 ஸ்தூபி (கலசம்) உயர பங்கு அளவு லக்ஷணம்

இது 25 பங்குடன் 11 வரிசைமானங்களாகின்றன.

அவையாவன

| | | |
|---|---|---|
| மஹாபத்மம் | பங்கு | 5 |
| கண்டம் | ,, | 1 |
| அரடா | ,, | 3 |
| கண்டம் | ,, | 1 |
| குடம் | ,, | 7 |
| கண்டம் | ,, | ½ |
| அராடா | ,, | 2 |
| கண்டம் | ,, | ½ |
| அலர் | ,, | 1 |

கண்டம் ,, $\frac{1}{2}$

கதலிப்பூ ,, $3\frac{1}{2}$ ஆக பங்கு 25

## 69 திரு உருவம் செய்யும் தாள லக்ஷண விபரம்

சிலாவினுலும், தாம்பிரத்தினுலும், சுதையினுலும், ரத்தினங்களினுலும், சித்திரத்தினுலும், தந்தத்தினுலும், மரத்தினுலும் விக்கிரகங்கள் செய்யப்பட்ட தாள லக்ஷணம்.

1. ஈஸ்வரமூர்த்தங்கள் எல்லாம் உத்தம மான பத்து தாள பிரமாணத்தால் செய்தல் வேண்டும்.

2. ஈஸ்வரி அம்சமூர்த்தங்கள், விக்கினேசுரர், கந்தர் நந்தி, சண்டேசுரர், இவர்களை மத்திபமான பத்து தள பிரமாணத்தால் செய்தல் வேண்டும்.

3. பிர்மா, விஷ்ணு, லக்ஷிமி, வாகீஸ்வரி, துர்க்கை சூரியன், சப்தமாதாக்கள், இவர்களை அதமமான பத்து தாள பிரமாணத்தால் செய்தல் வேண்டும்.

4. மூத்தவள், பிதுர்க்களுடன், நக்ஷத்திராதிபதிகள் இவர்களையும், அஸ்வினியையும், பூமிதேவியையும், ரிஷிகளையும், க்ஷேத்திர பாலகர்களையும், பாலஸ்கந்தர், கிருஷ்ணன். குண்டோதரன் குழந்தை பருவமுள்ள உருவங்கள் முதயவைவி உத்தம மான ஒன்பது தவதள பிரமாணத்தால் செய்தல் வேண்டும்.

5. உலோக பாலகர்கள், வசுக்கள், ஆகிய எட்டு மூர்த்திகளையும், மத்திப மான ஒன்பது தாள பிரமாணத்தால் செய்தல் வேண்டும்.

6. யக்ஷகர்களையும், அப்ஸரஸாக்கள், மருத்து கணங்கள் வித்தியாதர்களையும், ராக்ஷஸர்களையும், கந்தர்வர்களையும், சித்தர்களையும், சாரணர்களையும், அசுரர்களையும்,

மேற்படி அதமமான ஒன்பதுதாள பிரமாணத்தால் செய்தல் வேண்டும்.

7. மனிதர்களை, எட்டுதாள பிரமாணத்தால் செய்தல் வேண்டும்.

8. பிசாசர்களை, ஏழு தாள பிரமாணத்தாலும்.

9. குப்ஜர்களை, ஆறு தாள பிரமாணத்தாலும்.

10. பூதகணங்கள், விநயகர், குழந்தை பருவமுள்ள கிருஷ்ணன் முதலியவைகளை பஞ்சதரள பிரமாணத்தால் செய்தல் வேண்டும்.

11. சாலர்களை, நான்கு தாள பிரமாணத்தாலும்.

12. கின்னரர், கிம்புருடர்,முதலியவைகளை மூன்று தாளம் அல்லது இரண்டு தரளம் பிரமாணத்தாலும்.

13. கபந்தம், முதலியவைகளை 2 பாகமாக எக தாள பிரமாணத்தால் செய்தல் வேண்டும்.

## 70 திருஉருவங்கள் அமைப்பின் பங்கு லக்ஷண விபரம்

எந்த அம்சமான உருவங்களும் தன் கையால் எட்டு ஜான் இருக்கும்.

அவையாவன

உச்சியிலே துவக்கித் தாழ்வாய்க் கட்டைவரைக்கும் ஒரு ஜாண் உயரம். அந்த ஜானை நாலாய்ப் பிரித்து உச்சி துவக்கி நெற்றிமேற் புறமட்டும் ஒரு பங்கு. அவ்விடந் துவக்கி மூக்கின் தண்டு துவக்க மட்டம் ஒரு பங்கு. அவ்விடந் துவக்கி மூக்கின் நுனி மட்டம் ஒரு பங்கு. அவ்விடந் துவக்கி தாழ்வாய்க் மட்டும் ஒரு பங்கு. அப்படியே உச்சிக் கழுத்திலிருந்து தொண்டைக் குழி மட்டம் நாலில் ஒரு பங்கும், தாழ்வாய்க்

கட்டை துவக்கி யீரற்குலை மட்டும் ஒரு ஜாண். அவ்விடந் துவக்கி தொப்புள் மட்டும் ஒரு ஜாண். அவ்விடந் துவக்கி குய்யத்தான மட்டும் ஒரு ஜாண். அவ்விடந் துவக்கி முழங் காலுக்குக்கு மேல் மட்டம் முட்டி அளவு வரையில் இரண்டு ஜாண். அதிலிருந்து குதிக்கால் மட்டும் இரண்டு ஜாண் ஆகும். இப்படிபட்ட அம்சத்தின் அளவுள்ள கையைக் கூடின மாத்திரம் விரித்தால் அந்த பாகத்தின் அளவுக்கும் அவன் சரீர உயரத்துக்கும் சரியாயிருக்கும். நெஞ்சினுடைய நடுவே துவக்கித் தோள்பட்டை முடிவு மட்டும் ஒரு ஜாண். அவ்விடந் துவக்கி முழங்கை மட்டும் ஒரு ஜாண். அவ்விடந் துவக்கி மணிகட்டு வரை ஒரு ஜாண். அவ்விடந் துவக்கி பாம்பு விரல் நுனி மட்டும் ஒரு ஜாண். மெத்த அகல மாயிருக்கிற விலா இரண்டு ஜாண் திகளமும், அகலமும் கொஞ்சமாயிருக்கிற விலா இரண்டு, முகவளவும், உண்டு. தலை, மணிக்கட்டு துவக்கி விரல் நுனியும், பாதமும், ஓரளவாக யிருக்கும். நெற்றி உயரமும், மூக்கும், காதும், பெரு விரல் திகளமுஞ் சரியாயிருக்கும். கண்ணும், நாசியும், வாயும், சரி அளவு மேற்படி அளவுகள் சிறு குழந்தை பருவமுள்ள அம்சங் களுக்கு இருக்காது.

சிறு குழந்தை பருவமுள்ள அம்சங்களுக்கு ஐந்து தலையளவு உண்டு. அது தலை துவக்கி குய்ய ஸ்தான மட்டும் மூன்று தலையும் அவ்விடந் துவக்கி பாத மட்டும் இரண்டு தலை உயரமும் இருக்கும்.

1. நாபியிலிருந்து மூக்கு நுனி வரைக்கும் உள்ள தூரம் ஸ்தனங்களினிடை இருப்பதைப் போலிரு மடங்கு இருக்கும்.

2. சிரசின் சுற்றளவு நாசி காக்கிரக முதற் கொண்டு நாபி வரைக்குமுள்ள தூர மாகும்.

3. கண்டத்தின் சுற்றளவு இரண்டு தோள்களிற்கும் நடுவிலுள்ள தூரத்திற்குமுள்ள தூர மாகும்.

4. கைகள் முழங்கால் வரைக்கும் நீண்டிருப்பது (ஆஜானு பாஹுத்துவம்) அபூர்வமானது.

5. முகவாய்க் கட்டையிலிருந்து புருவம் வரையிலுள்ள தூரம் நெற்றியினளவாகும்.

6. முகவாய்க்கட்டையிலிருந்து மூக்குநுனி வரையிலுள்ள தூரம். புருவங்களின் மத்தியிலிருந்து முகத்தின் குறுக்களவுக்கு சரியாய் இருக்கும்,

## 71 கணபதி விக்கிரக அளவு லக்ஷண விபரம்

பாத முதல் லல்லாடம் வரையில் கூடின உயரத்தை 64 பங்கு செய்யவும். (பஞ்சதாள அளவு)

அவையாவன

| | | | |
|---|---|---|---|
| சிரசு (லல்லாடம்) | பங்கு | 3 | |
| தலை | ,, | 12 | |
| கழுத்து | ,, | 2 | |
| மார்பு | ,, | 11 | |
| வயிறு | ,, | 12 | |
| கடிகை | ,, | 6 | |
| துடை | ,, | 6 | |
| முட்டி | ,, | 3 | |
| முழங்கால் | ,, | 6 | |
| பாதம் | ,, | 3 | ஆக பங்கு 64 |

பரப்பு பங்கு லக்ஷணம்

| | | |
|---|---|---|
| முகம் | பங்கு | 10 |
| கன்னம் | ,, | 12 |

| | | |
|---|---|---|
| கழுத்து | ,, | 6 |
| மார்பு | ,, | 15 |
| வயிறு | ,, | 20 |
| கடிகை | ,, | 20 |
| துடை | ,, | 10 |
| முட்டி | ,, | 9 |
| கணுக்கால் | ,, | 7 |
| பாதம் | ,, | 9 |
| கை நிகளம் | ,, | 20 |
| தும்பிக்கை நிகளம் | ,, | 20 |
| அஸ்தம் பரப்பு | ,, | 9 |
| புஜம் பரப்பு | ,, | 9 |
| முட்டி | ,, | 8 |
| மணிபந்தம் | ,, | 7 |

## 72. சிவலிங்க வடிவ பெயரின் விபரம்

(சிவலிங்கம் 6 வகையாக கூறப்படும்.)

அவையாவன :

I. தானாக உற்பத்தி செய்யப்பட்டதற்கு சுயம்பு லிங்கமாகும்.

II. பரமசிவத்தால் சமஸ்காரம் செய்யப்பட்டதற்கு பாண லிங்கமாகும்.

III. தேவர்களால் ஸ்தாபிதம் செய்யப்பட்டதற்கு தைவத லிங்கமாகும்.

IV. ருஷிகளால் சமஸ்காரம் செய்யப்பட்டதற்கு ஆரிஷலிங்கமாகும்.

V. கணங்களால் சமஸ்காரம் செய்யப்பட்டதற்கு காணவம் லிங்கமாகும்.

VI. மனிதர்களால் ஸ்தாபிதம் செய்யபட்டதற்குமானிடலிங்கம்

என ஆறு விதமாக கூறப்பட்டது.

## 73. சிவலிங்கம் செய்யும் கற்கள் விபரம்:

சந்திரகாந்தத் தேனுந்தன பனகாந்தத்திலேனுஞ்
சுந்தர சயிலந்தன்னிற்றேன்றிய சிலையிலேனுஞ்
வந்துறுபடி கத்தேனும்மகிழ் வாணலிங்கத்தேனு
முந்தழகுறுமி லிங்கமொன்று கொள்கிற்கமன்னே

(இ-ள்) சந்திரகாந்தக்கல் அதாவது சந்திரனைக் கண்டால் நீரையுமிழுங்கல் - சூரியகாந்தக் கல் அதாவது சூரியனைக்கண்டால் நெருப்பையுமிழுங்கல். ஸ்ரீசைலமலையிலுள்ள கல்லிலாயினும், படிக்கல்லிலாயுனுலும் வாணலிங்கத்திலாயினும், நர்மதாநதியிலுள்ள சிவலிங்கத்திலாயினும், சிவலிங்கம் அடியில் கண்ட அளவு விதிபடி நிர்மானிக்கவும்.

## 74. சிவலிங்கம் செய்யும் அளவு லக்ஷணம்

சுருதீ சுலோகம்

லிங்கவிருத்த சமபீடம் தீர்க்கம்
விஸ்தார மேவச
தர்ததம் கோமுகம்சைவ
பஞ்சத்சூரமுதாஹருதம்.

(இ-ள்) லிங்கத்தின்ருத்திர பாகத்தின் சுற்றளவை எடுத்து விஷ்ணுபீடம்-பிரமமபீடம் இவைகளின் குறுக்களவு சரியாகவும் இதில் பாதி அளவு எடுத்து விஷ்ணுபீடத்திலுள்ள கோமுகத்தின் நிகளம் வைக்கவும். தவிற ஷை ருத்திரபாகத்தின் சுற்றளவைக் கொண்டு லிங்கத்தின் உயரம் வைக்கவும்.

| பிரம்பாகம் | விஷ்ணுபாகம் | ருத்திரபாகம் |
|---|---|---|
| 1 பங்கு | 1 பங்கு | 1 பங்கு |
| 7 ,, | 8 ,, | 9 ,, |
| 4 ,, | 5 ,, | 6 ,, |
| 5 ,, | 6 ,, | 7 ,, |
| 6 ,, | 7 ,, | 8 ,, |
| 7 ,, | 8 ,, | 9 ,, |
| 7 ,, | 7 ,, | 8 ,, |
| 5 ,, | 5 ,, | 6 ,, |
| 4 ,, | 4 ,, | 5 ,, |
| 3 ,, | 3 ,, | 2 ,, |

மேல்சொன்ன பங்கு லக்ஷணங்களில் யேதாவது 1 அளவில் லிங்கம் செய்தல் வேண்டும்.

## 75. சிவலிங்க வடிவ திருக்கோல உருவங்களின் பெயர்கள்

தவிற; ருத்திரபாகம் உயர்ந்து இருக்கும் லிங்கம் நின்ற திருக்கோலம்.

ருத்திரபாகம் சம அளவுள்ள லிங்கம் வீற்றிருந்த திருக் கேலாம்.

ருந்திரபாகம் குறைந்த அளவுள்ள லிங்கம் சயன திருக் கோலம் ஆகும்.

தவிறவும், ஷை லிங்கத்தின் பிரம - விஷ்ணுபீடம் சதுரமாக இருப்பது சாலோகலிங்கமாகும்.

லிங்கத்தின் பிரம - விஷ்ணு - ருத்திர பாகங்கள் விருத்தமாக இருப்பது சாமீபலிங்கமாகும்.

லிங்கத்தின் ருத்திரபாகம் முகத்துடன் கூடியது சாருப லிங்கமாகும்.

லிங்கத்தின் ருத்திரபாகம் 8 பட்டையாக கூடியது சாயுக்ஷிய லிங்கமாகும்.

## 76 தச்தாள புருஷமான விக்கிரக அளவு லக்ஷணம்

பாத முதல் லல்லாடம் வரையில் கூடிய உயரத்தை 124 பங்கு செய்யவும்.

அவையாவன :

| | | |
|---|---|---|
| லல்லாடம் | பங்கு | 4 |
| முகம் | ,, | 13½ |
| கழுத்து | ,, | 4 |
| மார்பு | ,, | 13½ |
| வயிறு | ,, | 13½ |
| இடுப்பு | ,, | 13½ |
| துடை | ,, | 27 |
| முட்டி | ,, | 4 |
| முழங்கால் | ,, | 27 |
| பாதம் | ,, | 4 ஆக பங்கு 124 |

## 77. தசதாள ஸ்திரீமான விக்கிரக அளவு லக்ஷணம்

பாதமுதல் லல்லாடம் வரையில் கூடியஉயரத்தை 120 பங்கு செய்யவும்.

அவை யாவன :

| | | |
|---|---|---|
| லல்லாடம் | பங்கு | 4 |
| முகம் | ,, | 13 |
| கழுத்து | ,, | 4 |
| மார்பு | ,, | 13 |

| | | |
|---|---|---|
| வயிறு | ,, | 13 |
| இடுப்பு | ,, | 13 |
| துடை | ,, | 26 |
| முட்டி | ,, | 4 |
| முழங்கால் | ,, | 26 |
| பாதம் | | 4 ஆக பங்கு 120 |

பரப்பளவு விபரம்.

| | | |
|---|---|---|
| முகம் பரப்பு | பங்கு | 13 |
| கழுத்து பரப்பு | ,, | 10 |
| புஜம் பரப்பு | ,, | 39 |
| மார்பு பரப்பு | ,, | 20 |
| வயிறு பரப்பு | ,, | 13 |
| கடிகை பரப்பு | ,, | 26 |
| துடைத் (தனி) பரப்பு | ,, | 13 |
| முட்டி பரப்பு | ,, | 7 |
| முழங்கால் பரப்பு | ,, | 6 |
| கணுக்கால் பரப்பு | ,, | 4 |

## 78 நவதாள புருஷமான விக்கிரக அளவு லக்ஷணம்

பாதம் முதல் லல்லாடம் வரையில் கூடிய உயரத்தை 112 பங்கு செய்யவும்.

அவையாவன :

| | | |
|---|---|---|
| லல்லாடம் | பங்கு | 4 |
| தலை | ,, | 12 |

| | | |
|---|---|---|
| கழுத்து | ,, | 4 |
| மார்பு | ,, | 12 |
| வயிறு | ,, | 12 |
| கடிகை | ,, | 12 |
| துடை | ,, | 24 |
| முட்டி | ,, | 4 |
| முழங்கால் | ,, | 24 |
| பாதம் | ,, | 4 ஆக பங்கு 112 |

## 79 நவதாள ஸ்திரீமான விக்கிரக அளவு லக்ஷணம்

பாதம் முதல் லல்லாடம் வரையில் கூடிய உயரத்தை 108 பங்கு செய்வும்.

அவையாவன :

| | | |
|---|---|---|
| லல்லாடம் | பங்கு | 4 |
| தலை | ,, | 12 |
| கழுத்து | ,, | 4 |
| மார்பு | ,, | 12 |
| வயிறு | ,, | 12 |
| கடிகை | ,, | 12 |
| துடை | ,, | 24 |
| முட்டி | ,, | 4 |
| முழங்கால் | ,, | 24 |
| பாதம் | ,, | 4 ஆக பங்கு 108 |

## 80 அஷ்டதாள புருஷமான விக்கிரக அளவு லக்ஷணம்

பாதம் முதல் லல்லாடம் வரையில் கூடிய உயரத்தை 100 பங்கு செய்யவும்.

அவையாவன :—

| | | |
|---|---|---|
| லல்லாடம் | பங்கு | 4 |
| முகம் | ,, | 12 |
| மார்பு | ,, | 12 |
| வயிறு | ,, | 12 |
| கடிகை | ,, | 12 |
| துடை | ,, | 24 |
| முழங்கால் | ,, | 24 ஆக பங்கு 100 |

## 81 அஷ்டதாள ஸ்திரீமான விக்கிரக அளவு லக்ஷணம்

பாதம் முதல் லல்லாடம் வரையில் கூடிய உயரத்தை 96 பங்கு செய்யவும்.

அவை யாவன :

| | | |
|---|---|---|
| லல்லாடம் | பங்கு | 4 |
| முகம் | ,, | 12 |
| மார்பு | ,, | 12 |
| வயிறு | ,, | 12 |
| கடிகை | ,, | 12 |
| துடை | ,, | 22 |
| முழங்கால் | ,, | 22 ஆக பங்கு 96 |

## 82. சப்ததாள புருஷமான விக்கிரக அளவு லக்ஷணம்

பாத முதல் லல்லாடம் வரையில் கூடிய உயரத்தை 88 பங்கு செய்யவும்.

அவை யாவன

| | | |
|---|---|---|
| லல்லாடம் | பங்கு | 4 |
| முகம் | ,, | 12 |
| மார்பு | ,, | 12 |
| வயிறு | ,, | 12 |
| கடிகை | ,, | 12 |
| துடை | ,, | 18 |
| முழங்கால் | ,, | 18 ஆக பங்கு 88 |

## 83. சப்ததாள ஸ்திரீமான விக்கிரக அளவு லக்ஷணம்

பாத முதல் லல்லாடம் வரையில் கூடிய உயரத்தை 84 பங்கு செய்யவும்.

அவையாவன

| | | |
|---|---|---|
| லல்லாடம் முகம் | பங்கு | 12 |
| மார்பு | ,, | 12 |
| வயிறு | ,, | 12 |
| கடிக்க | ,, | 12 |
| துடை | ,, | 18 |
| முழங்கால் | ,, | 18 ஆக பங்கு 84 |

## 84. சஷ்டமதாள புருஷமான விக்கிரக அளவு லக்ஷணம்

பாத முதல் லல்லாடம் வரையில் கூடிய உயரத்தை 76 பங்கு செய்யவும்.

அவையாவன

| | | | |
|---|---|---|---|
| லல்லாடம் | பங்கு | 4 | |
| முகம் | ,, | 12 | |
| மார்பு | ,, | 8 | |
| வயிறு | ,, | 8 | |
| கடிகை | ,, | 8 | |
| துடை | ,, | 18 | |
| முழங்கால் | ,, | 18. | ஆக பங்கு 76 |

## 85. சஷ்டமதாள ஸ்திரீமான விக்கிரக அளவு லக்ஷணம்

பாத முதல் லல்லாடம் வரையில் கூடிய உயரத்தை 72 பங்கு செய்யவும்.

அவையாவன

| | | | |
|---|---|---|---|
| லல்லாடம் | பங்கு | 4 | |
| முகம் | ,, | 12 | |
| மார்பு | ,, | 8 | |
| நாபி | ,, | 8 | |
| கடிகை | ,, | 8 | |
| துடை | ,, | 16 | |
| முழங்கால் | ,, | 16 | ஆக பங்கு 72 |

## 86 பஞ்சதாள புருஷமான விக்கிரக அளவு லக்ஷணம்

பாதம் முதல் லல்லாடம் வரையில் கூடிய உயரத்தை 64 பங்கு செய்யவும்.

அவையாவன

| | | |
|---|---|---|
| லல்லாடம் | பங்கு | 2 |
| முகம் | ,, | 9 |
| கழுத்து | ,, | 2 |
| மார்பு | ,, | 8 |
| வயிறு | ,, | 8 |
| கடிகை | ,, | 7 |
| துடை | ,, | 12 |
| முட்டி | ,, | 2 |
| முழங்கால் | ,, | 12 |
| பாதம் | ,, | 2 ஆக பங்கு 64 |

பரப்பு பங்கு லக்ஷணம்

| | | |
|---|---|---|
| முகம் | பங்கு | 9 |
| கழுத்து | ,, | $6\frac{3}{4}$ |
| மார்பு | ,, | 18 |
| வயிறு | ,, | $13\frac{1}{2}$ |
| கடிகை | ,, | 18 |
| துடை | ,, | 9 |
| முட்டி | ,, | 8 |
| முழங்கால் | ,, | 7 |

| | | |
|---|---|---|
| பாதம் | ,, | $1\frac{1}{2}$ |
| மேல்கை | ,, | $1\frac{1}{4}$ |
| முழங்கை | ,, | $1\frac{1}{4}$ |
| அஸ்தம் | ,, | 1 |

## 87 பஞ்சதாள ஸ்திரீமான விக்கிரக அளவு லக்ஷணம்

பாதம் முதல் லல்லாடம் வரையில் கூடிய உயரத்தை 60 பங்கு செய்யவும்.

அவையாவன

| | | |
|---|---|---|
| லல்லாடம் | பங்கு | 2 |
| முகம் | ,, | 9 |
| கழுத்து | ,, | 2 |
| மார்பு | ,, | 8 |
| வயிறு | ,, | 8 |
| கடிகை | ,, | 7 |
| துடை | ,, | 12 |
| முழங்கால் | ,, | 12 ஆக பங்கு 60 |

## 88. விக்கிரகங்களின் ஒரு கை அஸ்தம் 28 வகையின் விபரம்

### 1. பதாக அஸ்தம் விபரம்


பதாகஅஸ்தம்

எல்லா விரல்களையும் அதது இருக்கிறபடி நீட்டிச் சேர்த்தும் கட்டை விரல் மட்டும் இரண்டாங் கணுவில் மடக்கியும் இருத்தலாம்.

இதை அபய அஸ்தம் எனவும் கூறுவர்.

இந்த அஸ்த செய்குறியாவன

ஒரு வஸ்துவை நிஷேதித்தல் அல்லது நிந்தித்தல்
குதிரையிலிருந்து வெட்டுதல்
படுப்பதுபோல் காட்டுதல்
கீர்த்தி பிரதாபத்தை சொல்லுதல்
அனுக்கிரகம் பண்ணுதல்
கதவை திறத்தல் மூடல்
சந்தன பூசிக்கொள்ளுதல்
மெதுவாக பேசு என சொல்லுவதுபோல் பாவனைக்காட்டல்
ஆசீர்வாதம் செய்தல்
மத்தளம் வாசித்தல்
பக்ஷிகள் பறக்கிறதைக் காட்டுதல்
தரை மெழுகுதல்
அவற்றில் சுண்ணும்பு பூசுதல்
நீந்துதல்
வாவெனல்
மார்பை தட்டுதல்
ரேகை காட்டுதல்
சிவலிங்கத்துக்கு அபிஷேகம் செய்தல்
பந்தடித்தல்
ஒருவரை அரைதல்
துக்க முற்ருேர் முகத்தை மறைத்தல்
வாய்பொத்தி சமாசாரம் கேட்குதல்
பிசாசு ஆட்டத்தில் தரையில் கையூன்றுதல்
தயிர் கடைதல்
சுரம் வந்தோரை தொட்டுப் பார்த்தல்
நினைத்த காரியம் கூடுமென பாவனைக் காட்டல்
முதலியவைபதாக அஸ்த பிரிவுமானமாக உள்ளது.

---

## 2. திரிபதாக அஸ்த விபரம்


திரிபதாக அஸ்தம்

கட்டை விரல் மோதிரவிரல் இதுகள் தவிர மற்ற விரல்களை இருக்கிறபடி நீட்டி மோதிர விரல் இரண்டாங் கணுமுதல் மடக்கி அதன் நுனி எதிரிலிருப்பவருக்குத் தெரியும்படிக்கும் கட்டை விரலை இருக்கிறபடி சேர்த்துக் கொஞ்சம் விளைவாக இருத்தலாம்.

இந்த அஸ்த செய்குறியாவன

மகரிகா பத்திர மெழுதுதல்
பாணம அல்லது அம்பு விடுதல்
அம்பு இழுத்தல்
மோதிர விரலால் கண்மையிடுதல்
திருநாமம் திலர்தம் இடுதல்
ஜவ்வாது புனுகு பூசுதல்
முதலியவை திரிபதாக அஸ்த பிரிவுமானமாக உள்ளது.

## 3. அர்த்தபதாக அஸ்த விபரம்


அர்த்தபதாக அஸ்தம்

ஆள்க்காட்டி விரல் பாம்பு விரல் இவ்விரண்டையும் இருக்கிறபடி சேர்த்து நீட்டி மோதிர விரல் சுண்டு விரல் இந்த இரண்டையும் இருக்கிறபடி சேர்த்து இரண்டாங் கணு முதல் மடக்கிக் கட்டை விரலை இருக்கிறபடி சேர்த்துக் கொஞ்சம் வளைவாக இருத்தலாம்.

இந்த அஸ்த செய்குறி யாவன

உடுக்கை அடித்தல்

கத்தியைச் சுற்றிக் காட்டுதல்

தேங்காய் எடுத்து நீராட்டிப் பார்த்தல்

ஷை அஸ்தங்களில் மான், மழு, வஜ்ஜிரசத்தி, சக்கரம், சங்கு, முதலிய ஆயுதங்கள் வைப்பதற்கும் தகுதியுள்ளது.

முதலியவைகள் அர்த்தபதாக அஸ்த பிரிவுமானமாக உள்ளது.

## 4. கர்த்தரீமுக அஸ்த விபரம்


கர்த்தரிமுகஅஸ்தம்

மோதிர விரல், சுண்டு விரல் இவ்விரண்டையும் இருக்கிறபடி சேர்த்து இரண்டாங்கணு முதல் மடித்து ஆள்காட்டி விரல் பாம்பு விரல் இவ்விரண்டையும் இருக்கிற படி சேர்த்து நீட்டி ஆள்காட்டி விரல் பாம்பு விரல் நகத்தைப் பார்க்கும்படி கோணலாய்ப் புறட்டிக் காட்ட விரலை இருக்கிறபடி சேர்த்துக் கொஞ்சம் மடக்குதல்

இந்த அஸ்த செய்குறியாவன

கமலம் பிடிப்பது, அங்குஷம், பாசம், சூலம் முதலிய ஆயுதங்கள் பிடிக்க தகுதியுள்ளது.

முதலியவைகள் கர்த்தரிமுக அஸ்த பிரிவுமானமாக உள்ளது.

## 5. மயூர அஸ்த விபரம்




மோதிர விரல் மூன்ருங் கணு வின் உள்ப்புறத்தில் கட்டை விரல் மூன்ருங் கணுவின் உள்புறத்தைப் பொருத்தி மற்ற விரல்களை இருக் கிற இடத்திலேயே ஒன்ருே டொன்று பொருந்தாமல் பிரித்து நீட்டுதலாம்.

## 6. அர்த்த சந்திர அஸ்த விபரம்




கட்டை விரல் தவிா மற்ற விரல்களை இருக்கிறபடி சேர்த்து நீட்டிக் கட்டை விரலை அதுபோன போக்குப் பிரித்து நீட்டல்.

இந்த அஸ்த செய்குறியாவன :

கழுத்தில் கைகொடுத்துத் தள்ளுதல்

தேவதைகளுக்கு அபிஷேகம் செய்தல்

தனக்குத்தானே சிந்தித்தல்

ஒட்டைச்சாண் அளத்தல்

தலைநோயுக்கு நெற்றியைப் பிடித்தல்

மூக்கில் கையை வைத்து சுரம் பார்த்தல்

கேட்கக்கூடாத வார்த்தைக்கு காதை மூடுதல்

பெண்கள் கழுத்துக்கு மஞ்சள் பூசுதல்

இடுப்பின் அளவு பார்த்தல்

முதலியுவைகள் அர்த்த சந்திர அஸ்த பிரிவுமானமாக உள்ளது.

## 7. அராள அஸ்த விபரம்




பாம்பு விரல், மோதிர விரல், சுண்டுவிரல் இம்மூன்றையும் இருக்கிறபடி சேர்த்து நீட்டிக் கட்டை விரல் நுனியை ஆள்காட்டி விரல் இரண்டாங் கணுவிற்குள் பட்ட விடத்தில் பொருத்தி ஆள்க்காட்டி விரலை மடக்குதல்.

இந்த அஸ்த செய்குறியாவன

அமிர்தம், ஜலம், பானம் செய்தல்

ஆசமனம் செய்தல்

ஜெபமாலை உருட்டுதல்

முதலியவைகள் அராள அஸ்த பிரிவுமானமாக உள்ளது.

## 8. சுக துண்ட அஸ்த விபரம்




பாம்பு விரல், சுண்டு விரல் இவ்விரண்டையும் அதது இருக்கிற படி நீட்டி மோதிர விரலை இரண்டாங் கணு முதல் மடக்கி ஆள் காட்டி விரலைக் கட்டை விரல் நுனி கவிய வளைத்துக் காட்டுதல்.

இந்த அஸ்த செய்குறியாவன

சூலம், ஈட்டி முதலியவை பிரயோகிக்கும் செய்குறியாகும்.

## 9. முஷ்டி அஸ்த விபரம்




கட்டை விரல் தவிர மற்ற விரல்களை இருக்கிறபடி சேர்த்து உள்ளங் கைக்குள் மடக்கிப் பாம்பு விரல்மேல் கட்டை விரலைப் பொருத்துதல்.

இந்த அஸ்த செய்குறியாவன

மல்லர்கள் யுத்தம் செய்தல்

வில் பிடித்தல், வாள் பிடித்தல், தண்டம் பிடித்தல், இரம்பம் பிடித்தல், திருச்சின்னம், எக்காளம் பிடித்தூதுதல். விநாயகரை வணங்கிக் குட்டிக்கொள்ளுதல்

முதலியவைகள் முஷ்டி அஸ்த பிரிவுமானமாக உள்ளது.

## 10. சிகர அஸ்த விபரம்




கட்டை விரல் தவிர மற்ற விரல்களை இருக்கிறபடி சேர்த்து உள்ளங்கைக்குள் மடக்கி கட்டை விரல் போனபோக்குக்கு மேலே நீட்டுதல்.

இந்த அஸ்த செய்குறியாவன

பிதுர்தர்ப்பனம் செய்தல்
முடிச்சை பிடித்திழுத்தல்
பூஜைமணியாட்டுதல்

அலகு, அங்குசம், வேல், ஈட்டி, சூலம், எழுத்தணி, உலக்கை இதுகள் பிடித்தல், உடம்பு வலிக்குக் குத்துதல், தலைமயிரைக் கூட்டுதல்,

முதலியவைகள் சிகர அஸ்த பிரிவுமானமாக உள்ளது.

## 11 கபித்த அஸ்த விபரம்




பாம்பு விரல், மோதிர விரல், சுண்டு விரல் இம்மூன்றையும் இருக்கிறபடி சேர்த்து உள்ளங் கைக்குள் மடக்கிப் பாம்பு விரலை ஒட்டிக் கட்டை விரலை நீட்டி அதைக் கவர்ந்ததுபோல் ஆள் காட்டி விரலை வளைத்தல்.

இந்த அஸ்தம் செய்குறியாவன :

வேஷ்டி முதலானது உடுத்திக்கொள்ளுதல்

தாளம் பிடித்தல், பால் கறத்தல், பூச்செண்டு பிடித்துக் கொள்ளுதல், தூபதீபம் கொடுத்தல், விசிறி, கவரி, ஆலவட்டம் பாசம், அங்குசம், குறடு இதுகள் பிடித்தல். ஆலாத்தி காட்டுதல் எழுத்தாணி தீட்டுதல், பூக்கிள்ளல், ஜெபமணி உருட்டுதல் திராசுப் பிடித்தல், வாத்தியங்களை கோல்கொண்டடித்தல் ராட்டினம் சுற்றுதல், கவண்டுக்கல் வீசுதல், மணி கோர்த்தல் பல் துலக்குதல், வெற்றிலைப் போட்டுக்கொள்ளுதல்.

முதலியவைகள் கபித்த அஸ்த பிரிவுமானமாக, உள்ளது.

## 12. கடகாமுக அஸ்த விபரம்




மோதிர விரல், சுண்டு விரல் இந்த இரண்டையும் இருக்கிறபடி சேர்த்து உள்ளங்கைக்குள் மடக்கி ஆள்காட்டி விரல், பாம்பு விரல் இந்த இரண்டையும் இருக்கிறபடி சேர்த்து நீட்டி கட்டை விரல் நுனியில் பொருத்துதலாம்.

இந்த அஸ்த செய்குறியாவன

பூப் பறித்தல், வர்ணமெழுதுதல், வீணை முதலிய நரம்பு வாத்தியங்கள் சுருதி கூட்டுதல்.

முதலியவைகள் கடகாமுக அஸ்த பிரிவுமானமாக உள்ளது.

## 13. சூசி அஸ்த விபரம்


சூசி அஸ்தம்

ஆள்காட்டி விரலை நீட்டிப் பாம்பு விரல், மோதிர விரல், சுண்டு விரல், இம்மூன்றையும் இருக்கிறபடி சேர்த்து உள்ளங் கைக்குள் மடக்கி அப்படி மடக்கின விரல்களைக் கட்டை விரலால் பிடித்துக் கொள்ளுதல்.

இந்த அஸ்தசெய்குறியாவன :

சூரிய மண்டலத்தைக் காட்டுதல், பயமுறுத்தல், சடை அல்லது மயிராற்றல், பல் விளக்குதல், பூமியிலெழுதுதல் முதலியவைகள் சூசி அஸ்த பிரிவுமானமாய் உள்ளது.

## 14. சந்திரகலா அஸ்த விபரம்


சந்திர கலா அஸ்தம்

பாம்பு விரல் மோதிர விரல் சுண்டு விரல் இம்மூன்றையும் இருக்கிறபடி சேர்த்து உள்ளங் கைக்குள் மடக்கி மற்ற இரண்டு விரல்களையும் ஒன்றோடொன்று பொருந்தாமல் அது போன போக்குக்கு நீட்டல்.

இந்த அஸ்தசெய்குறியாவன :—

ஒட்டைசாண் அளத்தல்

சந்திரகலா அஸ்த பிரிவுமானமாக உள்ளது.

## 15. பதுமகோச அஸ்த விபரம்




எல்லா விரல்களேயும் ஒன்ரேடொன்று பொருந்தாமல் நீட்டிக் கொஞ்சம் வளேத்து உள்ளங்கை கொஞ்சம் பள்ளமாகும்படி பிடித்தலாம்.

இந்த அஸ்த செய்குறியாவன :-

ஸ்திரிகளின் ஸ்தனத்தை பால் குடிக்க பிடித்தல், பந்து ஜனங்களே கொஞ்சம் சாப்பிடு என காட்டுதல்.

முதலியவைகள் பதுமகோச அஸ்த பிரிவுமானமாக உள்ளது.

## 16. சர்ப்பசீரிஷ அஸ்த விபரம்




கட்டை விரல் தவிர மற்ற விரல்களே இருக்கிறபடி சேர்த்து நீட்டி நுனியில் கொஞ்சம் வளேத்தும் கட்டை விரலேயும் சேர்த்து அப்படியே கொஞ்சம் வலேத்தலாம்.

இந்த அஸ்த செய்குறி யாவன :-

மந்திர தீர்த்தம் புரோக்ஷித்தல்

யானை மஸ்தகத்தைத் தட்டிக் கொடுத்தல்

மலர்கள் புஜம் தட்டுதல்

அரசர் முன்னும் ஆச்சாரியன் முன்னும் வாய் பொத்துதல்

தீர்த்தம் வாங்கி புசித்தல்

சாணந் தெளித்தல்

எண்ணை தேய்த்துக் கொள்ளுதல்

முதலியவைகள் சர்ப்ப சீரிஷ அஸ்த பிரிவுமானமாய் உள்ளது.

## 17. மிருகசீரிஷ அஸ்த விபரம்



மிருகசீர்ஷ அஸ்தம்

ஆள்காட்டி, விரல் பாம்பு விரல், மோதிர விரல் இம்மூன்றையும் இருக்கிறபடி சேர்த்து விரல்களின் அடி முதல் சாய்த்து மற்ற விரல் களை இருக்கிறபடி பிரித்து நீட் டுதல்

இத்த அஸ்த செய்குறியாவன

விபூதி தரித்தல், கால்பிடித்தல், எழுத்தாணி பிடித்தல், நெற்றி வியர்வை துடைத்தல், அன்பர்களைக் கூப்பிடுதல் மயிரை வகிர்ந்து கோதுதல்

முதலியவைகள் மிருக சீர்ஷ அஸ்த பிரிவுமானமாக உள்ளது.

## 22. பிரமர அஸ்த விபரம்




பாம்பு விரல் மூன்றும் கணுவின் உள்ப்புறத்தில் கட்டை விரல் மூன்றும் கணு உள்ப் புறத்தைப் பொருத்தி ஆள்காட்டி விரலை, அது இருக்கிற இடத்தில்ச் சுருட்டிமற்ற விரல்களை ஒன்றோடொன்று பொருந்தாமல் பிரித்து நீட்டுதல்.

## 23. ஹம்ஸாஸ்ய அஸ்த விபரம்




கட்டைவிரல் மூன்றுங் கணுவின் உள்ப்புறத்தில் ஆள்காட்டி விரல் மூன்றுங்கணுவின் உள்ப்புரத்தைப் பொருத்தி மற்ற விரல்களை ஒன்றோடொன்று பொருந்தாமல் அதது இருக்கிற இடத்தில் நீட்டுதல்.

இந்த அஸ்த செய்குறியாவன :-
ஒன்றை சாக்ஷி கொடுத்தல்
சித்திரம் முதலியது எழுதுதல்
விளக்குத்திரியை தள்ளி கொடுத்தல்
தங்கம் மாத்து முதலியன உரைத்தல்.

மூக்கை சிந்துதல், துரும்புகிள்ளல், பூக்களை வாசனைப் பார்த்தல்

முதலியவை ஹம்ஸாஸ்ய அஸ்த பிரிவுமானமாக உள்ளது.

## 24. ஹம்ஸபக்ஷ அஸ்த விபரம்


ஹம்ஸபக்ஷி அஸ்தம்

சுண்டு விரல் தவிர மற்ற விரல்களை இருக்கிறபடி சேர்த்துக் கொஞ்சம் வளைத்துச் சுண்டு விரலை அது இருக்கிற இடத்தில் நீட்டல்.

இந்த அஸ்த செய்குறியாவன :-

ஆறென்னும் எண்ணிக்கை காட்டுவது
நகக்குறி முதலியவைகள் ஹம்ஸபக்ஷ அஸ்த பிரிவுமானமய் உள்ளது.

## 25. ஸந்தம்ச அஸ்த விபரம்


ஸந்தம்ச அஸ்தம்

பதுமகோசத்தை அடிக்கடி திறந்து மூடுதல்.

இந்த அஸ்த செய்குறியாவன :-
சிம்பளாக் கட்டை போடுதல்
ஸந்தம்ச அஸ்த பிரிவுமானமாய் உள்ளது

## 18. சிம்ம முக அஸ்த விபரம்




பாம்பு விரல், மோதிர விரல், இவ்விரண்டையும் இருக்கிறபடி சேர்த்துச் சாய்த்தும் அதுகளின் நுனி உள்புறத்தில் கட்டை விரல் நுனி உள்புறத்தைப் பொருத்தியும் மற்ற விரல்களை அதது இருக்கிறபடி பிரித்து நீட்டல்.

இந்த அஸ்த செய்குறியாவன

வில் முதலியவை பிடிக்க உதவும்

## 19. இலாங்கூல அஸ்த விபரம்




மோதிர விரலை உள்ளங் கைக்குள் மடக்கி மற்ற விரல்களை இருக்கிறபடி ஒன்றோடொன்று பொருந்தாமல் நீட்டிக் கொஞ்சம் வளைத்து உள்ளங் கை குழிய வைத்துக் கொள்ளுதல்.

## 20. சோல பதும அஸ்த விபரம்




எல்லா விரல்களையும் ஒன்றோடொன்று பொருந்தாமல் பிரித்து அதது போனபோக்குக்கு நீட்டல்.

இந்த அஸ்தம் செய்குறியாவன:—

தரையில் ஊன்றி எழுந்திருத்தல்.

## 21. சதுர அஸ்த விபரம்




ஆள்காட்டி விரல், பாம்பு விரல் மோதிர விரல் இம்மூன்றையும் இருக்கிறபடி சேர்த்துக் கொஞ்சம் சாய்த்து மோதிரவிரல் அடிவாரத்தில்க் கட்டை விரல் நுனி உள்பறத்தை சேர்த்து சுண்டு விரலை அது இருக்கிற இடத்தில் நீட்டுதல்.

## 22. பிரமர அஸ்த விபரம்




பாம்பு விரல் மூன்ரும் கணுவின் உள்ப்புறத்தில் கட்டை விரல் மூன்ரும் கணு உள்ப் புறத்தைப் பொருத்தி ஆள்காட்டி விரலே அது இருக்கிற இடத்தில்ச் சுருட்டிமற்ற விரல்களை ஒன்ருேடொன்று பொருந்தாமல் பிரித்து நீட்டுதல்.

## 23. ஹம்ஸாஸ்ய அஸ்த விபரம்




கட்டைவிரல் மூன்ருங் கணுவின் உள்ப்புறத்தில் ஆள்காட்டி விரல் மூன்ருங்கணுவின் உள்ப்புரத்தைப் பொருத்தி மற்ற விரல்களை ஒன்ருேடொன்று பொருந்தாமல் அதது இருக்கிற இடத்தில் நீட்டுதல்.

இந்த அஸ்த செய்குறியாவன :-
ஒன்றை சாக்ஷி கொடுத்தல்
சித்திரம் முதலியது எழுதுதல்
விளக்குத்திரியை தள்ளி கொடுத்தல்
தங்கம் மாத்து முதலியன உரைத்தல்.

மூக்கை சிந்துதல், துரும்புகிள்ளல், பூக்களை வாசனைப் பார்த்தல்

முதலியவை ஹம்ஸாஸ்ய அஸ்த பிரிவுமானமாக உள்ளது.

## 24. ஹம்ஸபக்ஷ அஸ்த விபரம்


ஹம்ஸபக்ஷ அஸ்தம்

சுண்டு விரல் தவிர மற்ற விரல்களை இருக்கிறபடி சேர்த்துக் கொஞ்சம் வளைத்துச் சுண்டு விரலை அது இருக்கிற இடத்தில் நீட்டல்.

இந்த அஸ்த செய்குறியாவன :-

ஆறென்னும் எண்ணிக்கை காட்டுவது
நகக்குறி முதலியவைகள் ஹம்ஸபக்ஷ அஸ்த பிரிவுமானமாய் உள்ளது.

## 25. ஸந்தம்ச அஸ்த விபரம்


ஸந்தம்ச அஸ்தம்

பதுமகோசத்தை அடிக்கடி திறந்து மூடுதல்.

இந்த அஸ்த செய்குறியாவன :-
சிம்பளாக் கட்டை போடுதல்
ஸந்தம்ச அஸ்த பிரிவுமானமாய் உள்ளது

## 26. முகுள அஸ்த விபரம்




எல்லா விரல் நுனி உள்ப் புறத்தை ஒருமிக்க சேர்த்தல்.

இந்த அஸ்த செய்குறியாவன :-
வைஷ்ணவர்களுக்கு முத்திரை போடுதல்
யாசகர்களுக்கு கொடுத்தல்
முதலியவை முகுள அஸ்த பிரிவுமானமாய் உள்ளது.

## 27. தாம்பிரசூட அஸ்த விபரம்




ஆள்காட்டிவிரல் தவிர மற்ற விரல் நுனி உள்ப்புறத்தை ஒன்றுகச் சேர்த்து ஆள்க்காட்டி விரலைத் தனியாக மேலே தூக்கி நுனியில் வளைத்தல்.

இந்த அஸ்த செய்குறியாவன :-
சோற்றைப் பதம் பார்த்தல்
பயிர் குழியில்விரை யூன்றுதல்
சிறு பிள்ளைகள் மணலில் எழுதுதல்
முதலியவை தாம்பிரசூட அஸ்த பிரிவுமானமாய் உள்ளது.

## 28. திரிசூல அஸ்த விபரம்




கட்டை விரல் உள்ப்புறத்தால் சுண்டு விரல் வெளிப்புற நுனியைப் பிடித்துக்கொண்டு மற்ற விரல்களை ஒன்றொடொன்று பொருந்தாமல் நீட்டுதல்.

இது வரையில் (அம்சயுதம்) ஒரு கையினுல் உண்டாகும் லக்ஷணங்கள்.

(ஸம்யுதம்) இருகையினுல் உண்டாகும் லக்ஷணங்கள் 23 அவையாவன:-

## 1. அஞ்சலி அஸ்த விபரம்




இருகையினுலும் பதாகம்பிடித்து கை உள்ப்புறத்தோடு உள்ப்புறம் பொருத்துதல்

இந்த அஸ்த செய்குறியாவன .-

தேவதை, குரு, பிராமணுள் இவர்களுக்கு நமஸ்காரம் செய்வதாகும்.

## 2. கபோத அஸ்த விபரம்




ஒவ்வொரு கை விரல்களையும் அதது இருக்கிறபடி சேர்த்து உள்ளங்கை பள்ளமாகும்படி விரல்களைக் கொஞ்சம் வளைத்தும் கை உள்ப்புறத்தோடு உள்புறம் சேர்த்தலாகும்.

இந்த அஸ்த செய்குறியாவன :-

பெரியோரிடத்தில் பேசும்போது ஒப்புக்கொள்ளுதல்

## 3 கர்க்கட அஸ்த விபரம்




இரு கை விரல்களும் ஓரிடுக்கில் மற்றொரு விரலும் மற்றொரு இடுக்கில் பின்னும் ஒரு விரலுமாக இப்படி எல்லா விரல்களையும் ஒன்றுக்குள் ஒன்றாகப் பின்னி நீட்டிக் காட்டலாகும்.

இந்த அஸ்த செய்குறியாவன :-

சோம்பல் முறித்தல், நாயகன் பிரிந்த விரகத்தால் நாயகி துயருறுதல்

## 4. ஸவஸ்திக அஸ்த விபரம்


ஸவஸ்திக அஸ்தம்

இருக்கையிலும் பதாகம் பிடித்து ஒரு கை விரல் நுனி உள்ப்புறம் மற்றொரு முழங்கைக்குமேல் இருக்கும்படி இருகையிலும் பிடித்தலாகும்.

இந்த அஸ்த செய்குறியாவன :-

பயத்தோடு பேசுதலாகும் வாய்பொத்தி நிற்குதல்.

## 5. டோளா அஸ்த விபரம்


டோளா அஸ்தம்

இரண்டு கையிலும் பதாகம் பிடித்து ஒவ்வொரு கை உள்ப்புறத்தை அந்த அந்த பக்கத்து துடைக்கு மேல் இடுப்பில் வைத்துக்கொள்ளுதல்

## 6. புஷ்பபுட அஸ்த விபரம்




ஒவ்வொரு கை விரல்களையும் அதது இருக்கிறபடியே சேர்த்து உள்ளங் கை கொஞ்சம் குழிய வைத்து ஒரு கைச் சுண்டுவிரல் உள் ஓரத்தை மற்றொரு கைச் சுண்டு விரல் உள் ஓரத்துடன் பொருத்தி தொன்னைபோல் காட்டுதல்.

இந்த அஸ்த செய்குறியாவன :-
கற்பூரம் முதலியது ஆர்த்தி எடுத்தல்

குழந்தைகள் பழ முதலிய வாஸ்துக்கள் வாங்கிக்கொள்ளுதல், சந்தியா காலங்களில் அர்க்கியப் பிரதானம் செய்தல், மந்திரபுஷ்பம் செய்தல்.

முதலியவை புஷ்பபுட அஸ்த பிரிவுமானமாக உள்ளது.

## 7. உத்ஸங்க அஸ்த விபரம்




இரண்டு கையிலும் மிருகசீரிஷம் பிடித்து தோள்ப்பட்டையில் உள் ளங் கைபொருந்த ஒரு கை மற்றொரு தோள்ப்பட்டைபொருந்த இரண்டு கையாலும் பிடித்தல்.

இந்த அஸ்த செய்குறியாவன :-

நாயகனையாவது குழந்தைகளையாவது கட்டிக் கொள்ளுதல், வெட்கப் படுதல் முதலியவை.

## 8. சிவலிங்க அஸ்த விபரம்




இடது கையில் பதாகம் பிடித்தும் வலக் கையில் சிகரம் பிடித்தும் இடது உள்ளங்கையின்பேரில் வலக் கை சுண்டுவிரல் உள்ள ஓரத்தைப் பொருத்துதல்.

## 9. கனகா வர்த்தன அஸ்த விபரம்




இரு கையிலும் கடகாமுக அஸ்தம் பிடித்து ஒரு மணிக்கட்டில் மற்றொரு மணிக்கட்டைப் பொருந்த வைத்துக் கொள்ளுதல். அதாவது வலக்கை இடப்பக்கத்திலும் இடக்கை வலப்பக்கத்திலும் கணுக்கைக்குமேல் மாறி யிருக்கும்படி இடக்கையின்மேல் வலக்கையைப் பொருத்துதல்.

இந்த அஸ்த செய்குறியாவன :-

பட்டாபிஷேக காலத்திலும், பூஜா காலத்திலும், விவாக காலத்திலும் செய்யும் சங்கத்பத்தில் ஆசீர்வாதம் அக்ஷதை முதலியவை போடல்.

## 10. கர்த்தரீசுவஸ்திக அஸ்த விபரம்




இரு கையிலும் கர்த்தரீ முகம் பிடித்துப் புறங்கையோடு புறங்கை பொருத்தி நீண்ட விரல் நுனிகள் எதிரில் இருப்பவர்க்குத் தெரிய காட்டல்.

## 11. கசட அஸ்த விபரம்




ஒவ்வொரு கையிலும் ஆள்க் காட்டி விரலை மட்டும் சுருட்டி மடக்கி மற்ற விரல்களை அதது இருக்கிற இடத்தில் நீட்டிப்பிரித்து அந்தக் கையை அந்தந்த மார்புக்கு நேராகவும் நீண்ட விரல் நுனிகள் ஆகாசம் பார்க்கவும் பிடித்தல்.

## 12. சங்க அஸ்த விபரம்




இடக்கைக் கட்டவிரலை வலக் கைப் பாம்பு விரல் மோதிர விரல் இந்த மூன்று விரல்களாலும் கவர்ந்து பிடித்தும், அப்படி பிடித்த வலக்கை மூன்று விரல்களில் பாம்பு விரல் ஓரத்தில் வலது கட்டை விரலை நீட்டிப் பொருத்தியும், அந் தக்கை ஆள்க் காட்டி விரல் நுனி இடது ஆள்காட்டி விரல் நுனியில் பொருந்தவும். இடக்கை கட்டை விரல் தவிர மற்ற விரல்கள் சேர்ந்து நீண்டு வலக்கை பின் புறத்தில் வரவும். கட்டை விரலைப் பிடித்த பிடிப்பிற்கும் இடது உள்ளங்கைக்கும் நடுவில் கொஞ்சம் இடவெளி பொருந்தவும் பிடித்தல்.

## 13. சக்கர அஸ்த விபரம்




இருக் கையிலும் அர்த்த சந்திரம பிடித்து ஒரு உள்ளங்கைக்குமேல் மற்றொரு உள்ளங்கையைக் குறுக் காகப் பொருத்தி எல்லா விரல் களையும் ஒன்றோடொன்று பொருந் தாமல் நீட்டல்.

## 14. ஸம்புட அஸ்த விபரம்




இருக்கையாலும் அர்த்தசந்திரம் பிடித்து ஒரு உள்ளங்கையில் மற்றொரு உள்ளங்கையைக் குறுக்காக பொருத்தி ஒவ்வொரு விரல்களாலும் மற்ற விரல்களால் மூடிக் கொள்ளுதல்.

## 15. பாச அஸ்த விபரம்




இரு கையாலும் சூசி அஸ்தம்பிடித்து ஒரு கை ஆள்காட்டி விரலை மற்றொரு கை ஆள்காட்டி விரலால் மாட்டிக் காட்டுதல்.

## 16. கீலக அஸ்த விபரம்


கீலக அஸ்தம்

ஒவ்வொரு கையிலும் சுண்டு விரல் தவிர மற்ற விரல்களை இருக்கிறபடி சேர்த்து மடக்கிச் சுண்டு விரல்களை நீட்டி ஒரு சுண்டு விரலோடு மற்றொரு சுண்டு விரலை மாட்டிக் காட்டுதல்.

## 17. மத்ஸிய அஸ்த விபரம்


மத்ஸிய அஸ்தம்

ஒவ்வொரு கையிலும் பாம்பு விரல் ஆள்காட்டி விரல் மோதிர விரல் இம்மூன்றையும் இருக்கிறபடி சேர்த்து சுண்டு விரலைக் கொஞ்சம் பிரித்துக் கட்டை விரலை விலக்கி ஒரு புறங்கைக்குமேல் மற்றொரு உள்ளங்கையைப் பொருத்தி கட்டை விரல்களை மட்டும் அசைவதுபோல் காட்டுதல்.

## 18. கூர்ம அஸ்த விபரம்




உள்ளங்கையோடுள்ளங்கையை பொருத்தியும் ஒரு கை ஆள்காட்டி விரலோடு மற்றொரு கைச் சுண்டு விரலைப் பதித்தும் ஒவ்வொரு கை மற்ற விரல்களாலும், மற்றொரு கையைக் கவர்ந்து பிடித்தும் காட்டல். அதாவது இடக்கைக் கீழும் வலக்கை மேலும் இருக்க வேண்டும்.

## 19. வராக அஸ்த விபரம்




ஒவ்வொரு கையிலும் மிருகசீரிஷம் பிடித்து இடதுபுறங் கையின் மேல் வலது உள்ளங்கையைப் பொருத்தி இடது சுண்டு விரலின் பேரில் கட்டை விரலும், இடது கட்டை விரலின்பேரில் வலது கை சுண்டு விரலும் பொருந்தவும். மற்ற மூன்று விரல்களின் பேரில் மூன்று விரல்கள் பொருந்தும்படி பிடித்தல்.

## 20. கெருட அஸ்த விபரம்




இருகையிலும் அர்த்த சந்திரம் பிடித்து, ஒரு கட்டை விரலால் மற்றொரு கட்டை விரலை, சங்கிலி போல் மாட்டிக் கொண்டு வலப்புறம் கணுவுக்கு மேல் பட்ட பாகம் இடப்புறத்திலும் அப்படியே இடப்புறப் பாகம் வலப் புறத்திலும் இருக்கும்படி பிடித்தல் இடக்கை உள்ளும் வலக்கை மேலும் இருக்க வேண்டும்.

## 21. நாகபந்த அஸ்த விபரம்




இரு கையிலும் சர்ப்ப சீர்ஷம் பிடித்து மணிக்கட்டோடு மணிக் கட்டுப் பொருத்த வேணும்—அதாவது இடது மணிக்கட்டுக்கு மேல் பாகம் வலப்புறத்திலும் வலது மணிக்கட்டுக்குமேல் பாகம் இடப் புறத்திலும் இருக்கப் பிடித்தல்.

## 22. கட்வா அஸ்த விபரம்




ஒவ்வொரு கையின் ஆள்காட்டி விரல் சுண்டு விரல் இதுகள் பூமியைப் பார்க்க நீட்டிப் பாம்பு விரல் மோதிர விரல் இதுகளின் உள்ப்புறம் ஆகாசம் பார்க்கப் பாம்பு விரல்மேல் பாம்பு விரலும் மோதிர விரல்மேல் மோதிர விரலும் பொருத்தி நடுவில் இடவெளி விட்டுக் கட்டை விரல் ஒன்ரோடொன்று பொருந்தும்படி பிடித்தல்.

## 23. பேருண்ட அஸ்த விபரம்




இருக்கையாலும் கபித்தம் பிடித்து மணிக்கட்டோடு மணிக்கட்டுப் பொருத்துதல். அதாவது இடது மணிக்கட்டுக்கு மேல்பாகம் வலப்புறத்திலும் வலது மணிக்கட்டுக்கு மேல் பாகம் இடது புறத்திலும் பொருந்தும்படி பிடித்தல்.

# 89. கணபதி சோடசம்—ரூப தியானங்கள் உரையுடன்

## 1. பால கணபதி ரூப தியானம்

ஆனைமுகத்தோடு அருக்கன் நிறத்தொளிர்
சேனைக்கொருபதி வாலகணபதி
கதலி மா, பலா கரும்பு மோதகப
வலமிடமுறைகொள வாழ்த்தி வணங்குவாம்

(இ-ள்) வலது அஸ்தம் - வாழைப்பழம், மாம்பழம்.

இடது அஸ்தம் - கரும்பு - மோதகம்

கெஜமுகம், சூரியவர்ணம் - சதுர் (4) புஜம்.
சிலர் மனிதர்முகமாகவும் அமைப்பதும் உண்டு.

## 2. தருண கணபதி ரூப தியானம்

அங்குசபாஸம்சூதம் அளிதரு விளாவினோடு
தங்கு எள்ளுருண்டை நாவல்தருபழம் முறையே தாங்கி
பொங்குநற்குருதி நேரப் பொலிதரு நிறமே பூண்டு
தங்கநல் வரமளிக்கும் தருண கணபதியே போற்றி

(இ-ள்) வலது அஸ்தம்:- அங்குசம், மாம்பழம், எள்ளுருண்டை.

இடது அஸ்தம்:-பாஸம், விளாம்பழம், நாவல்பழம்.

இரக்தவர்ணம். ஆனைமுகம். 6 புஜம்.

## 3 பக்தி கணபதி ரூப தியானம்

தெங்கு கதலியும் வலமேந்தித் தெளிந்த பாயசம் இடமாகத்
தங்கும் வெல்லமும் அதனோடே தாங்க கரங்கள் முறையாக

துங்கம் தூய வெண்மையுள துகள்தீர்மேனி ஒளிவீச
பங்குக் கொரு நீள்வர மருளும் பக்திக் கணபதி பணிசெய்
வோம்

(இ-ள்) வலது அஸ்தம் - தேங்காய், வாழைப்பழம்.
இடது அஸ்தம் - பாயசக் கிண்ணம், வெல்லம்.
வெள்ளை வர்ணம், ஆனைமுகம், 4. புஜம்

## 4. வீர கணபதி ரூபதியானம்

விண்டொளிர் வேல்சரம் வாள்சூலம் விழையும் தோட்டி
வலத் தேந்தி
தண்டுவில் கேடயம் பரசுடனும் தாங்கும் பாசம் இடமாக
அண்டு தொண்டர் இடர் தீர்க்க அருளும் கலசம் துதிக்
கையினில்
கொண்ட வீர கணபதியாம் குருதி நிறத் தோன்தாள்
போற்றி

வலம் : வேல்சத்தி, அம்பு, கத்தி, சூலம், அங்குசம்

இடம். கதை, வில், கேடையம், கோடரி, பாஸம்.

துதிக்கையில் கலசம்.

சூரியவர்ணம், ஆனைமுகம், 10. புஜம்.

## 5. சத்தி கணபதி ரூப தியானம்

அங்குசபாச மேந்தி குங்கும நிறத்தோனாகி
கங்குநற்றந்தந் தோன்ற கருணைமார் சித்திபுத்தி
தங்கு தண்ணருனிருேடும் தன்னிரு மருங்கு தோன்ற
பொங்கிய இச்சை கிரியா பொலிவுறச் நின்றாய் போற்றி.

(இ-ள்) வலது அஸ்தம் :-அங்குசம், தந்தம்.

இடது அஸ்தம் :-பாஸம், மோதகம்.

சித்திபுத்தி, இரு மனைவியர் இருபுறம் இருத்தல்.

## 6. பிர்ம்ம கணபதி ரூப தியானம்

நாலுமுகத்தொடு பாலின் நிறத்தொடும் மதிபோலும்
சால ஜெபித்தருள் மாலையும் நூலையும் முறையாக
கோலநிறத்தொளிர் தண்டு கமண்டலம் எதிர்நேரே
நாலநிலத்துள பிர்ம்ம கணபதி தாள்போற்றி

(இ-ள்) வலது அஸ்தம் :-உத்ராக்ஷம், தண்டு.

இடது அஸ்தம் :-புஸ்தகம், கமண்டலம்.

இரத்தினவர்ணம், 4 யானை முகம், 4 புஜம்.

## 7. பிங்கள கணபதி ரூப தியானம்

தும்பிக் கரத்து மும்மதந்திகழத் துலங்கு முகத்தோனே
எங்கட்காகச் சூதம்மோதகம் தந்தம்வலத்தேந்தி
செங்கட் கரும்பும் எள்ளுருள் பரசும்சேர இடமாகக்
குங்குமநிறமுடன் அன்பர்க்கருள்புரி பிங்களகணபதியே

(இ-ள்) வலது அஸ்தம் :-மாம்பழம், மோதகம், தந்தம்.

இடது அஸ்தம் :-கரும்பு, எள்ளுருண்டை.. மழு.

குங்கும வர்ணம் யானைமுகம் 6 புஜம்.

## 8. உச்சிட்ட கணபதி ரூப தியானம்

மாதொளைகொள் துதிக்கையில் மாதுளைக் கனியேந்தி
மேதகு அக்கமாலையும் தத்தமும் மேலுறவலங்கொண்டு

சீதநிறை கருங்குவளை யாழ்கதிரும் வாமமுற
நாதவடி ரக்தஉச்சிட்டநாயகனே நயந்துகா

(இ-ள்) வலது அஸ்தம் :-அக்ஷயமாலை, மாதுளை பழம்.
தந்தம்

இடது அஸ்தம்.-நீலோர்ப்பலம், வீணை, நெல்கதிர்

இரத்த வர்ணம், ஆனைமுகம், 6 புஜம்.

## 9. க்ஷிப்ர கணபதி ரூப தியானம்

குங்கும வண்ணத்தோடும் குறுமணி கலயத்தோடும்
அங்குஸம் தந்தமேந்தி ஆனைமாமுகத்திேைடும்
பைங்கருங்குவளைபாஸம் பறந்தசீரிடத்திற்ருங்கி
கங்குல்போன்ம் பாசம் போக்கக் கருத்தினில் நிலைப்பாய்
போற்றி

(இ-ள்) வலது அஸ்தம் :-அங்குஸம், தந்தம்.

இடது அஸ்தம் :-நீலோத்பலம் பாசம்.

குங்கும வர்ணம், ஆனைமுகம் துதிக்கையில் கலசம், 4 புஜம்.

## 10. விக்கின கணபதி ரூப தியானம்

ஆகுவின்மீதே யேறி யதன்கடி வாளம்பற்றி
மோதியே சவுக்குவீசி மோதகம் துதிக்கை யேந்தி
வாகுசேர் பஞ்சபாணம் வலக்கரம் பிடித்துக்கொண்டு
பாகுவில் விக்னநாதா பக்தருக்கருள்வாய் வந்தே.

(இ-ள்) வலது அஸ்தம் :-சவுக்கு. பாணம்.

இடது அஸ்தம் :-கடிவாளம் பிடித்தது, வில்,

இரத்த வர்ணம், யானைமுகம், 4 புஜம். மூஷிகத்தின் பேரில் ஆரோகணித்தல்.

## 11. ஹேரம்ப கணபதி ரூப தியானம்

ஐந்துமுகத்துடன் அபயவரத்துடன் அரிஏறி
கந்தமலருடன் கத்திசூலம் மழு கதிர்கோடும்
நந்தலிலாஜெபமாலையும் பாசமும்நனிதாங்கி
எந்தைவரமருள் வந்தவினை கெட ஹேரம்பா.

(இ-ள்) வலது அஸ்தம் :-அபயம், ஜெபமாலை. சூலம், நெல்கதிர், புஷ்பம.

இடது அஸ்தம் :-வரதம், பாஸம், மழு, கத்தி, கொம்பு.
வெள்ளை வர்ணம் 5. ஆனை முகம்-10 புஜம்.
சிம்ம வாகனத்தில் ஆரோகணித்தல்.

சிலர் அபயவரத அஸ்தங்களில் அம்பு, வில்லு கொள்வது முண்டு.

## 12. லக்ஷிமீ கணபதி ரூபதியானம்

மாணிக்கக்கும்பம் மடுத்த துதிக்கை யேந்தி
ஆணிநிறத்துடன் அங்குசபாசமும்
செங்குவளை மலரோடு செவ்வாழைப் பழங்கொண்டு
தங்குதிரு மகளோடருள்தா.

துதிக்கையில் பூர்ண கலசம்

வலம் அஸ்தம்:-அங்குசம், செங்குவளை மாதுளம் பழம்.

இடது அஸ்தம்:-பாஸம், செவ்வாழைப்பழம்.
இலட்சுமியை அணைத்த கை. இரத்தின வர்ணம்,
யானைமுகம். புஜம் 6.

## 13. மஹா கணபதி ரூப தியானம்

மஹாகணபதியாம் மஞ்சள்நிறமேல்தோய் நின்பாலே
புவனமும்கோடும்புரியும் ஆழியும் பொலிவுறவே
ஆழிசங்குகைக்கொண்டு அங்குசபாசமுடன்
நீயிருப்பாய் கற்பகநீழல்

(இ-ள்) வலது அஸ்தம்:-தாமரைப்பூ, கோடாலி, அங்குசம் தந்தம்.

இடது அஸ்தம் :-சங்கு, கம்பு, வில்லு, பாசம்.
பொன்னிறம் ஆனைமுகம். 8 புஜம் பாஸம்.

## 14. வல்லபை கணபதி ரூப தியானம்

அல்லல் செய் அசுரர் அவனியுருமல்
வல்லபை மர்மத்தை வான்துதியால் பொத்தி
மாதுளையும் மணமலரும்நெற்கதிரும் கோடும்
மாதடியும் இக்கும் குவளை வல்லபையணைத்து
வலம் இடம் வைத்தானை வாழ்த்து

(இ-ள்) வலது அஸ்தம் :-மாதுளைப் பழம். தாமரைப்பூ, நெற்கதிர்.

இடது அஸ்தம் :-தடிக்கொம்பு, கரும்பு, நீலோற்பலம், வல்லபையை அணைந்த கை.

துதிக்கை, அம்மன் மர்மத்தை மறைத்தல்.

யானை முகம், புஜம் 6.

## 15. நிர்த்தன கணபதி ரூப தியானம்

அங்குசபாசம் தந்தம் அணிகரம்பீரபூரம்
தங்கிடப்பாஸம் ஓர்பால் தாங்கிய கரமே தூக்கி
பொங்குறு இடக்கால்ஊன்றி பொலிதரு வலக்கால்தூக்கி
பிங்கல மேனியாட பீடுறுநடஞ போற்றி,

(இ-ள்) வலது அஸ்தம் :-அங்குசம், கோடாலி, தந்தம்,

இடது அஸ்தம் :-பாசம், கொம்பு, கண்டகோடாலி.
வலது கால்தூக்கி நிர்த்தனமும், இடது கை பாஸம் தூக்கி இருத்தல்வேண்டும். தங்கவர்ணம்-யானைமுகம் 6 புஜம்.

## 16. ஊர்த்துவ கணபதி ரூப தியானம்

நெற்கதிர் வலமேகொண்டு நேரிடம் கரும்பு தாங்கி
பொற்புறு கோடுமேந்தி புனிதநற்றேவிமேவ
அற்புத இடக்கைசூழ அணைத்த குங்குமவண்ணத்த
திற்பதம் ஊர்த்துவனே மன்னிநினைத்தவர்எவரேவீணர்

(இ-ள்) வலது அஸ்தம் :-நெற்கதிர், தந்தம்.

இடது அஸ்தம் :-கரும்பு, தேவியை அணைந்த கை.
குங்குமவர்ணம்-யானை முகம் தேவியுடன் 4 புஜம்.

# 90. ஈஸ்வர அம்சங்கள் 64. ரூப தியானங்கள் உரையுடன்

## 1. லிங்கசொரூப ரூப தியானம்

உலகம்யாவையும் தாமுளவாக்கலும்
நிலைபெறுத்தலும் நீக்கலும்கொண்டுள
தலைவரானவர் தம்முடை அம்ஸமோ
டிலகுசுந்தர லிங்கத்தைப் போற்றுவாம்.

(இ-ள்) கீழ்ப்பீடம் பிரம பாகமாகவும், மையபாகம், விஷ்ணு பாகமாகவும் மேல்பாகம் ருத்திரபாகமாகவும் சேர்ந்து லிங்க சொரூபமாக உள்ளது.

## 2. லிங்கோற்பவ மூர்த்தி ரூப தியானம்

முடிதனைக் காணத்தேடி எகினமாய் மலைமேல் நின்றும்
அடிதனைக் காணவேண்டி அரியவன் வராகமாகி
படிதனில் கீழாய்ச் சென்றும் பரமனைக் காணாராக
கொடுமுடியாகி நின்ற குறிலிங்க உற்பவங்காண்.

உற்பல லிங்கந்தன்னின் உருதனை இயம்பக்கேளாய்
அற்புதமழுமானோடும் அபயமும் வரதம் காட்டும்
தற்பரன் நடுவனாக மாலயன் இருபால் தோன்ற
நிற்பனும் எங்கும் சூழ்ந்த நிரஞ்சன வடிவனாமே.

(இ-ள்) மலைக்குள் - ருத்திர சொரூபம்,

வலது அஸ்தம் :-அபயம், மழு.

இடது அஸ்தம் ;-வரதம், மான்.

மலையின் மேல்புறம் அன்னம் கீழ்ப்புறம் வராகம். பக்கத்தில் வலதுபுறம்-பிரம்மா நின்ற திருக்கோலம். இடதுபுறம் விஷ்ணு நின்ற திருக்கோலம்.

## 3. முகலிங்கமூர்த்தி ரூப தியானம்

நாலு திசை முகமும் நண்ணுதலும் மேலு மொரு
கோலத் திருமுகமும் கொண்டே— சால
உருத்திர கோலத்துடனே உலகினிலே நீண்டுவந்த
பருத்த திரு முகலிங்கம் பார்.

(இ-ள்) : லிங்கத்தில் ருத்திர அம்சத்தில் 5. திரு முகம் இருத்தல்.

## 4. சதாசிவமூர்த்தி ரூப தியானம்

முகமைந்துகொண்டு கைபத்துமாகி முதலாகி வந்த பெரும்
தகு சூலம் நாகம் மழு பாசம் தண்டு தனி வாக்கும் கோட்டியுடனே
மிகு வஜ்ரம் கண்டம் இவை பாகமாக முறையாக வாககர மேல்

புக அபய வரதம் தரு மூர்த்தியாக அருள்க நித்ய சிவமே

(இ-ள்) வலது அஸ்தம் : அப்யம், சூலம், மழு, கைதை, வஜ்ரம்.

இடது அஸ்தம் ; வரதம், நாகம், பாசம், அங்குசம், மணி.

ஐந்து முகம்

## 5. மகா சதாசிவமூர்த்தி ரூப தியானம்

அபயாஸ்த முடன்ட மருகம் ஆழி
வஜ்ர சூலமும் வாளும் வேலும்
சரமுடன் சந்திர அஸ்த்ரம் வெட்டுவாள்
தோமரம் தோட்டி தூய அக்க மாலை
பன்னகம் பங்கயம் பாங்குள தடியும்
சுதிகா அஸ்தம் சுகதிரிபதாகம்
அராள அஸ்தம் எரிசூலக மண்டலம்

கட்காமுகக் கரம் சர்ப சீரிஷம்
கொடி எழுத்தாணி கொள வலக்கரங்கள்
வரதம்பிணேகோடு வரசத்தி தடியும்
ஈட்டி கொடியில் ஏந்து கோடரியுடன்
கேடயம் முசலம் கேழ் கிளர்பாஸம்
அங்கி நாகம் அருங்கமலம் மணி
செங்கழு நீருடன் செங்கமல நேர் அஸ்தம்
புத்தகம் கபாலம் புரிஜெபமாலை
சத்தயாழ் கரகம் சாமரம் ஏடும்
இடப் பக்கத்துற்ற எழில் கரம் தாங்க
ஐம்பது கரங்களும் ஐயைந்து சிரங்களும்
கிங்கினி மாலை கிளர் புஜம் முரன அமர்ந்து
இங்கிதமாக எழுந்தருள்
மஹா சதாசிவமணியே போற்றி.

(இ-ள்) வலது அஸ்தம் : அபயம், டமருகம், சக்கரம், வஜ்ஜிரம், சூலம், வாள், வேல், அம்பு, சந்திரபானம், கத்தி, தேர்மரம், அங்குஷம், அக்ஷயமாலை, நாகம், கமலம், தடி, சுதிகா அஸ்தம், திரிபதாக அஸ்தம், அர்ராள அஸ்தம், திரிசூலம், கமண்டலம், கடகாமுக அஸ்தம், சர்பசீரிஷ அஸ்தம், கொடி, எழுத்தாணி.

இடது அஸ்தம் : வரதம், மான், சங்கு, சத்தி, தடி, ஈட்டி, கொடி, வில்லு, கோடாலி, கேடயம், முசலம், பாசம், அக்கினி நாகம், கமலம், மணி, நீலோர்பலம். பதுமகோச அஸ்தம் : புஸ்தகம், கபாலம், ஜெபமாலை, வீணை, கலசம், சாமரம், யேடு.

சிறசு 25, கை 50, கிங்கிணி மாலை. உட்கார்ந்த திருக்கோலம்.

## 6. உமாமஹேஸ்வரமூர்த்தி ரூப தியானம்

மழுவொடுமானு மேந்தி மாந்தருக்கபயம் தந்து
பழுதிலாவரமு மீயப் பக்குவம் கொண்ட மூர்த்தி
எழுதொணுஎழிலாளைத்தன் இடுப்பினில் வைத்துக்கொண்டு
வழுவலில் வீற்றிருக்கும் வாறென்னே உமாமஹேஸா

(இ-ள்) வலது அஸ்தம் : மழு, அபயம்.

இடது அஸ்தம் : மான், வரதம்.

உட்கார்ந்தது. அம்மன் மடியின்பேரில் அமர்ந்தது.

## 7. சுகாசனமூர்த்தி ரூப தியானம்

மழுவும் மானும் மேலேந்தி
மருவும் பாசம் நாகஞ்சேர்
திருவாம் அக்கமாலை யொடு
தீயும் பொருந்தக் கீழ்க்கரங்கள்
அருளும் அபயம் வரதமுடன்
அமர்ந்த கோலத்தம்மை யொடும்
மருவும் சுக ஆஸனமூர்த்தி
மாந்தர்க்கருள எழுந்தருளே!

(இ-ள்) வலது அஸ்தம் : மழு, பாசம், அக்ஷயமாலை அபயம்

இடது அஸ்தம் : மான், நாகம், அக்கினி, வரதம்.

உட்கார்ந்த மூர்த்தம். அம்மன் பக்கத்தில் உட்காந்தது.

## 8. உமையாள்சகிதமூர்த்தி ரூப தியானம்

அக்கமாலை சூல மேந்தும்
அபயவரத ஆதியே
பக்கமா யிடத்துமை
யமர்ந்து மேவும் கியாதியே
முக்கணோடு கட் செவிக்
களத்தணிந்த நீதியே
தொக்க உமையாள் சகிதன்
என்ன நின்ற சோதியே

(இ-ள்) வலது அஸ்தம் : அக்ஷயமாலை, அபயம்.

இடது அஸ்தம் : சூலம், வரதம்.

அம்மன் உட்காந்தது.

## 9. சோமாஸ்கந்தர்மூர்த்தி ரூப தியானம்

சச்சிதாநந்தமான் சராசரன் சோமாஸ் கந்தர்
உச்சித உமையாள் ஓர் பால் ஒரு மரை மொட்டேசேடீ
நிச்சவ அபயமொடு நிர்மல கடகாஸ்தங்கள்
அச்சுதன் நடுவனுக அமர்வன்பால் மழுமானேந்தி.

(இ-ள்) வலது அஸ்தம் : மழு, அபயம்.

இடது அஸ்தம் : மான், கடிகாஸ்தம்.

சுவாமி அம்மன் உட்கார்ந்த திருக்கோலத்துடன் மத்தியில் ஸ்கந்தர் நிர்வாணத்துடன் நின்றது. அஸ்தங்களில் மொக்கு பிடித்தது.

## 10. சந்திரசேகரர் ரூப தியானம்

உமையாளொடும் நின்ருய் உன்கோலம் யாரறிவார்
சுமையா மழுமானும் சூழ்ச்சி யாதோ
அமைய வரதபயம் ஆகும் நின்பாலே
இமையா சந்திர சேகரா

(இ-ள்) வலது அஸ்தம் : மழு, அபயம்.

இடது அஸ்தம் : மான், வரதம்

சுவாமி, அம்மன், நின்றகோலம், சந்திரன் முடியில் தரித்தது.

## 11. ரிஷபாரூடர் ரூப தியானம்

இடபத்தின் மீதே இடத்துமையமர
தடக்கைகள் மழுமானும் தாங்க
அபய வரதங்காட்டி ஆட்கொளவந்த
சமயா ! ரிஷிபாரூடா !

(இ-ள்) வலது அஸ்தம் : மழு, அபயம்

இடது அஸ்தம் : மான், வரதம்

சுவாமி. அம்மன், ரிடபத்தின்மீது ஆரோகணித்தல்

## 12. ரிஷபாந்திகமூர்த்தி ரூப தியானம்

அடல்பெரு கடிகாஸ்தத் தோடு
அடுத்தகை தொடைமேல் சேர
நிடமுள மழுமானேந்தி
திரிபங்கத்துடனே நின்று
இடபத்தின் சிரமேல் கைவைத்து
இரக்கமுர் காட்டி நின்ற
நட நவில் ரிஷபாந்திக நன்
மூர்த்தியை மனத்திற்கொள்வோம்

(இ-ள்) வலது அஸ்தம் : மழு, ரிஷபத்தின் தலையில் கை

இடதுஅஸ்தம்: மான், கடிகாஸ்தகம், துடையின்பேரில்கை. திரிபங்கம் நின்ற கோலம்

## 13. புஜங்கலளிதமூர்த்தி ரூப தியானம்

பீலிடமரகம் பேரபயாஸ்தங்குவளை
சீல நர்த்தனம் சிறந்தோங்க—ஞாலத்து
ஆடிடக்கால் தூக்கி ஆங்கே கீழ்முயலகனோடு
நாடு புஜங்க லளிதன் நாமம்

(இ-ள்) வலது அஸ்தம் : டமருகம், அபயம்.

இடது அஸ்தம் : மயிலிறகு, நீலோர்ப்பலம்

நிர்தனம். இடதுகால் தூக்கியது. கீழ் முதலகன்

## 14. புஜங்கத்துருஸமூர்த்தி ரூப தியானம்

புஜங்கத்ராஜ கோலன் புகலக்கேள் சகஜமுடன்
டமருகமும் நாகமும் தடவலக்கை தனி லேந்தி
அங்கிதனை இடம் வைத்து அரிமுக அஸ்தங்காட்டி
எங்குமுளான் நிற்பன் நீ நேடு

(இ-ள்) வலது அஸ்தம் : டமருகம், நாகம்.

இடது அஸ்தம் : அக்கினி, சிம்மமுக அஸ்தம்.

## 15. ஸந்தியாந்ருத்தமூர்த்தி ரூப தியானம்

துடிசேர் இடக்கரங் கீழ்சேர துவளவலக்கால் மேல் தூக்கி
அடிக்கவேண்டி வலக்கரத்தை ஆங்கேகாற் கீழ்கொடுதாக்கி
முடங்கு நாகமும் வரதம் நீள் முடியும் துளங்க உமை நிற்க
திடங்கொள் நடனம் செய்திடுஞ்சேர் ஸந்தியாந்ருந்தி
மூர்த்தியரோ

(இ-ள்) வலது அஸ்தம் : டமருகம், நாகம்.

இடது அஸ்தம் : கடிகையின் கீழ் அடித்தல், வரதம்.

வலது கால் தூக்கி நிர்த்தனம். அம்மன் நின்றது, காலின் கீழ் முதலகன்.

## 16. சதாநிர்த்தனமூர்த்தி ரூப தியானம்

சதா நிர்த்தனன் என்பேர் சாற்றும் மூர்த்தியின்
உதார உருவினை உரைத்திடந் கேண்மோ
அபயம் டமருகம் அமர வலத்தில்
அகலா அங்கியும் ஆரந்மற்றோர் இடக்கரம்
வலமதாத்தூக்கி வாகுற மடித்து
இடைக்கால் தூக்கியும் வலக்கால் நின்றும்
உமையாள் இடைப்பால் உற்றுடன் நின்றிட
பதஞ்சலி புலிக்கால் பாங்குள முனிவர்
வலம் இடம் நின்றே வந்தித் தேத்திட
முயலகன் வலத்தாம் முளரி நேர்பாதத்து
மிதிந்திடக் கிடந்து மருண்டு நோக்கவும்
திமிதிமி என்று தாண்டவம் புரிவன்
பஞ்சகிருத்தியம் பயிற்றுவன் பரவன்

(இ-ள்) வலது அஸ்தம் : டமருகம், அபயம்.

இடது அஸ்தம் : அக்கினி, கைதூக்கி மடித்தது, இடது கால் தூக்கியது, வலதுகால் கீழ்முயலகன் அம்மன் நின்றது. பதஞ்சலி, வியாக்கிரபாதர், பக்கங்களில் நிற்றல்.

## 17. சண்டதாண்டவமூர்த்தி ரூப தியானம்

விண்டிடு மழுவும் குண்டலக்கரமும்
விளங்கொலிட மருகம் தீ யொடுதோன்ற
மண்டிடு நாகம் துவஜ மபயம்
மடித்த இடக்கை வலந் தொங்க
அண்டர் களிக்க இடக்கால் மேல்
ஆடத்தூக்கி வலத் தூன்றி
பொன்ற முயலகன் காற்கீழே பெருந்தக்
காளி அருகிருப்பள்
கொன்றை முடித்தோன் கொடுங்
காளிக்கருள் காட்டி
நின்ற செருக்கடக்க நிர்த்தனஞ்
செய கோலமிது
நின்ற நாமம் நிலவுலகில் நிலவும்
பொழில் சேர் ஆலங்காடு
சண்ட தாண்ட மூர்த்தி யென்றே
சாற்றிடுவார்கள் ஆன்றோர்கள்.

(இ-ள்) வலது அஸ்தம் : மழு, டமருகம், நாகம், அபயம்.

இடது அஸ்தம் : குண்டலா அஸ்தம், அக்கினி.

ஜன்ட்டா. வலது பக்கம் மடித்து தொங்கிய கை.

இடதுகால். இடதுபக்கம் மேலே தூக்கியது.

வலது காலின்கீழ் முதலகன், சமீபம் காளி நிர்த்தனம்

## 18. கங்காதரமூர்த்தி ரூப தியானம்

மங்கா மருவுடன் மானேந்தி மாந்தர்க்கேய பயங்காட்டி
எங்கும் தொண்டர்க்கியன்றவரம் ஈயும் கரமும் இடமிளிர
தங்கு அம்மை இடத்தமரத் தணிந்த கோலங் கொடுநிற்கும்
கங்காதரனே எங்கட்காகக் கேட்ட வரமும் தந்தருளே.

(இ-ள்) வலது அஸ்தம் : மழு, அபயம்.

இடது அஸ்தம் : மான். வரதம்.

சுவாமி அம்மன் உட்காந்தது.

## 19. கங்காவிசர்ஜனமூர்த்தி ரூப தியானம்

ஜெபவடங் கமலம் மேல்திகழ
ஜெகநிழல் செய்யும் குடை சூலம்
நக இரு கரங்களில் கீழ்பாலே
நன்ருயமர்ந்த பரமேஸா
பகவதி இடப்பால் நிலை நின்று
பாங்கக் கமல மொட்டேந்த
ஜெயபவ கங்கா விஸர்ஜனனே
ஜெகமேவாழச் செய்திடுவாய்

(இ-ள்) வலது அஸ்தம் : ஜெபமாலை, குடை.

இடது அஸ்தம் : தாரைபூ, சூலம்.

சுவாமி உட்காந்தது அம்மன் நின்றது.

## 20. திரிபுராந்தகமூர்த்தி ரூப தியானம்

அம்புடன் வில்லு மேந்தி
ஆங்குமேல் மழுமான் தாங்கி
அம்பிகை திரிபங்கத்தோடு
அமர்ந்திட வலத்தே தேர்மேல்

துங்கமே மண்டியிட்டுத்
துலங்குபோர்க் கோலங் கொண்ட
சங்கரா திரிபுராந்த
தகனனே போற்றி போற்றி

(இ-ள்) வலது அஸ்தம் : மழு, பானம்.

இடது அஸ்தம் : மான், வில்லு.

இரதத்தில் அம்மனுடன். போர் கோலத்துடன் மண்டியிட்டு ஆரோகணித்தல்.

## 21. கலியாணசுந்தரர் ரூப தியானம்

மலையரை யன்மகளை மாலையிட வேண்டி
அலையுற்று னும்மயனு மாங்கு—நிலை நிற்க
கலியாண சுந்தரராய்க் கைத்தாரை ஏற்று
கலை மழுவுங் காட்டி நின்ருய் கா

(இ-ள்) வலது அஸ்தம் : மழு, இடது அஸ்தம் மான்.

சுவாமி அம்மன் கைகள் தாரை வாங்குவது.

விஷ்ணு தாரை வார்த்தல். பிரமா யாகம் வலர்த்தல்.

## 22. அர்த்தநாரீஸ்வரர் ரூப தியானம்

பிருங்கி கொண்ட அன்பு காட்ட
அன்னையோர் பால் மேவவே
மருங்கில் நிற்கவேண்டி தன்னில்
இடங்கொடுத்த நாதனே

நெருங்கு அன்பர்க் கபயமோடும்
கடிகை அஸ்தமுங்கொடு
சுருங்குபாசமழு துலங்கும்
அர்த்தநாரி நாதனே.

(இ-ள்) வலது அஸ்தம் : மழு, அபயம்.

இடது அஸ்தம் : பாசம், கடிகை அஸ்தம்

ஒரே மூர்த்தியில் வலது பாகம் சிவ சொரூபம் இடபாகம் சத்தி சொரூபம். நின்ற கோலம்.

## 23. கஜசம்மாரமூர்த்தி ரூப தியானம்

அத்தியுரிக்குமேலிரு கரங்கள்
ஆயுதங் தாங்குங் கீழாறுகரங்கள்
கத்தி கேடயம் கடுசரம் வில்லோடும்
சுத்த சூலங் கபாலம் சூடி முறையே துலங்க
அத்தியுரி டோர்ந்த அத்தியடு மூர்த்தமே

(இ-ள்) வலது அஸ்தம் : தோல் உரித்தகை, கத்தி, அம்பு, சூலம்.

இடது அஸ்தம் : தோல் உரித்தகை, கேடயம், வில்லு, கபாலம்.

யானையை உரித்து பின்புரம் போர்த்தது.

## 24. ஜ்வராபக்நமூர்த்தி ரூப தியானம்

விண்டு விடுத்த ஜுரம் போக்க
வீறுகொள் துடியோடு கனலேந்தி
அண்டர்க் கபயமுங்காட்டி
அதன் நேர் இடக்க சம்வல நீட்டி

கொண்ட தாள்கள் சிரம் மூன்றுக்
கோலங் காட்டிக் கொடும் போர்செய்
பண்டும் இன்றும் ஓயாதல்
ஜ்வராபக்நமூர்த்தி பவந்தீர்ப்பாய்

(இ-ள்) வலது அஸ்தம் : டமருகம், அபயம்

இடது அஸ்தம் : அக்கினி, வலதுபக்கம்* கைமாற்றி தொங்கியது. கால் 3, தலை 3.

## 25. சார்த்தூல சம்மாரமூர்த்தி ரூப தியானம்

சுசிகா அஸ்தங்காட்டி சுருள் கருங்குவளை தாங்கி
நசித்திடல் என்ன நின்றே நவிலப் நவில் அபயங் கொண்டு மாறொடு
உசிதமாய் மடங்கல் தன்னை உய்க்கொண்ட உயர் சார்த்தூல
அசைவில சங்காரா நேர் ஆட்கொள வருவாய் இன்றே

(இ-ள்) வலது அஸ்தம் : சுசிகா அஸ்தம், அபயம்.

இடது அஸ்தம் : நீலோர்பலம், மான்.

## 26. பாசுபதாஸ்திரமூர்த்தி ரூப தியானம்

அர்ச்சுனன் தவத்திற்காக அருள்செய இமயம் சார்ந்து
நற்சரம் வரதங்கொண்டு நவில் மழுமானுங்மேந்தி
சற்கிருஷ்ணன் வலமே நிற்கச் சக்தியும் இடத்து நிற்கப்
பற்குணற்கருள் பாலித்த பாஸுபதாஸ்திரனே வாழி

(இ-ள்) வலது அஸ்தம் : பானம், மழு.

இடது அஸ்தம் : வரதம், மான்.

கிருஷ்ணன் புறம் நிற்கல் அம்மன் இடபுறம் நின்றகோலம் அர்ச்சுனனுக்கு பாசுபதம் தருதல்.

## 27. கங்காளமூர்த்தி ரூப தியானம்

மானுக்குப்புற்கொண்டு மற்றக் கை கபால மேந்தி
மேன் மழுவும் நெற்கதிரும் மேன்மையுடன் விளங்கிட
கோன் சூலம் துடியேந்தி கோலநிர்வாணமுடன்
மான் வலமே நிற்கக்கீழ் வந்த கங்காள மூர்த்தி

(இ-ள்) வலது அஸ்தம் : சூலம், மழு, புல்கொடுத்தகை.

இடது அஸ்தம் : டமருகம், நெல்கதிர், கபாலம்.

மான் நின்றது.

## 28. கேசவார்த்தமூர்த்தி ரூப தியானம்

அரனுமரியும் வேறலவென் அகிலம் உணரவே
பரனும் பாதி மாலும் பாதி பகுத்த உடலராய்
கரநல்ல பயம் வரதமாக மழுவுங் சங்குடன்
தரணி நின்ற கேசவார்த்தமூர்த்தி கண்டிடாய்

(இ-ள்) வலது அஸ்தம் : மழு, அபயம்

இடது அஸ்தம் : சங்கு, வரதம்.

பாதி திரேகம் சங்கரன், பாதி திரேகம் விஷ்ணு.

## 29. பிக்ஷாடனமூர்த்தி ரூப தியானம்

இருகை சூலம் தோள் தாங்க
எடுத்த புல்வலக் கரங் கொண்டு
ஒருகை இடத்து மண்டை கொள
ஒருவன் குண்டன் பிச்சை கொள

வருபுல்லுண்ணமான் வலத்தே
வந்த பிக்ஷாடன மூர்த்தி
திருவும் உலக உயிர்களுக்கே
நீ என்செய்வாய் நின்மலனே

(இ-ள்) வலது அஸ்தம் : டமருகம், புல்கொடுத்தகை

இடது அஸ்தம் : சூலத்தை தோளின்பேரில் பிடித்தகை, கபாலம்.

மான் நின்றது. குண்டோதரன் நின்றது.

## 30. ஸிம்ஹக்நமூர்த்தி ரூப தியானம்

ஈருட நாற்கரம் இருமுகமாய்
இசைந்த சிறகர் புறம் தோன்ற
ஓர் கரம் மழுவும் மானோர் கை
உற்றிட இருகை கீழ் சென்று
பேர்பெரு நரஹரி உரங் கீண்ட
பெற்றபேர் சரபம் எனவும்
சீர்பெறவந் தஸிம் ஹக்ந
சீல மூர்த்தி அருள் செய்வாய்

(இ-ள்) வலது அஸ்தம் : மழு. இடது அஸ்தம் மான் நின்ற கோலத்தில் நரசிம்மத்தை துடையின்பேரில் வைத்து இருகையில் உடலை கிழித்தல்.

## 31. சண்டேசாநுக்ரகமூர்த்தி ரூப தியானம்

பண்டுசேய் ஞல்லூர் வந்த பிராமணன் விசார சருமன்
மண்டிய பக்தி கொண்டு மணலினால் லிங்கஞ்செய்து
ல் | தொண்டுடன் ஆன்பா|ஆட்டி தொழுதுமே பூசித்தேத்த
கண்டவன் தந்தயஞ்ஞ தத்தனும் காலாலெற்றுன்

கண்ட நற்பாலனுஞ் சீர்சிவ அபராதஞ் செய்தான்
விண்டதன் தந்தை யென்னும் வினவாது காலைவெட்ட
சண்டேச பதவிதந்து தன்னிருகையால் மாலை
கொண்டணிவித்துப் பக்கல் குறி கொள்மான் மழுவு மேந்தி

(இ-ள்) வலது அஸ்தம்: மழு, இடது அஸ்தம் மான் இருக்கையாலும் விசாரசருமருக்கு மாலை சூட்டியகை, அம்மன் நின்றது.

இதுவும் மது.

உமையொரு பாகம் நிற்க உற்ற நல்விசாரசன்மன்
அமைவலம் இடமேநிற்க அமைந்திட்ட வணக்கத்தோடே
உமை பாகன் இருகைமாலை உளத்தோடும் களத்தில்சூட்ட
மழு மானும் மேலே ஏந்த மகிழ் ஆனும் கீழா நிற்க
சதிருடன் நின்ற நாமசண்டே.சாநுக்ரகமூர்த்தி

## 32. தக்ஷிணாமூர்த்தி ரூப தியானம்

பன்னகம் அங்கி தாங்கி பகர்சின் முத்திரையுங்காட்டி
மின்னிடுமலை மேலாக மேவியபத்மாஸனத்து
துன்னு நல்லால் கீழ் சேர்ந்து குலவுநூல் இடக்கையேந்தி
நன்முகவேதன் மகற்காக நல்லுரைதந்த தேவே
அறப்பயன முயலகன் வலப்பதம் கீழதா
உறப்பெற தக்ஷிணாமூர்த்தமே உகந்தருள்

(இ-ள்) வலது அஸ்தம்: நாகம், செபமாலை, சின்முத்திரை.

இடது அஸ்தம்: அக்கினி, டோல அஸ்தம், புஸ்தகம்.

மலையில் கல்லால மரத்தின்கீழ் உட்காந்தது முயலகன் காலின்கீழ்.

## 33. யோகதக்ஷிணாமூர்த்தி ரூப தியானம்

உற்றபல் தவசியோர்க்கும் யோகத்தின் விளக்கங்கூறி
பற்றிய மழுமானோடு பருமலை வலக்கை வைத்து
மற்றொரு இடக்கரத்தை மருவிய முழங்கால் சேர்த்து
திட்டமாய் அமர்ந்தயோக தக்ஷிணாமூர்த்தி நாதா

(இ-ள்) வலது அஸ்தம் : மழு, கிரியில் ஊன்றியகை

இடது அஸ்தம் : மான், டோல்லஸ்தம்.

உட்காந்தகோலம்.

## 34. வீணாதக்ஷிணாமூர்த்தி ரூப தியானம்

அக்கமாலை சுவடியேந்தி அணிகொள் மதிசேர் சடையுடன்
தொக்கயாழும் இரு தடக்கைத் தாங்கி மீட்டியொலிசெய
பக்கம் நின்ற தும்புரர் பரிமதம சுக்ர பலரும் வேண்ட
சொக்கயாழில் கானமீட்டும் வீணா தக்ஷிணாமூர்த்தமே

(இ-ள்) வலது அஸ்தம் : அக்ஷயமாலை, வீணை தட்டினகை

இடது அஸ்தம் : புஸ்தகம், வீணைபிடித்தகை

நின்ற கோலம்.

## 35. காலாந்தகமூர்த்தி ரூப தியானம்

தோலுடுக்கை சரம் கேடயம் தாங்கியே
தோன்றவலக் கரங்கள்
மேன் மழு வில்லுய் மிளிர் நாந்தகமுடன்
மிடுக்குடன் இடமேந்தி

பால்கொள் இருகரம் சூலங்கொண்டே
மார்க்கண்டன் தழுவிய நல்

கோலலிங்கத் துதித்தே காலனை
குலைத்துதைத் தழித்ததுவே

சால்கொடு காலாந்தக மூர்த்தியெனக்
கருதிடு பரம்பொருளை

இதுவும் மது.

காலமுளவயது பதினாறென நிலைத்திடக்
கருணைசெய வேண்டு மென்றே

கரங்களொடு தழுவியே பூசனை செய்திட்ட
காளை மார்க் கண்டனுக்கா

தாலும் ஒரு லிங்கந்தீனில் நின்ற வாறே
தயவுபெற வெளித் தோன்றியே

தடக்கை மழுமானேந்தித்
தடுத்திடச்சூலமும் தன்னிரு கரம்பிடித்தே

மாளவென ஏமனைக் காலாலுதைத் திட்ட
மட்டிலா ஞான ஒளியே

மண்டலம் எங்கு மொளிர் செங்-கதிர்செய் வேணியனே
மதித்திடு காலாந்த கா

சால நீ துணைசெய்து அஞ்ஞானம் நிறைந்ததால்
சலித்த ஜெயம் தழைய வேண்டி.

சர்ந்தப்பமும் காலம் தேச இடம் சார்பாக
சார்ந்து மே யாட்கொள்வாய்

(இ-ள்) வலது அஸ்தம் : மழு, சூலம்பிடித்தகை.

இடது அஸ்தம் : மான், சூலம்பிடித்தகை

இலிங்கத்தின் உள்ளிருந்து எமனை உதைத்தது. மார்க் கண்டேயர் லிங்கத்தை தழுவியது.

## 36. காமதகனமூர்த்தி ரூப தியானம்

அக்கமாலை கண்டி கொண்டு அருளுடன் சின்முத்திரை
தக்க டோலஸ்தமும் தாங்கி கிரிமேல் வீற்றிட
பக்க நின்ற மதனன் தேகம் பற்றிச் சாம்பராகவே
நெக்குருகி ரதியும் இடப்பால் நேர காமதகனனே.

இதுவு மது.

துடியோடொரு மான்மேற் கொண்டு
தொடர்ந்த மற்றிருகரங் கோத்த
படியே பதுமாசனத் தேடே
பருப்பத்த தமர்ந்த பரமேசா
அடிகேள் தேவர் தமக்கரத்தன்
ஆகமிழக்க வந்த பதன்
பொடியேயாக வலத்தேயும்
புலம் பிரதியும் இட முறவும்

சனகாதி முனிவர்க்காகச்
சற்றேயோகத் திருக்க
புவனாதிலோகமும் மேல்
புரிதொழி லொன்றின்றாக
அயனாதி முதலோர் சொன்ன அங்ஙனம்
மதனன் செய்ய
கனலான கண்ணால் காலந்தான்
கர்த்த காலாந்த மூர்த்தி

(இ-ள்) வலது அஸ்தம் : அக்ஷய மாலை, சின்முத்திரை.

இடது அஸ்தம் : கெண்டி, டோலஅஸ்தம். மலையில் உட்கார்ந்த கோலம். மன்மதன் ரதி நின்றகோலம்.

## 37. இலகுளேசுவரமூர்த்தி ரூப தியானம்

மழுவுஞ் சூலமும் வலம்பற்றி பற்றிடப் புறத்தேகண்டிகொடு
அரிமுக ஹஸ்தம் மேல் காட்டி ஆசானுன லகுளேசர
பரகதி உயிர்கள் பெறுமாறும் பாசம் நீங்கவும் போதித்து
ஹாஜல தத்துவ புவனங்கள் அப்பால் நடுவன் வீற்றிருப்பர்

பூதங்கடந்துபொறிகடந்து புலன்கள்கடந்து பொற்புறமேல்
மீதங்கிருந்த லகுளேச புவனம் தங்கி மேவிய நல்
வேதங் கடந்த வாயாளுய் விரித்துக் கூறும் கரத்தாளுய்
மோதும் சூலம் மழுகண்டி மொலிக்க இருக்க லகுளேசா

(இ-ள்) வலது அஸ்தம் : டமருகம், சூலம்.

இடது அஸ்தம் : கண்டி சிம்மமுக அஸ்தம்.

## 38. பைரவமூர்த்தி ரூப தியானம்

அரவா பரணன் திருவாணி,
ஆலுந் தலை மாலையு மணிந்து

நிரமே குருதி நேர் நிறத்தோன்
நின்றே பைரவ ஊர்தியுடன்

காமேல் டமருக பாசம் ஒளி
கா லும் சூல கபாலமுமாய்

சிரமேல் ரக்த நிறவேணி
சீர்குறை மதியுள பைரவமே

அந்தகனென்னு மரக் கனகம் அழிக்க வேண்டிப்
போர் செய்து

நின்ற சூலத்தால் தூக்கி நிலமே காணு
மேல் தூக்க

வந்தித்தேத்த அருள் கூர்ந்து
வைத்தான்பூத கணத் தலைமை
உந்தியுளுற்ற பார்க்கவனும்
உதித்தான் புவியில் சுக்கிரனென்றே

(இ-ள்) வலது அஸ்தம் : டமருகம், சூலம்.

இடது அஸ்தம் : சுவான நாகம், கபாலம்.

நாய் வாகனம் நின்றகோலம்,

## 39. ஆபதோத்தாரணமூர்த்தி ரூப தியானம்

முப்பத்து முக்கோடி தேவர்களும்
முருகன் கணபதி மாலயனும்
நாற்பத் தொண்ணுயிர முனிவர்
நவக்கோள் சப்தமாதர் ரிஷிகள்
ஆபத்துதவுமெனப் பதினொன்
அரிய கணத்தோடும் சூழ்ந்தேத்த
ஆபத்தோத்தாரண னென்றே
ஆடவனாகித் தண்டுடனும்

கமண்டல மேந்திச் சர்வகாலங்
காரத்தொளிரு மாதனத்தே
விண்டல மண்டலத் தவர்க்குற்ற
வினைகள்களைய ஆங்காங்கே
கண்டொளி கூசிடும் வடிவுடனே
காத்தருள் செய்தீய் ஆத்திகமாய்
சமண்டமாயச் சிவமயமாம்
சைவம் வளர்க்கும் தேசிகனே

தமருகம் சுவான பாஸமுத்
தலைசூலம் கபாலந் தாங்கி

அமருநல் லாபதோத்தாரண மூர்த்தி
எனப்பேர் கொண்

சமதிகராரே யென்னு
சாற்று நல்லுருவாய் நின்று

எமர்பெறு வினைகள் தீர்க்க
எழுந்த எம் தேவா போற்றி

(இ-ள்) வலது அஸ்தம் : டமருகம், சூலம்

இடது அஸ்தம் : சுவானபாசம், கபாலம். நின்றகோலம்

## 40. வடுகமூர்த்தி ரூப தியானம்

ஒலிபடு தமருகம் தண்டுங்கொண்டு ஒளி வீசும்
சடைதலை தோன்ற ஈட்டி கபாலங் கையேந்திநின்
பலியிடும் நோக்கொடும் பரமனுல் வந்த பரமே
ஒலிபடு நாமம் வடுக மூர்த்தியாம் ஓ ஓ கேள்

துந்துபிமைந்தன் முசுண்டன் தவத்தால்
தோள்வலி கொண்டு

அன்றே அரக்கரை ஜெயித்தடிப்படுத்தும்
அமர்தோறற

இந்திரன் மலரவன்பால் அபயம் என
எதிர்ப்போரில்

கன்றியமனத்தவனுக அபயம்
எனக் கறைந் திடவும்

சங்கரன் செவியில் பைங்கமலத் தோன்
சாற்றும் ஒலி கேட்டே
தங்கிய வடுகனை அங்கனம்
விளித்து தருக்கிய முரணியசீர்
மங்க முசுண்டனைத் தொலைத்தே
மலரனை மகிழ்விப்பாயெனவும்
ஐந்கரன்தாதை தன் மூர்த்தமாய நீ
அப்படியே செய்தாய்

(இ-ள்) வலது அஸ்தம் : டமருகம், ஈட்டி.

இடது அஸ்தம் : தண்டு, கபாலம். நின்னகோலம்.

## 41. க்ஷேத்திரபாலகமூர்த்தி ரூப தியானம்

அண்டகடாகங்கள் யாவும் ஆனவோர் பிரயைத்தாழப்
பண்டுள மூர்த்தம் நீக்கிப் பத்தினிக் கௌரியோடும்
கொண்டரு பன்னுன்கான கலையாடையாகப் பூண்டு
விண்டநற் பிரணவம் தோணி வீறுடன் வீற்றிருக்க

வருணனும் மலர்த்தாள் போற்ற வாலவன் அருள் சுரந்து
பரு புவனங்கள்யாவும் பதங்களில் நிலைத்து நிற்க
மருவிருள் போக்கி கற்பத்தெழுபுனன் விழியால் மாற்றி
நிறுவினன் க்ஷேத்ரபாலனென் மூர்த்தம் அன்றோ மன்னே

இது வுமது

காத்திரத்துடனே நின்று வலக்கரம் தண்டொன் றேத்த
மாத்திரி சூலம் பற்ற மற்றிடம் துடி கபாலம்
சேர்த்திடப் பிடித்தே சோர்ந்தகுழல் நீர்ப்பிரளயத்தை
மாத்திய மூர்த்தி கண்டாய் க்ஷேத்திரபாலன் ஆவான்

(இ-ள்) வலது அஸ்தம் : தண்டு, சூலம்.

இடது அஸ்தம் : டமருகம், கபாலம். நின்றகோலம்.

## 42. வீரபத்திரமூர்த்தி ரூப தியானம்

பாரத்தடிகோடரி நீள்வாளுடன் பாசம் வலந்திகழ
நேரக்கேடயம் பாசம் மணியுடன் நில்விடக் கரங்கள் பற்ற
கோரத்திரிபங்க மாகிய வுடலொடு கோலங் கொண்டவனே
வீரப் பிரபல பத்திரமூர்த்தியென் விளங்கிடுகைலையனே

இது வுமது

அமரராலழிந்து நொந்த அவுணர்கள் கவியை வேண்ட
கவனமாய் வீரமார்த்தாண்டனை அழிக்க வல்லான்
அவனயன் நினைவே கொண்டு அருந்தவமியற்றுவானேல்
புவனமும் விண்ணும் வெவ்வான் புரிந்திடீர் பரிசிதென்றான்

வீரமார்த்தண்டன் செய்த வெறு வுறுதவத்தால் வேதன்
சாரால் வரமதீய சான்ற நற்றிண்டோன் கொண்டு
பாரவேசமரில் விண்ணோர் பரசிவம் அபயம் என்ன
சீரிய கோபங்கொண்டு வீரபத்திரனை ஏவ

வீரபத்திரன் வீர மார்த்தாண்டனை
கோறிச் சென்று குறு முறு வலுடன்
ஏறிக்கையே ஏந்தல் பால் கூறினன்
ஏற்றின் ஊர்த்தியன் ஏவிய அவனே.

அம்புவாளும் சூலம் தோட்டி
ஆள்வலக் கரங்கொடு
தங்கிடக் கரங்களில்
தளிரும்வில் தோல் மழுதுடி

தங்கநின்று வீரமார்த்தாண்ட
னென்ற அவுணனை
மங்கலில் போர் செகுத்த
மாசில் வீரபத்திர!

(இ-ள்) வலது அஸ்தம்: கத்தி, கண்டடோலிதடி.

இடது அஸ்தம்: கேடையம். பாசம், மணி.

திரிபங்கமாக நின்றது.

## 43. அகோராஸ்த்ரமூர்த்தி ரூப தியானம்

அரனருள் தவவலி முழுதுடன் திருவிட
அற்புறு சத்தத்தந்தென பெயர் கொரு
முழுமுடன் இமயவர் மாலயன் முனிவரை
மொய்த்துய்த்திமகிரி வளர்பெரு சாரலில்
அமைவர ஒரு மகம் வளரென வெறுவிட
அன்பற்ற வரவர் பரனல் தொருமகம்
நவநவமிது வென மனரி, றைதளர் வுற
முட்டுற்றவமிது வென கொறுமெலே
மரைமலர்மகன் மகன் பரசிவ மருகுறீகி
அக்ரமமிச் செயல அழிக்க வென்றுரை செய

மண்டலத்தாழியும் விண்டலத்தேரும்
மருவுகால் பரியும் திரிஎரி சரமும்
கொண்டநல் மதி நான்குமரன் பாகனு
கொண்டுமே செல்கென குண்டலன் உரைசெய

கண்ட வீரபத்திரன் கடுகி
சமரர் செய்துகை
அண்டு அகோராஸ்திரம் அவனுடல்
பட விடுத்து
அழித்து சென்றனன் அதாம்
அகோராஸ்தர மூர்த்தி

இதுவுமது

சூலமும் வாளும் மழுவொரு சரமும்
தொடுக்க முறையே வலக்கரங்க
பாலமும் தோலும் துடியும் வில்லும்
பற்றிப்பிடிக்க இடக்கரங்கள்
மால் கொடுவந்த சத்த தந்தவன்
மதங்கெட நின்றே அமர் முருக்கி
கோல்கொடு வென்ருன் அதனுலொரு பெயர்
கொண்டான் அகோராஸ்த்ரமூர்த்தி யென்றே

(இ-ள்) வலது அஸ்தம் : சூலம், மழு, பாணம், வாள்.

இடது அஸ்தம் : கபாலம், கேடயம். டமருகம், வில்லு.

நின்ற கோலம்.

## 44. நக்ஷயக்ஞஹத மூர்த்தி

தோட்டி பாசமும் வாட்டிடுவாள் தோல
தோன்ற இருபுறமும்
ஒட்டு சமுதா ரொள்மணி சூலம் ஒளிரும்
மண்டை கொள்கை

காட்டிட நின்றே வேள்வியில் தக்கனை
தடிந்தே தலை வேரு
ஆட்டிட மறிசிரம் அஞ்சலி யஸ்தம்
அலவோ தக்ஷயஞ்ஜன்

வரலாறு

(கரியன்) பதுமன் மகார் பதின்மரிலோர்
புதல்வன் தக்கன்
பரிந்து புரிதவப் பயனால்
பயந்தான் ஓர் பெண்
பதுமை நிகர் பார்வதியும் பலநாள் வேட்க
பரமசிவனும் அவள் மணந்து மறைந்தான்
அறிந்த தக்கன் வெகுண்டானை
மதியானைக, அண்டரெலாம்

(ஒருங்காக அழிவாய் சேர்! காண்!)

சென்றிரைஞ்சாய் அழியல் என்ன புரிந்தவர்கள் சொற் கொண்டே கைலை எகிப்புகு முன்வாயற் காப்பாளர் பேகேல் என்றார். திரும்பிய தக்கன் தன்பால் திடமுடன் உரைத்தவும் பாக் கரும்பிய பரிசேகூறி அனைவரும் மத்யேல் என்ன தருமலர் மகன் ஓர் வேள்வி தயவுடனியற்ற வேண்டி பெருமையின் கைலை நன்றி போற்றி தன் பரிசுரைத்தான்.

நந்தியை நாம் விடும்போம் நவிலும் உம்
மகத்து என்ன
புந்தியுன் மகிழ்ந்த வேதன் புதல்வனுக்
சோலை போக்க

சந்தித்தே வேள்விக் குற்றார்
தக்கனும் நந்தி கண்டு
நிந்தித்தே தாதை தன்னை நிலை கெடப் பேசிப்பின்னும்
வந்தித்து மாலுக்கீவாய் மாவலி எனவுரைத்தான்

நந்தி இந்த நிந்தை கண்டு
சிந்தை நொந்து அந்தகா
கந்தன் தந்தை அன்றி எங்கும்
கருதும் மகத்தோர் சிரமறும்
எந்தை இழிந்த உந்தன் சிரமும்
இழியும் மண்ணில் பொய்யல
சொந்தமாக நின்ற சுரக்கும்
சூரபத்மானால் துயர்

எய்தும் என்றும் நிலை நீங்கி
எந்தை சார்ந்து ஏனையரும்
செய்தற் கெடுத்த மகம் விடுத்து
சிந்தை நொந்து இருந்தார்கள்

இங்ஙனமாகத் தக்கன் ஓர் மகம்
இயற்ற மனங் கொண்டு
சங்கரன் நீங்க புங்கவர் விண்ணவர்
சாற்றும் ஏனையுரும்
துங்கமுடன் வெண் வரவென விடுத்தே
தோன்றிய ததீசியை நீ
பொங்கமுடன் அவியேற்பீர் என்ன
பொருத்தமும் பல கூற

அங்கவர் அம்முறை யழகல வென்வும்
அவன் மதி யானுகப்

பொங்கிய முனியும் பொன்றச் சாபம்
பொழிந்தே, தனித்தனியாய்

இங்கிவன் தலையற, இமயவர் உயிர்கெட
எம்போல் முனிவரும் நீர்

தங்கிய தரையில் பிறந்து பிறந்து நீர்
தாவுக பல பவங்கள்

—என்று கூறிச் சென்ற

| | |
|---|---|
| தக்கன் வாகன் | பக்கம் உணர்ந்த பின்னை |
| தக்கன் தேவி | நண்ண ஆங்கே |
| ஒக்க ஓர் மொழி | உரையா னுகவும் |
| செக்கச் சிவந்த | கண்ணு னாகி |
| பரமன் பாலே | கடுகிச் சென்று |
| கெடுப்பாய் தக்கன் | கேடுனு மகமே |
| என்றள் | எனலும் |

கௌரி தேவியின் காந்தன் நினைக்கவும்
விழியினின்று வீரபத்திரன் தோன்றினன்
ஒழிவிலாயிரஒளிவிடுமுகமும்அதன்னிரடிய ஆன்றகரங்களும்
பழியிலா கௌரிபால் தோன்றினள்

உக்ரமாகாளி தோன்றிய தக்ஷயக்ஞன் தொழுது பின்
கணங்கள் சூழ
கான்றிடக் கனலை வீசும் கண்ணனும் மகத்தே யுற்று
தான்றிட்ட தேவர் மூகர் ஆகவாய் பேசாராக
தான்றிடமாகப் பிரமன் தலையினுல் குட்டும் இட்டான்
மதியினைக் காலால் தேய்த்தும் மகத்தனை உயிர்மாய்க்குங்
கால்

பதியினில் எதிர்போர் நேர்ந்த பச்சை வண்ணனைத்
தெழித்தும்
அதிபனென் அண்டர் கோனை அரியதண்டாலொங்க
ஏதிபடு எரியின் கைகள் இரு கூறுபட அறுத்தும்

யெமனைக் கசக்கித் திசையில் வீசி நிருதியின் தோள்றுத்து
நாமன வருணனை வயிறு கீண்டும் வாயுவை
ஆமனைவரையும் அலர உறுத்தொடுக்கி அலர அடித்தடித
தலக்கழித்து
நாமனைவர்க்கும் பரனேபரனென நனவுறு நிகழ் வித்தான்

தக்கன் தலையறுப்புண்டு மகத்தில் வேக
தாங்காத வேதவல்லி தான் அங்கே
மிக்கவள் மாகாளியம்மை காதும் ஏனைமாதருக
தலைகளையும் அறுத்து வீழ்த்தும்
பக்கமுன் திசைபாலர் மனையார்க்கும்
பாங்கான நா மூக்கு, முலை செவியோடு
அக்கரங்கள் அறுபடவும் அசரீரீ தோன்றி
அமர்ந்திருவீர் கோபம்விடும் என்ற தன்றே

உமாகாந்தன் தேவியுடன் விடைமேல் தோன்ற
உற்றுணர்ந்து மகத்தழிவு உமையாள் ஆற்ருது
தெமைக் காவாய் இவர்கள் எலாம் என்ருல
மாய்ந்தார் ஏந்தலே எழுப்பிடுவீர் என இறைஞ்ச
சமாதானமாகவுமே உயிர்கள் தந்து தத்தம் நிலே
கொள்வீர் நீர் சார்வீர் என்ன
தமா என்னை மகனையும் நீர் எழுப்பு மென்று
நான்முகனு இறைஞ்சிடவே

அனுகம் வைத்துத் தக்கனை யாலகு ஆகத்துயிர்ப்பிக்க
நன்றென் றெனி
நிருகுணம் விட்டு வெட்கிநாணி நீள்கரங்குவித்து நின்றான்
பனுமனமே என விண்ணோர் நினைவுற் பாங்கர் எடுத்தேத்த
பனுபஜியென வரதக்ஷயஞ்ஜ பசுபதி ஆனால் மூர்த்தி

வலது அஸ்தம் : அங்குசம், கத்தி, சமுதாரு, திரிசூலம்.

இடது அஸ்தம் : பாசம், கேடயம், மணி, கபாலம்.

நின்ற கோலம். பக்கத்தில் தக்கன் ஆட்டுகிடாமுகமாக அஞ்சலி அஸ்தராய் நிற்றல்.

## 45. கிராத மூர்த்தி

பாசுபதம் வேண்டிப் பார்த்தன் தவமியற்ற
நேசமறு துரியன்விடு நிமிர் ஏன மூகசுரன்
நாச முற எடுத்த நற்சரமும் வில்தாங்கி
வாசவேடுலச்சியொடும் வந்த கிராத மூர்த்தி

வலது : பானம். இடது : வில். அம்மனுடன் திரிபங்கமாக வேடர் ரூபமாக நின்றது. பன்றி பக்கத்தில்

## 46. குரு மூர்த்தி

கன்மத் திரையற நும்சித் தொளிபெறக்
கடலுல கிற்பிறந்தே
நன்புத் தளிகொடு பரிகொள ஏகிய
தன்மணி வாசகனை

தின்சத் தருள் கொடு தஞ்சத் துட்னெழுத்
திருப்பெருந் துறை நண்ணிச்
சின்முத்திரையுடன் பன்திருமுறை கொடு
திகழ்தரு குரு மூர்த்தி

வலது அஸ்தம்: சின்முத்திரை. இடது அஸ்தம்: புஸ்தகம் உட்காந்தது. மாணிக்கவாசகரை தடுட்டாட் கொள்ளல்,

## 47. அசுவாரூட மூர்த்தி

குடை பிடித்துச் சீனி பற்றிக்
குதிரைமே லமர்ந்திருந்தே

நடை பல வகையுங் காட்ட
நண்ணி பாண்டியன் முன்னின்று

அடைவுடன் பரிகள் காட்டி
அமாத்தியன் மருள் போக்கிட்ட

கடு நடை அசுவாரூட
கருணைமா மூர்த்தி போற்றி

வலது அஸ்தம் : குடை பிடித்தகை. இடது அஸ்தம் : கடிவாளம் பிடித்தகை. குதிரையில் குந்தினது.

## 48. கஜாந்திக மூர்த்தி

நாற்கோட்டொன் டொடிந்தத்ால் மேல்
நாரி பாகனைப் பூசிக்க

மேற்பட்ட அருளானகி
மேதினி வந்து அந்த

பேற்பட்ட ஐராவதத்தின்
எருந்துதி கரத்தாற் பற்றி
காத்திட்ட நின்ற கோல
கஜாந்திக மூர்த்தி போற்றி.

வலது அஸ்தம் : கத்தி. இடது அஸ்தம் : யானை தும்பிக் கையை பிடித்த கை. யானையை தடுட்டாட் கொள்ளல். நின்ற கோலம்.

## 49. ஜலந்தரவத மூர்த்தீ

சூசியஸ்தம் வரதம் சூடும் மழுமானுடனே
ஏசில் மகபதியின் இடர்தீர்க்க—பேசிடுநல்
காலால் திகிரி கருநிலத்தில் கிரி சிரம்
பாலால் தாங்கி யிதைப் பாரெனவே—தானவனும்

ஜலந்தரனும் அங்ஙனமே தான் கொளவே அத்திகிரி
ஜலந்தரனை இருபிளவாத் தான் பிளந்தே வருபத்தரவே
சங்கரின் திருக்கரத்தே தாங்கவந்தெய்
தியதே பொங்குறு நல்லொளிதிகிரி பொருந்தி-அங்கதனால்,
ஜலந்தரவதமூர்த்தி யென்ன திரு நாமமுடன்
நிலம் பெறவே நின்றிட்டாய் நின்மலனே

வலது : சூசித அஸ்தம், மழு. இடது : வரத அஸ்தம். மான் சலந்திரா சூரன் சக்கரத்தின் சூச்சியால் தலை அற்று விழுதல்.

## 50. ஏகபாதத்திரி மூர்த்தி

ஒரு பாலயனும் ஒரு பால் மாலும்
ஒன்றித் தோன்றிடவே
ஒரு கால் நின்று மழுமானேந்தி
ஒன்றும் மூர்த்த மென

தகு அபயம் வரதம் இருகரங்கொடு
தானே தாஞ்கி

உரு தரு ஏக பாத மூர்த்தம்
உலகில் ஒன்றுமே

வலதுஅஸ்தம்: மழு,அபயம். இடதுஅஸ்தம்: மான்,வரதம்.

பிரமாருத்திரன் விஷ்ணு மூவரும் ஒரு பாதத்தில் நின்ற கோலம்.

## 51. திரிபாத்திரி மூர்த்தி

மூர்த்தி மூவரும் ப்ராகிருத
முடிவான பிரளயந் தன்னில்

நேர்த்தியாய் மகேஸ்வரரான
நிர்மலன் பால் லொடுங்கிப்போக

சார்த்திடு அபயம் வரதம்
சார் மழு மானுங் கொண்டு

ஆர்த்த சீர்திரிபாதத்து அமர்ந்து
நின்றருள்வன் மூர்த்தி

வலது : மழு, அபயம். இடது : மான் வரதம்.

பிரமாருத்திரன் விஷ்ணு மூவரும் மூன்று பாதத்தில் நின்ற கோலம்.

## 52. ஏகபாத மூர்த்தி

ஆகம புராண வேதம்
அணைத்தும் ஓர் நெறியே கூறும்

லோக சங்கார காலத்து
ஒருவனே மூர்த்தி யென்ன

ஆகம் ஓர் பாதத்தோடே
அபய, வர மழுமான் காட்டி
ஏக மாம் பாத மூர்த்தி
எனப் பெயர் கொண்டு நிற்பன்

வலது : மழு, அபயம். இடது : மான், வரதம்.

ஏக பாதத்தில் நின்றகோலம்.

## 53. கௌரிவரப்த மூர்த்தி

உமையமை யுடலிற் ருென்றும்
ஓருருவன்றி வேறு
அமரர் மற்றெவரானும்
அழிபடா அசுரன் மாளப்
பிரமனும் ஏனைத் தேவர் யாவரும்
போற்றத் தாணு
அமை நிகர் தோளி நோக்கி ஏ காளி
வருக என்றுர்

ஐயனங் குரைத்த மாற்றம் அம்பிகை செவியி றேந்து
பொய்யல நீ ரிவ்வாறு புகன்றிடற் கேதென் னென்ன
வெய்யவன் அசுரன் மாள வேண்டியே உரைத்த தென்ன
மைவிழி யுமையும் இமயச் சாரலில் வழிபாடுற்ருள்

அந்தரத் தவர் தாமுற்ற அவதியை போக்க வென்று
வந்து முன் நின்று போற்றி வருகரங் கூப்பி வேண்ட
முந்தை நம்மையன் சொன்ன மொழிப்படி தன்பாலுற்ற
கந்தர நிறம் வேருக்க காளியாம் துர்க்கை யாகி

வீதி தந்த அரியூர்ந்து விமலை யேவ
வீழ்த்தி யவுணனை விந்தகிரியில் நிற்ப
பதிவிந்து அருள்தந்து கௌரி யென்னும்
பெயர் கொண்டு பொன்னிறத்தோடும் நிற்க
உபதேச வரதமுடன் மழுமான் காட்டி
உயக்கொண்ட கௌரி வரப்த மூர்த்தி

அம்பிகை அஞ்சலி யஸ்தமுடன்
அருகே நிற்க மழுமானும்
சஞ்சலில் உபதேசக்கரமும் சாரும்
வரத கரங் கொண்டு
கொஞ்சுங் குறுநகை கொள் முகமும்
கோலச் சடையும் மேன்மிளர
விஞ்ச உபதேசஞ் செய்—
விமல கௌரி வரப்த மூர்த்தி

வலது : மழு, உபதேசித்தகை. இடது : மான், வரதம்.

அம்மன் வலதுபுரம்; விஷ்ணு இடதுபுறம் நின்னது.

## 54. சக்ரதாநஸ்வரூப மூர்த்தி

குபன் பொருட்டுத் ததீசியுடன் குறித்துப் போர்
பொருததனுல் குலைந்த ஆழி
உபயோகம் இலை எனவே வேறு பெறச்
சங்கானை உற்றே நோற்ற
ஜெபயோகத்தால் மகிந்தே சலந்தரனைச்
கங்கரிக்க சக்கரம் தந்து
அபாயமிலை ஆளுகென ஆதரித்தார்
மாலைசிவன் அன்றே அன்றே

சக்கரம் தன்த கையும் ஜெயவரமீந்த கையும்
உக்கிர மழுவும் மானும் உகந்துமேல் ஏற்ற கையும்
பக்கமே அமர்ந்த கோலப் பார்வதி அம்மன் காண
சக்கரம் பெறமால்நிற்கச் சார்ந்த சக்ரதானஸ்வரூப மூர்த்தி

வலது அஸ்தம் : மழு, சக்கரம். கொடுத்தகை.

இடது : மான், வரதம். அம்மானுடன் உட்கார்ந்தகோலம் விஷ்ணு சக்கரம் பெறுதல்.

## 55. கௌரீலீலாஸமந்வித மூர்த்தி

மழுமானேந்தி அபயந்தந்து அம்மனை யணைத்து
புழுகுடன்நாற புளகம்தோன்ற புன்னகை புரிந்து
கௌரியருகே களங்கமற்றமர களிப்புடனிருந்த
கௌரீவிலாஸ மந்வித மூர்த்தி கருணை செய்வாய்

வலது அஸ்தம் : மழு, அபயம். இடது அஸ்தம் : மான். அம்மனை அணைத்தகை. உட்கார்ந்த கோலம்.

## 56. விஷாபஹரண மூர்த்தி

பாற்கடல் கடைந்த போதங்கோர்புரட யாலந் தோன்ற
ஏற்றிடர் கருகரல்லார் ஏந்தலை சென்று வேண்ட
ஏற்றிடமூர்ந்து அம்மை எழில்தர உடன் சேர்ந்தூர
காத்திடு அபய வரதம் காட்டி மான் மழுவுங் கொண்டாய்

பொங்கிய ஆலங்கொண்டு பொருந்திட கண்டத்தூற்றி
மங்கிடா திரும்பீர் என்று மாமுனி தேவர் யார்க்கும்
தங்கிய வரங்ளீந்து தான் தனி யென்ன நின்ற
மங்கலில் விஷாபஹர மாபெரு மூர்த்தி போற்றி

வலது அஸ்தம் : மழு, அபயம். இடது அஸ்தம் : மான் வரதம். ரிஷபத்தின் மீது அம்மனுடன் ஆரோகணித்தல்.

## 57. கருடாந்திக மூர்த்தி

சூலம் நாகம் மேலேந்தி
சுமுக அபாய வரதமுடன்
கோல அம்மை உடன் அமர
கோலங் கொண்ட பெருமானே
சால கருளன் அஞ்சலித்தே
சார்ந்தே நிற்கப் பணிவுடனே
ஞாலங் கண்ட கருடாந்திக
நம்பன் மூர்த்தி அடி போற்றி

வலது அஸ்தம் : சூலம், அபயம். இடது அஸ்தம் : நாகம், வரதம். அம்மானுடன் உட்கார்ந்த கோலம். கெருடன் அஞ்சலி அஸ்தத்துடன் நின்றது.

## 58. பிரமசிரச்சேத மூர்த்தி

அரியும் அயனும் தம்முன் கொண்ட
அகத்தால் வெருவிப் போரிடவே
பெரியன் யாரென அறியுவணம்
பெம்மான் சோதிமயமாகச்
கரியன் கமலனுங் காணுமல்
கலங்கி நின்று கருத்தொழிய
மரியும் மழுவும் வரதமுடன்
மகிழ்ந்தே சிரங்கொய் கையனும்ாய் :

ஐய்யன் நிற்க விதியும் நொந்து
அஞ்சலித்தே அருகுறவும்
மெய்யன் பரமன் யானே என்ற
மேன்மை காட்டும் உருவுடனே
தையல் சேர்ந்த யாகமோடு
தரணிபோற்ற வரு ஏக
பொய்யில் பிரம சிரச்சேத
மூர்த்தி யென்றே விளம்பிடுவீர்

(இ-ன்) வலது அஸ்தம்: மழு, பிரமா சிரத்தை கிள்ளியகை.

இடது : மான் வரதம். பிரமா அஞ்சலி அஸ்தத்து, ன் நின்றது.

## 59. கூர்மஸம்ஹார மூர்த்தி

கூர்மத்தைக் குத்தியகை
கூர்வரதம் ஈந்திடுகை
நேர் மழுமான் ஏந்திடுகை
நின்மலனும் பெருந்தகைமை
ஆர்ந்த பொருள் நேர்ந்திடுமாறு
அருள் கூர்ம ஸம்ஹார மூர்த்தி

வலது அஸ்தம் : மழு, கூர்மத்தை குத்தியது.

இடது : மான், வரதம்.

## 60. மச்சசம்மார மூர்த்தி

மெச்ச வாள்கொடு மச்சம் வீட்டும்
வெற்றி பெருங்கையே
அச்ச கேடயம் தாங்கும் கையே
அடல்தரு ஒரு மெய்யே
சொச்ச மழுமான் ஏந்திடுகரங்கள்
சோரா வெளி வீசும்
மச்ச ஸம்ஹார மூர்த்தி
மகிதலம் அறியாதோ

(இ-ன்) வலது அஸ்தம் : மழு, மச்சத்தை கத்தியினால் வெட்டியகை

இடது : மான், கேடயம்.

## 61. வராஹஸம்மார மூர்த்தி

தண்டொடு பாசமும் தாங்குங் கரங்கள்
டமரகம் ஏந்தும் இடனோர் கரமே
சண்ட வாரகம் தாக்கிடு சூலம்
தாள் கொண்டொளிரும் துலக்கரமே
அண்டர்கள் துதிசெயு அமல நிற்குணன்
அனாதி அருள்வடி சோதிவானவன்
கொண்டல் எனவரு வராஹ ஹஸ்தம் செய்
கோல மூர்த்தமே ஓர் மூர்த்தம்

(இ-ன்) வலது : தெண்டு. சூலத்தால் வராகத்தை குத்தியது.

இடது : டமருகம், பாசம்.

## 62. ப்ரார்தநா மூர்த்தி

தாருக வனர்மேவிய ஒரு மூவர் காரணமாய்
தக்கவவர் பத்னிகளை தவறுப் பிழையாக்கி

மேவிய திருமாலின் தூது
ஆசம் பெண்ணுருவாய்
தந்திட வந்த அந்த முன் மூழ்கிதர்
தானும் அவமுறவே
பார்வதி வெகு கோபமுடன் வர
பார்த்த பரபதியும்
பற்றிடமோவாய் தோள்மேல் ஒரு கை
தாவிட நின்றவனாய்

மான் மழுவும் மேல் மிளிர வந்த
கரங்களுடன்
மடங்கிய வுள்ளத் தனைய
தயவு வேண்டிய பெருமானே
கோலவடம் சாலவுறுக்
கொண்டப் பணியாலே
கொந்தகை மங்கைதனை
ப்ராந்தனைசெய் மூர்த்தி

(இ-ள்) வலது : அம்மன் மோவட்டயை தாங்கிய கை

இடது : மான், அம்மன். தோளின் பேரில் போட்ட கை.
அம்மன் நின்றது.

## 63. ரக்தபிக்ஷாப்ரதாந மூர்த்தி

மாலும் தேவியும் நின்றேத்த
மற்றவன் குருதி கபாலத்தே
பாயும் வண்ணம் சூலத்தால்
பாயக் குத்திய கையுடனே
ஏயும் மழுவும் மானுமுடன்
எந்தை சின்முத்திரை காட்டி
பாயும் ஒளி சேர் பரசுடன்
ரக்த பிக்ஷாப்ரதாந மூர்த்தி

(இ-ள்) வலது அஸ்தம் : மழு, சின்முத்திரை, சூலம் குத்தியது.

இடது : மான், பரசு, கபாலம். இடதுகால் குஞ்சரமாக விஷ்ணு, அம்மன் மூவரும் நின்றது.

## 64. சிஷ்யபாவ மூர்த்தி

சீட நற்பாவத்தோடு சிவன் தன்
வாய் பொத்தி நிற்க
மூடி கவுரகனன் தன் முன்னினே
வேலும் சத்தி
கூடவே சூசி ஹஸ்தம் டோலஸ்தம்
இரண்டுங்கொண்
பாட மேற்பதுபோல் நின்ற
பர சிஷ்யபாவ மூர்த்தி

(இ-ள்) வலது அஸ்தம் : வேலு, சூசித அஸ்தம். இடது : சக்தி, டோல அஸ்தம். சுப்பிரமணியர் உட்கார்ந்தது சுவாமிவாய் பொத்தி நின்ற கோலம்.

# 91. சுப்பிரமணியர் அம்சம் 16

ருபதியானங்கள் உரையுடன்

## 1. சத்திதரர்

மூத்தி தரர்ஓர் முகத்தர் ஈர் பங்கயம்
வைத்தார் துணைக்கை வளமமர் கோலத்தர்
கொத்தார் கரும்பூங் கேசம் சுருள்கொளும்
சத்தி தரர் மலர்த் தாளிணைப் போற்றுவாம்

அமர்ந்த கோலமும், ஏகமுகம் சுருள்ரோமம், இரு புயம், இரு தாமரை.

## 2. தண்டாயுதபாணி

தண்டாயுதம் வலத்துத் தரைமிசை வைத்த கையும்
முண்டித சிரமும் கீளும் முழுநீறு மேனியாட
பண்டை கோவணமே தாங்கிப்பகர் இடக்கை கீழ் சோர
நின்றவன் நாமம் போற்றி நிலமிசை நீடு வாழ்வாம்

நின்றகோலம், முண்டித சிரம், வலக்கரம்தண்டு, இடக்கரம் ஊர்த்தம், உடைகோவணம்.

## 3. தேவி சேனாதிபதி

செம்மையாய் அமர்ந்து தெய்வ யானையை
இடத் தணைத்தோன்
வன்மைசேர் வாளும் வேலும் மலருடன்
வலத்தே வைத்தோன்

நன்மைசால் குறங்கின் மீதே
நாட்டுமோர் வலக்கரத்தோன்
தொண்மை கேடயமும் சூலம்
புட்கொடி இடத்தான் போற்றி

(இ-ள்) அமர்ந்தகோலம், ஏகமுகம், கிரீடம்.

வலது அஸ்தம் : வாள், வேல், தாமரைமலர். தொடைமேல் ஒரு கை.

இடது அஸ்தம் : அம்மனை யணைத்தகரம், கேடயம், சூலம், வாளைக்கொடி.

## 4. சுப்ரமண்யர்

வேல் அபயம் ரேர்வலமா(க) வேரிமலர் கோழி கொடி
சால உற மற்றிடமே தோன்ற தனிவேல்
நாலு மறை ஆயும் சுப்ரமண்ய நாதன் அருள்கூட
ஏலும் வகை நாடி இரு

(இ-ள்) வலது அஸ்தம் : வேல், அபயம்.

இடது அஸ்தம் : கோழிக்கொடி, மரை மலர். வலது பக்கம் சாய்ந்து நின்ற தனிவேல்.

## 5. யோக தண்டாயுதபாணி

தொடைமேல் இடக் கரமேயுறத்
துயர் தீர்த்தவன் வலமாம்
அடல்மேவிய கரமேல் வரு
ஐயார் திருத் தண்டே

கடல் சூழ் புவி ஏழேழினும்
கையால் தொழுவார் தம்
உடல் நோய் கெடும் யோகம் எனும்
தண்டாயுதன் அருளால்

(இ-ள்) வலது அஸ்தம் : தண்டு. இடது அஸ்தம் : தொடை மேல் அஸ்தம்.

## 6. கேஜ வாகனர்

புஜம்நால் வலம் வேலும் அபயமும்
கஜ வாகனன் வரதம் இடமுள
கஜமாம் பெயர் புள்ளின் துவஜமும்
நிஜமாய் மனம் பனி பவ மறுமே

(இ-ள்) யானை வாகனம்

வலது அஸ்தம் : வேல், அபயம்.

இடது அஸ்தம் : கோழிக்கொடி, வரதம்.

## 7. சரஹணபவர்

சரவணபவனுர் சுயவுருவம் தொழு
அறுமுகம் அபயம் மலர் மணி தண்டம்
செருவெல் சத்தி வேல்சரம் வலமே
கரவரதம் மணி கோழிக்கொடி, கொடி
சங்கும் வில்லும் இடமே மிளிர
பன்னிரு கரத்துட னகத்துட்தோன்றுவன்

(இ-ள்) வலது அஸ்தம் : அம்பு, சத்திவேல், தண்டு, மணி, தாமரை மலர், அபய அஸ்தம்.

இடது அஸ்தம் : வில், சங்கு, கொடி கோழி கொடி, மணி, வரதம். ஆறுமுகம் நின்றகோலம். பன்னிரெண்டு கை.

## 8. கார்த்திகேயர்

அஞ்சு முகந்தோன்றில் ஆறுமுகத்தோடும்
குஞ்சர பங்கக் குரிசிலவர்—எஞ்சா
அபய வரதம் அயில்வேல்வாள் வஜ்ரம்
நிலவுகே டயமுடனே நின்று

என்றும்

கருணை பாலிப்பர் கார்த்திகேயர்

(இ-ள்) குஞ்சரபங்கமாக நிற்றல் ஆறுமுகம்.

வலது அஸ்தம் : அபயம், வேல், வால்.

இடது அஸ்தம் : வரதம், வஜ்ரம், கேடயம். ஆறு கை.

## 9. குமாரர்

குஞ்சர மாகநிற்கும் குமாரவேள்
பெயரா நின்தாள்
தஞ்சமென் றடைந்தார்க் கென்றும்
தரணியிற் பழுதுண்டாமோ
அஞ்சலென் றழைக்கும் கோழிக் கொடியுடன்
பலகை தாங்கும்
கஞ்சமேய் கரதலத்துக்
காத்தருள் வேல்வாள் கொண்டே

(இ-ள்) குஞ்சர பங்கம், நின்றகோலம்.

வலது அஸ்தம் : வேல், வாள்.

இடது அஸ்தம் : கோழிக்கொடி, கேடயம்.

## 10. சண்முகர்

சத்திவேல் கதை பதாகை தண்டம்பு அபயத்தோடு
வஜ்ஜிரம் மலர் கடகஸ்தம் சூலம் வில் வரதம் தோன்ற
அத்தம் ஈராறும் மாறு முறை வலம் இடம் ஆக்கொண்டு
சித்தமேல் சிகியில் தோன்றிக் சண்முகர் அருளல்வேண்டும்

(இ-ள்) மயில்வாகனருடர். ஆறுமுகங்கள். பன்னிரெண்டுகை.

வலது அஸ்தம் : சத்திவேல், கதை, கொடி, தண்டு, அம்பு, அபயம்.

இடது அஸ்தம் : வஜ்ரம், பத்மம், கடகாஸ்தம், சூலம், வில், வரதம்.

## 11. ஸ்தாரகாந்தகர்

பாரதனிற் பெரும் பாதகமே புரி
பதடியர் பொட புடவும்
பரம ஞானியர் முனிவரர் பக்தர்கள்
பரவி வணங்கிடவும்
ஏர்வல மபயம் சத்திவேல்திகிரி
வாள் சரம் கொடி கோண்டும்
இலங்கு மிடம் வரம் வஜ்ரம் பாஸம்
எழிலுறு கடகாஸ்தம்

பேர்பெறு தனுஸும் முசலமும் தாங்கிப்
பேணார் குல மழியப்
பெறலரு ஆறுமுகமொடுந் தோன்றிப்
பேதையென் முன் வருக

தாரிருள் போல் மருள் ஊட்டிப் புவிமேல்
தண்ணளி யொளி கெடுத்த
தாரகன் நீற்பட போர்புரி செருமுகஸ்
தாரகாந்தகப் பெயரோய்

(இ-ள்) நின்றதிருக்கோலம். ஆறுதிருமுகங்கள். பன்னிருகை.

வலது அஸ்தம் : (கீழிருந்து) அபயம், சத்திவேல், சக்கரம், வில், வாள், கொடி.

இடது அஸ்தம் : வரதம், வஜ்ரம் பாசம், கடகாஸ்தம், உலக்கை, அம்பு.

## 12. தேவ சேனுபதி

தேவ சேனு பதியைத் தரிசிப்பார்க்குத் தோன்றும்
மேவும் வலமிடமே நேர்நிரையாய்—மூவா
அபயம் கடகாஸ்தம் மணிசூலம் வாள் வேல்
வரதம் கதை பாஸம் மலர்தண்டம் வஜ்ரம்
சரதம் அறுமுகம்.

(இ-ள்) நின்ற திருக்கோலம். ஆறு திருமுகங்கள். பன்னிருகை.

வலது அஸ்தம் : (மேலிருந்து) வேல், வால், சூலம், மணி, கடகாஸ்தம் அபயம்,

இடது அஸ்தம் : வஜ்ரம், தண்டு, பத்மம், பாசம், கதை, வரதம்.

## 13. பிரம்ம ஸாஸ்தா

அக்க மாலையும் கண்டியும் மேலிட
அபயம் வரதமும் அன்புடன் கீழிட
ஒக்க ஒரு முகம் ஒன்கொளி வீசிட
நிற்க வர பிர்ம்ம ஸாஸ்தா என் நாதனே

(இ-ள்) முகம் ஒன்று

வலது அஸ்தம் : அக்கமாலை, அபயம்.

இடது அஸ்தம் : கண்டி, வரதம்.

## 14. கலியாண சுந்தரர் (வள்ளி பரிணயர்)

கலிகால மீதுயிர் வாழ்பவர் கலியா வஸராமனும்
இழிவான பேரசடாகி இல் இறை என்பவர் மதி மாறவும்
வலம் வேல் ஒரு கரமே குறமகள் மாவிரல் தனி சூழவும்
கலியாண நல் வர சுந்தர மலர் ஆயுதம் இடமாகவும்
நம்பிராஜன் நிற்க இடம் நற்குறவள்ளி நிற்கவலம்
எம்பிரான் வள்ளி பரிணய நாதர் எழு

வலது அஸ்தம் : வேல், அம்மனைப்பற்றிய கரம்.

இடது அஸ்தம் : வஜ்ரம், பத்மம். (நம்பிராஜன் நமஸ்கரித்து நிற்றல்)

## 15. பாலசுப்ரமண்யர்

பத்மம் தன்னிரு கரத்தேந்தி
பாதம் தகஜெனு வென்றேல

தர்ம ருபா நிர்வாணர்
தாவித் தாவி நடனமிட

தீம் தீம் திமி திமி ஜெனு ஜெணென
தாளம் மேளம் திரை முழங்க
பால சுப்ர மண்ய நீர்
பாலன் முன்வர் தருள் தாரால்

(இ-ள்) ஏகமுகம், இருகரம், தாமரை மலர்கள்.

நிர்வாண கோலம், நடன பாவம்.

## 16. முத்துக் குமரர்

முத்துக் குமரய்யனே
பக்தர்க் கருள் மெய்யனே
சுத்த அன்பு செயும் பக்த்ருக்குன் உரு
நித்தம் தாரும் நாதா இருபுறமும்
தேவி சூழும் போதர நீத
வலத்தில் மேவும் வேல்சத்தி அபயமொடு
மஜ்ரம் ஏந்தும் கையா
வரதம் தாங்கும் துய்யா ஐய.

(இ-ள்) நின்ற கோலம். இருபுறம் தேவமார்.

வலது அஸ்தம் : வேல்சத்தி, அபயம்.

இடது அஸ்தம் : வஜ்ரம், வரதம்.

மயில் மீது வலது காலினால் மிதித்தல்.

## 92. விஷ்ணு அம்சம் 10 விபரமும் ஆயுதமும்

### 1. மச்சாவதாரம் :—

நான் முகனுல் உலக சுக விருத்தியின் அகவிருள் அடைந் தாரும் அருள் பெற்றுய்யும் பொருட்டு வகுத்து விளக்கித் தந்த மறை நான்கையும் சோமுகன் என்னும் அசுரன் (நன்னலம் பெறும் சாதுக்களுக்குத் தீமை தேடும் தீயர் போன்று) கவர்ந்து கொண்டு சென்று கடலுள்புக் கொளித்தான். உய்யும் வழிக்கு விளக்காயிருந்த வேதங்கள் இன்றி தேவரும் யாவரும் துன் புற்று அவைகளைத் தந்த நான்முகனை வேண்ட நான்முகன் அவர்களோடும் சென்று பாற்கடலிற் பள்ளியானைத் துதித்து தம் குறை கூறி வேண்டினர். அச்சுதன் அவர்களுக்கு அபய மளித்து அனுப்பின் அவர் கடலுள் ஒளிந்தானைக் கண்டு வேதங் கொணரும், நிமித்தம் ஓர் பெரிய சேற் கெண்டையின் உருக் கொண்டு வேலையுட்புக்கு அசுரனைத் தடிந்து மறை நான்கையும் மீட்டு வந்து நான்முகன்பால் அளித்து உலகை உய்வித்தனர்.

இக் காரணம் பற்றியே மச்சாவதாரம் எடுக்க வேண்டிய அவசரம் திருமாலுக்கு நேர்ந்தது.

வலது அஸ்தம் : சக்கரம், அபயம்.

இடது அஸ்தம் : சங்கு—வரதம்.

க கைக்குகீழ் மச்ச அம்சம் நின்ற திருக்கோலம்

### 2. கூர்மாவதாரம் :—

பரத்தம், வ்யூகம், விபவம் அர்ச்சை, அந்தர்யாமித்வம் என்ற ஐவகை நிலைகளுள். பரத்வத்தில் எழுந்தருளியுள்ள வாசுதேவனைத் தரிசிக்கும் நிமித்தம் துர்வாஸர் ஓர் கால் வைகுந்தம் செல்ல அங்கு இலக்குமியைப் பூஜித்த மலர் மாலைக ளுடன் எதிர்வந்த தேவ ஸ்தீரீகள் முனிவரைக் கண்டு வணங்கி அவர்பால் அம் மலர் மாலைகளில் ஒன்று தர அவர் அம் மாலை யைக் கண்களில் ஒத்திக்கொண்டு சென்று பரபத நாதனை

வணங்கித் திரும்பிச் செல்லுகையில் அமராவதியில் இந்திரன் ஐராவத மூர்ந்து பவனி வரக் கண்டு, அவனுக்கு அம்மலர் மாலையைத் தர அவன் யானைமீ தமர்ந்த வண்ணமே தன் கையிலிருந்த அங்குசத்தால் அம்மாலையை வாங்கி அவ்வரணத்து மத்தகத்தின்மீது இட அச் செயல் கண்டு அது தன் துதிகையாவதனை யெடுத்துக் கீழிட்டுத் துவைத்த முனிவர் அவன் அலட்சித்திற்கு வெகுண்டு அவன் செல்வம் யாவும் அழியக் கடவதென்று சபித்துச் சென்றார். அச் சாபத்தால் இந்திரனுடைய செல்வம் யாவும் கடல்புக் கொளிந்தன. இருள் மூடிய இந்திரன் வருந்தித் தன் குரு பிரகஸ்பதியிடம் குறை கூறினன். அவர் நீ நான்முகனை அடைந்து உன் குறை கூறினல்லது துயர் தீராது எனலும் இந்திரனும் அங்ஙனமே சென்று நான்முகனை வணங்கி வேண்டலும், அவர் அவனுடன் வர வ்யூக நிலை தாதனுை க்ஷீராப்தி சென்று அரிதுயிலமர்ந்துள அமலனை நோக்கி கேசவ நாமஞ் சொல்லித் துதிக்கவும் அவர் கலுழன் மேல் வந்து தரிசனந் தந்து வந்தவர் குறை யுணர்ந்து "நீக்குவம் போமின்" எனப்பணித்து அவரைப் போக்கினர். கடலுள் ஒளித்த பொருள்களை வெளிப்படுத்த. பாற்கடலைக் கடைவிப்பாராகி.

மந்தரம் மத்தா வாசுகி வடமாக் கடல் கடைய
முந்தி யெழுந்த ஆலகாலத்தை முக்கணற் கீந்தும்
பிந்தி வந்தவை செய்வம் யாவும் அரிக்கீந்தும்
வந்த அமராக் கமுதீந்து தான் பொறி பெற்றும்

ஆய இச் செயல் நிகழுங்கால் மந்தரமலை கடலுள் ஆழத் தொடங்கவும் திருமாலானவர் தாம் ஓர் மாகூர்மமாகி அக்கிரி வேலையில் அமிழா வண்ணம் உட்சென்று தாங்கினர். இக் காரணமே பகவான் (ஆமை) கூர்மாவதாரம் எடுக்க நேர்ந்தது.

வலது அஸ்தம் : சக்கரம், அபயம்.

இடது அஸ்தம் : சங்கு, வரதம்.

கடிகைக்கு கீழ்மட்டம் ஆமை அம்சம்.

## 3. வராகாவதாரம் :—

காசிபருக்கும் திதிக்கும் பிறந்த இரணியன், இரணியாக்க என்பர் இருவரும் தருக்கி மூவுலகும் தம்மடி படுத்தி ஆண்டனர். அக்காலத்திலே இளைஞனை இரணியாக்கதன் நான்முகனை நோக்கித் தவமியற்றி வரம் பெற்று தன்னிகர் ஒருவருமிலை எனத் தருக்கி இப் பூவுலகைப் பாதலத்திற் சேர்த்து 'எதிர்ப்பார் யார்' என இறுமாந்திருந்தான்.

சுவாயம்பு மனு பூவுலகிற்கு நேர்ந்த கதியைப் பிரமனுக்கறிவித்து அதனை மீட்டுத்தந்து உயிர்களை காப்பாற்றுமாறு வேண்டினான். அவன் வேண்டுகோளுக்குக்காக நான்முகன் சிந்தித்துப் பின் ஆழிவண்ணனை அணுகிவேண்டலும் அக்குறை தீர்ப்பான் வேண்டி எனத்தின் உருக்கொண்டு சென்று கிரிகள் பொடிபட கடல்கள் சுழலிடப் பாதலம்புக்கு படியைத் தன் கோட்டிடைக் கொண்டு வந்து நிலைப்பித்த குறை நீக்கிப்பின் தன்னை எதிர்த்து வந்த அந்த இரணியாக்கதனை அவன் வரத்தால் பெற்ற கதை பொடிபட எற்றிதலையைத்தி கிரியாஃ் போக்கித் தொலைத்தார். இங்ஙனம் இரணியாக்கதனைத் தொலைக்கவும் பணிந்த பூதேவியைத் தான் மணக்கவும் ஒழிந்தவன் மனையாளாகிய சில்லிகைக்கு நற்கதியளிக்கவும் எடுத்த அவதாரமே வராகவதார மாகும்.

வலது அஸ்தம் : சக்கரம் அபயம்.

இடது அஸ்தம் : சங்கு, கதை. முகம் பன்றி அம்சம் மனித உடல்.

## 4. நரஸிம்மாவதாரம் :—

இரணியாக்கதன் பட்டவழி கேட்ட இரணியன் மாயனைப் பகைத்துப் பழிவாங்க நினைத்து வேள்வி பல செய்து வரம் பல பெற்று மூவுலகும், தேவரும் யாவரும் தன்னடி வணங்கி, தன்னுமமே தரணி யெங்கும் தாரகமாகச் ஜெபிக்க வேண்டு

மென்று கட்டளை யிட்டும் அங்ஙனம் செய்யாதவரை பல வகை யில் வாட்டி வதைத்தும் தன் மனம்போன போக்கில். அண்டங் களில் திரிந்து உலவியும் கடலில் நடந்தும் குலகிரிகளையும் கரிகளையும் கழங்கு போலாடியும் கோலாகலத்துடன் ஆட்சி புரிவானுயினன். அறிவுர், நல் ஆற்றலும், ஒழுக்கமு மில்லாக் கீழ்களை மேலிருத்தி அவர்களைத் துதித்து வயிறு வாழ் நம் நாட்டுப் போலிகள் போலல்லாத வேத வேதியர் முனிபுங்கவர். தேவர் முதலானோர் அவன் செயலுக் கஞ்சியும் நாளுந் துன்புற் றும் இக் குறை தீருநாள் என்றோ என்று ஏங்கியிருந்தனர்.

லீலாவதி என்னும் இவள் மனைவியின் கர்ப்பத்து இவனுக்கு நேர்மாறான குண விசேஷங்களோடு கூடிய — நாரதர். உபதே சத்தைக் கர்ப்ப வாசத்திலேயே பெற்ற பிரகலாதன் என்ற பெய ருடன் உத்தம உருவினனாக மகன் ஒருவன் தோன்றி வளர்ந்து கல்வி கற்குந் நாளில் 'இரணியாய நம:' என்று கூறுமாறு பணித்த அஸுரகுரு சுக்ராசாரிக்கு மாறாக நாராயணாய நம: என்று கூற, அது கேட்ட இரணியன் தன்னுமங் கூறாது தன் பகைவன் நாமம் கூறலாகாதென பலவாறு பாலனை மருட்டியும் கேளாதவனாய் இருப்ப, அதனால் மிகச் சினந்து நஞ்சிடுவித்தும், மலைமீதிருந்துருட்டியும் யானைக் காலில் மிதிப்பித்தும் ஆக இத் தகைய கொடூர வகையில் தண்டனை புரிவித்தான். எதனாலும் துன்புறாது பாலன் "நாராயணன் நாமமே ஓதுதல் கண்டு". அவனை அதட்டி நீ கூறும் அவன் எங்குளான் எனலும் பாலன் விடையாக. இங்கும் இருப்பான் அவன் எங்கும் இருப்பான். அந்தரம் பாதாள லோகம் மற்ற புவனம் யாவற்றினும் இருப் பான் என்றும்.

சாணினும் உளர் ஓர் கூறு அணுவினைச் சத கூறிட்ட
கோணினும் உளன் குன்றினுமுள இந் நின்ற
தூணிலும் உளன் நீ சொன்ன சொல்லினும் உளன்
காணுதி——

என்று கூறினன். கூறலும் தூணைக் காட்டி இரணியன் தன் முன்னின்ற இத் தூணில் இருப்பானா, என்று வெருவி அதட்டிய

வாறே அதனை ஓங்கி உதைத்தான். அவ்வளவில் அத் தூண் இரண்டாகப் பிளவு பட அதனின்று அண்டமதிருமாறு பேரோசையை யுண்டாகிக்கொண்டு மலரவன் தந்த வரத்தின் மாயா இரணியனைக் கொல்லும் வடிவில் நரஸிங்கமாகிப் புறப்பட்டு அவன் உரங்கீண்டு தேவர் குறை போக்கிப் பாலனுக் கருள் செய்தனர். இவ்வவசரமே நரஸிங்காவதாரத்திற்குக் காரணம்.

வலது அஸ்தம் : சக்கரம், அபயம்.

இடது அஸ்தம் : சங்கு, வரதம்.

முகம் சிம்ம அம்சம், மனித உடல்.

## 5. வாமனவதாரம் :

ஒரு கால் அசுரர்க்கும் தேவர்க்கும் போர் மூண்டது. அப் போரில் பிரகலாதன் பேரனாகிய மஹாபலி தேவர்களை மிக வருத்தினன். அதனால் வெகுண்ட மால் ஆயுதம் வித்து அவனைத் தரையில் வீழ்த்தவும், சுக்ரன் அவன் சாகாதபடி சஞ்சீவி மந்திரம் ஓத அதனால் மகாபலி உயிர்த்து தேவரைப் பழிவாங்க வேண்டி விசுவஜித் என்னும் வேள்வி புரிந்து தேவர்கள் அஞ்ச ஆட்சி செய்து வந்தான். அக்கால் அதிதி வேண்டிய வரத்தால் திருமால் அவள் வயிற்றிலிருந்து வாமனனாக அவதரித்து, உபநயன காலம் வரவும் உரியனயாவும் முடிந்த பின் பிருகு முனிவர் ஆஸ்ரமத்தில் வேள்வி புரிந்திருந்த மஹாபலிபால் செல்ல, அவன் அவரை உபசரித்து அமர்த்தி வேண்டியது வினவலும், அவர் இருந்து தவமியற்ற மூவடி மண் வேண்டினர். அவ்வாறே 'தருவில்' எனத் தாரை வார்க்கத் தொடங்க, அங்கு சுக்ராசாரி வந்தவரின் வரலாறு கூறி, தாரைவார்க் காது தடுத்து அதனால் சுக்ரன் ஓர் கண் பொட்டையானார். பின் தாரை பெற்ற வாமனர் திருவிக்ரம் அவதாரத்துடன் ஈரடியால் பூமியையும், அண்டத்தையும் அளந்த பின் மூன்ரும் அடிக்கு இடமெங்கெனக் கேட்டு

மாவலி சிரமேல் பாத மூன்றி அவனைப் பாதளத்திருத்தித் தேவர் குறை போக்கினர்.

வலது அஸ்தம் : குடை.

இடது அஸ்தம் : கமண்டலம். நின்னகோலம்.

6. பரசுராமாவதாரம் :—

பூமியில் புண்ணியம் குறைந்து பாவம் மேலிட்ட காலத்துப் பூபாரம் தீர்க்க அவதரித்த பரசுராம அவதாரம்.

பிறப்பு வரலாறு :

சந்திரகுல காதிராஜன் புதல்வி சத்தியதி, இருசிகமாமுனி வரின் பத்னி, இவள் புத்ரன் ஜமதக்னி. ரேணுகையிடத்து இவ ருக்குத் தோன்றிய புதல்வர்களுள் மகாவிஷ்ணு மூன்றுமவராக அவதரித்தார். தந்தை சொற் கடவாத தனயனும் தமையர் இருவரையும் தாயையும் கொன்றும் பின் வரம் வேண்டி அவர் களை உயிர்ப்பித்தவரும் இவரே.

கார்த்தவீரியன் என்னும் வேந்தன் ஜமதக்னிபால் உபசார மும் பெற்று அங்கு உபசரித்த காமதேனுவை வேண்டி அதனுல் விளைந்த போரில் சிரங்களும் கரங்களும் பரசுராமனுர் அறுப்பட் டான். அப் பாவத்திற்காகத் தந்தையின் சொற்படியாத்திரை சென்ற காலத்தில் கார்த்தவீரியன் புத்திரர்கள் ஜமதக்னியைக் கொன்று பழி தீர்க்கவும். அது கண்டழுத அன்னை ரேணுகைக் காக அவர்களை வீட்டியும் அரசகுலம் ஏழேந் தலைமுறைகளைக் கொன்றும் அவ்வுதிரத்தால் தர்ப்பணஞ் செய்து தந்தையின் பிரேதச் சடங்கு செய்தார்.

சிரார்த்த பொருளை ஏற்காத காசிபரைத்தன் எல்லை விட்டு ஓட்டியும் பின் சிரார்த்தப் பொருளோடு அவர் யாசித்தபடி தன் னுரிமையான உலகைக் கொடுத்துத் தனக்கு நிற்க இடமின்றி

வருணன்பால் இடம் கேட்டுப் பெற்று சமீய பருவதத்திலமர்ந்திருந்து பின் ஸ்ரீராம அவதாரத்தில் அவர் பால் தன் சக்தியையளித்தார்.

வலது அஸ்தம் : கோடாலி.

இடது அஸ்தம் : கடிகை அஸ்தம் ஜடைமுடி நின்ற கோலம்.

## 7. ஸ்ரீராமாவதாரம் :—

இவ் வவதாரம் தேவர் குறை போக்கவும், தசரதன் தாபமும் சாபமும் தீர்க்கவும் தன் பால் வைகுந்தத்து வரம் வேண்டிய துவாரபாலகர். அபீஷ்டம் நிறை வேறவும் உலகில் மாதாபிதா தருமம் சகோதர வாஞ்சை, பத்னி தர்மம், சிநேக பாவம், சமரச பாவம், ஜீலகாருண்யம், துஷ்ட நிக்ரஹம், சிஷ்ட பரிபாலனம் முதலியன நடத்திக் காட்டவும். வந்ததாகும் வரலாறு. ஐயோத்தியில் தசரதன் கௌசல்யா புத்ரனாய் யாகபூர்வமாகத் தோன்றி தாடகையை வதைத்து கௌசிகர் வேள்வி முடித்து அகலிகை சாபம் நீக்கி சீதையை மணந்து பரசுராமரின் சக்தியை ஆக்ரஷித்து, நாடாளாது வனமேகி குகனிடம் நட்புக் கொண்டு ரிஷி முனிவரர் பால் உபசாரமும் உபதேசமும் ஆயுதங்களும் பெற்று சபரிக்கு மோட்சமளித்து சுக்ரீவன் நட்புக் கொண்டு வாலிக்கு மோட்சந் தந்து ஆஞ்சநேயர் தாஸத்வம் ஏற்று சூர்பனகாபங்கம் செய்து கரதுரடணரை வதைத்து இடை கபந்த மோட்சமளித்து சடாயுவுக்குக் கிரபைசெய்து சேதுவணைத்து விபீடண சரணாகதி பெற்று அவருக்கு பட்ட மளித்து இராவண சம்ஹாரம் செய்து நகர் திரும்பி பட்டங்கொண்டு மக்களைப் பெற்று பின் சகோதரர் சங்கும் சக்கரமாக வரக்கையிலேற்று வைகுந்தம் ஏகியவர்.

வலது அஸ்தம் : அம்பு.

இடது அஸ்தம் : வில்லு. நின்றகோலம்.

லட்சுமணர் சீதைப் பக்கத்தில் நின்ற திருகோலம்.

## 8. பலராமாவதாரம் :—

சந்திரகுல பேரசன் மகன் உக்ரசேனன், தேவகன். உக்ர சேனன் மகன் கஞ்சன் இவனால் நேசிக்கப் பட்டவர்கள் தந்த வக்ரன், சாலுவன், சிசுபாலன், சராசந்தன் என்பராவர். கஞ்சன் மூர்க்கம், கோபம், கொலை, களவு, கள், காமத்துடன்வளர்ந்தவன். இவனுக்குப் பின் உக்ரசேனர். எண்மர் மக்களுக்குத் தந்தை யாகியும் பெண்மகப் பேரின்மையால் தன் சோதரன் தேவகன் மகளை ஏற்றுத் தேவகி எனப் பெயர் சூட்டி வளர்த்தார். தக்க பருவத்தில் சூரசேன மகாராஜன் புதவர் வசுதேவருக்கு மணஞ் செய்து தந்தார். மணக் கோலத்துடன் ரதத்தில் வலம் வரத இவர்களுக்கு ரத மோட்டிய கஞ்சனுக்கு அசரீரி இவள் வயிற் றெட்டாம் பிள்ளை உண் உயிரை வாங்கும்'' என உரைப்பவும், அங்கேயே தேவகியை கஞ்சன் வாள்கொண்டு துணிக்கத்துணிய அக்கால் வசுதேவரால் சபதம் செய்து தரப்பட்ட வகையில் தெளிந்த அவன் அவர்களைச் சிறையிலிட்டான். குறிப்பிட்டபடி கஞ்சன் தேவகியிடம் பிறந்த ஆந் சிசுக்களையும் வசுதேவர் கொணர்ந்து தர அவைகளை வாளால் கனுப்பினான்.

உரோகினிதேவி வசுதேவரின் இரண்டாம் மனைவியாக வாய்த்தவர். (இங்கு இவ் வரலாற்றை வேறுவிதமாகவும் கூறு வர் அது வருமாறு) கஞ்சன் கோபத்தினின்று தப்பிய வசுதேவ ரும் தேவகியும் அரண்மனைபுக்கு இல்வாழ்க்கையில் அறுவர் புதல்வரைப் பெற்றும் ரோகினியை மணந்து வாழ்ந்தும் வந்தனர். அக் காலத்தில் கம்சனிடம் வர அவனால் உபசரிக்கப் பட அத்ததியில் நாரதர் கம்சனுக்கு எடுத்துக் கூறியதாவது. ''கம்சா! உனக்கோர் இரகசியங் கூறுகிகிறன் கேள். ஓர்கால் உக்ரசேனன் வேட்டைமேற் சென்றிருந்தபோது தருமன் என் னும் கந்தர்வனொருவன் உன் தாயின் உட்கிடையறிந்து உக்ர சேனன் போல் உருக்கொண்டு வந்து கலவி செய்ய அதனால் முன் மயங்கிப் பின் ஐயுற்று அவனுக்குச் சாபமிட்டனுப்பினள் உன் தாய். அக் கருந்தவன் மகனும் முன்னொருகால் தேவர்க ளுடன் பொருது மடிந்த காலநேமி என்னும் அசுரனுமாவாய் நீ என் உணர்த்திப் பின்னும் ''நின் தங்கை வயிற்றுதிப்பா னொருவன் உன்னைக் கொல்லும்'' என்றும் கூறிப் போயினர்.

அது கேட்ட கம்ஸன் தனக்குத் தாய் முதல யாவரும் பகையாயிருத்தலை நினைத்து வெகுண்டு சென்று தேவகி மக்கள் அறுவரை வாட்டியும் தேவகி, வசுதேவர் உக்ரசேனன் இவர்களைச் சிறையிலிட்டும் உக்ரசேனன் உருக்கொண்டு வந்த அக் கந்தருவனைப் போரில் கொன்றும் ஆட்சியேற்றுக் கொடுமைகள் மேலிடப் பாவம் செழிக்க ஆண்டு வந்தனன் என்பதாம். தருமம் குன்றி அதருமம் மேலிட்டதனால் பூதேவி ஆற்றுளாகித் துயருற்று ஆவடிவுற்று அமரர்பால் சென்றும் மறைவிரித்தானைக் குறை வேண்டியும் பின் யாவரும் வர பாற்கடல் நாதனைச் சென்று பணிந்து குறை கூறி அருள் பெற்றும் வரவும்

எம்பெருமான் கட்டளைப்படி ஆதிசேடன் தேவகி வயிற்றில் ஏழு மாதங்கள் தங்கிப் பின் ரோகினி வயிற்றில் சென்று தங்கிப் பிறந்து பலராமன் ஸங்க்ருஷ்ணன், ஹலாயுதன் என்ற நாமங்களுடன் வளர்ந்து சாந்தீப முனிவரிடம் கல்வி கற்றும் ரேவதி என்னும் மிக நீண்டு வளர்ந்த மங்கையை அந் நீளத்தைப் போக்கிக் குறுக்கி மணந்தும் சுகமாக வாழ்ந்திருந்தார். ஆக இந்த அவதாரம் கிருஷ்ணவதாரத்துடனிருந்து பலராமவதாரமாகி துஷ்ட நிக்ரஹசிஷ்ட பரிபாலனம் செய்ய வந்ததாகும்,

வலது அஸ்தம் : கலப்பை.

இடது அஸ்தம் : கடிகை அஸ்தம்.

## 9. கிருஷ்ணவதாரம் :—

ஆயர் மகளிராகவும் பாற்கடலைப் பசுக்களாகவும் பகவான் தேவர்களை ஆயர்களாகவும் பிறக்குமாறு ஆக்ஞையிம்வும் நான்முகன் அஷ்டவசுக்களுக்கு ஒருவனான துரோணனையும் அவன் மனைவி தரையையும் ஆயர்பாடியில் நந்தகோபனிம் யசோதையையுமாய் அவதரித்து எம்பெருமான் அவதாரத்தைத் தரிசித்து உபசரித்து வருமாறு ஏவவும், அவ்வண்ணமே சென்று ஆயர்பாடியில் பசுக்கள் கோபாலர், கோபியர்கள் என்று வாழ. நந்தகோபரும் முன்னரே தோன்றி சிற்றரசுபோல் வீற்றிருந்து கஞ்சனுக்குக் கபயம் காஞ்டி வருவாராயினர்.

பகவான் தேவகியின் வயிற்றில் மாயையும் பெண்மகவாகப் பிறந்தனள். மாயன் தன்னைப் பெற்றதனால் பேறுபெற்ற பெற்றோருக்குக் காட்சியளித்து அவர் கண்டு களித்தபின் தன்னைக் கொண்டு யஸோதை பக்கல் விடுத்து ஆங்குள்ள பெண்மகவைத் தேவகி பக்கல் கொண்டுவந்து சேர்க்குமாறு கூறி அவர் தனை யறிவித்தும் கபாடங்கள் திறப்பித்தும் நதி வழி விடவும் செய்து ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில் ஒருத்தி மகனாய் ஒளிந்து வளரச் சென்றார். மாயையாகிய பெண் குழவியும் தேவகி பக்கல் கொணரப்பட யாவும் முன்போலாயின.

குழவி யுதித்ததழுததாகக் காவலரால் கேள்விப்பட்ட கம்ஸன் சிறைக்குள் புக்குக் குழவியின் கால்களைப் பிடித்து கல்லின்மேல் மோத மோதத் தொடங்கவும்மாயையாகிய குழவி அவன் கையினின்றும் கணத்தில் பதினாறு கரங்களுடன் நின்று உன்னைக்கொல்ல. ஓர் குழவி உலகிலுதித்து ஓரிடத்துவளர நீ என்னை கோறல் எங்ஙனம் இயலும் என உரைத்து மறைந்தது.

அவ்வுரை கேட்ட கம்ஸன் நடுங்கினன் வெகுண்டனன். யாதுசெயல் என கலங்கினன் அவனுக் உரிய அசுர அமைச்சர்கள். அவனைத் தேற்றி தாங்கள் உபாயந் தேடி அவன் குறை போக்குவதாகக் கூறினர்.

இவ்வளவில் தந்த கோபனில்லின் கண் குழந்தை பிறந்த விழா கோலாஹலமாக நடந்தேறியது.

கஞ்சனுக் குறைத்த மொழிப்படி முறையே கொல்வானைத் தேடிச் செல்லவேண்டிச் சென்று பூதனை, சகடன், துருணாவர்த்தன் குக்குடன், பக்காசுரன் அகாசுரன் கேசி, கபர்த்தன் முதலானவர்கள். பாலநிலையில் கிருஷ்ணனால் மடிந்தனர். இதனிடை, ததிபாண்டவன் நளகூபரன், மணிக்கிரீவன், காளியன், முதலானோர் நற்கதி பெற்றனர். கண்ணன் ஆயர்ப் பாடியில் வெண்ணெயுண்டும். கோபாலருடன் விளையாடியும் குன்றைக் குடைபிடித்தும் கோபிகளால் விரும்பப்பெற்றுக் குரவை பிணைந்தாடியும் சாந்திபரீடம் கல்வி கற்றும். கோபாலருக்கு வைகுந்தம் காட்டியும், தீமைவய விழுக்கியும். ஆகப் பலலீலைகள் இசைந்து – ——

யமுனையில் ஸ்னானஞ் செய்யச் சென்ற நந்தகோபரை வருண தூதர் அவரை வருணலோகத்திற் கொண்டுசேர்க்கவும்

அவரை அழைத்துவிடுத்தும், சுதரிசனன் என்ற அரவ உருவத்தில் வந்து நந்தகோபரை விழுங்கிய வித்தியாதரனே உதைத்துத் தந்தையை மீட்டும். கோபியைக் கவர்ந்து சென்ற சங்க சூடணனைக் கொன்றும். அரிட்டாசுரன் கேசிவியோமணன் முதலாணவரைக் கொன்றும் அக்ரூரருடன், பலகாம சகிதம் மதுரையடைந்து வண்ணனை தாருகனை வதைத்தும், தனக்கு மாலைதந்த சுதர்மனைக் கடாக்ஷித்தும், சந்தனம் தந்த கூனியைக் கூன்நிமிர்த்தி யௌவனப் பருவ மடைவித்தும். குவலயா பீடத்தை மருப்பொசித்தும் சாணூர முஷ்டிகரை வதைத்தும் முடிவில் கம்ஸனை மாய்த்து உக்ரசேனனைச் சிறை மீட்டும் உபநயனம் கல்வி தன் குருவுக்குக் காணிக்கை (இறந்த பாலனை யழைத்து) ஈந்தும் உத்தரரை அனுப்பி ஆயர்பாடி மாதர் மனத்துயர் போக்கியும் பார எண் பண மணமுடித்தும் தம் முடித்துப் பரமபத மேசினர். ஆக இது ஜெய விஜயாள் கேட்டுக்கொண்டபடி (மூன்று பிறவிகளில்) ராவணகும்பகர்ணரான போது. ராமலக்ஷ்மணராகவும், இரணியன் இரணயாக்கதனுனபோது, நாஸிமம். வராகமாகவும் கம்ஸன் (தந்த வகிசன்) ஸிஸுபாலனுனபோது. பலராம கிருஷ்ணனுகவும். அவதார மெடுத்த அவசரமாகும்.

புல்லாங் குழல் டோலாஸ்தம் நின்னகோலம்

## 10. கலிகாவதாரம்:—

வலது அஸ்தம் : வாள் சக்கரம்.

இடது அஸ்தம் : கேடயம், சங்கு.

முகம் குதிரை அம்சம்.

மனித உடலும் குதிரை முகமும் சங்கு சக்கரமும் வாளும் கேடயமும் கைகளிற் கொண்டு அவதாரங்கொண்டு துஷ்ட நிக்ரஹ சிஷ்டபரிபாலனம் செய்ய எம்பெருமான் எதிர்நோக்கியிருக்கின்றுர். தற்காலம் பஞ்சபூதங்களாலும் துஷ்ட நிக்ரஹம் செய்து எச்சரித்து வருகிறுர் ஆனல் அஞ்ஞானம் மூடிய பாபிகள் அதனை யுணராராய் மேலும் ஆக்ரமமே ஆஸ்தியாகக்கொண்டு வாழ்கின்றனர். (எச்சரிக்கை.)

# 93 நாயன்மார்கள் 63 அம்சமும், ஆயுதமும்

## 1. சுந்தரமூர்த்தி நாயனர்:—

கயிலையில் சிவபெருமானுக்கு தொண்டு பூண்டு ஆலால சுந்தரர் என்ற நாமத்துடன் இருந்தவர். உமாதேவியின் சேடியர் அநிந்திதை, கமலினி என்பார் பால் காதல்கொண்ட காரணத்தால் மனிதப்பிறவி எடுத்தவர். இவர் திருமுனைப்பாடி நாட்டில் திருநாவலூரில் சடையனுருக்கும்இசை ஞானியார்க்கும் குமாரனுகத் தோன்றி நம்பியாரூரர் என்னும் பெயர் பெற்று மணத்தின்போது தடுத்நாட்கொள்ளப்பெற்று அன்று முதல் தவம்பலபுக்குப் பதிகம் ஓதி ஆரூரில் தம்பிரான் தோழர் எனப் பெயர் பெற்றவர் வன்ரொண்டர் என்ற நாமம் இவர்க்குக் கடவுளால் இடப்பட்டது திருவதிகை இறைவனுல் திருவடி தீக்ஷை பெற்றவர். நெற்பேறவும் பொன்னை ஆற்றிலிட்டுக் குளத்திலெடுத்தும் முதலையுண்ட பாலனையழைக்கவும் ஆக இவ்வாறு பல அற்புத நிகழ்ச்சிகள் நிகழப் பெருமானைப் பாடியவர். பின்முறையே பாவையார், சங்கிலியார் என்ற மங்கையரை மணந்து பெருமானையே தோழமை யாகக்கொண்டு வாழ்ந்து முடிவில் இறைவன் அனுப்பிய வெள்ளையானை மீதேறி கையிலை புக்கு உலகில் புகழை நாட்டினர் குருவழிபாடு கொண்டவர்.

வலது அஸ்தம் : கமலம் இடது யோகதண்டு கிரிகிடம்.

ஜடைமுடி அஞ்சலி அஸ்தம்.

## 2. தில்லைவாழ் அந்தணர் :—

இவர் கயிலைவாழ் சிவகணத்தராவர். தில்லை மூவாயிரவர் என உலகோர் போற்ற போறை, தானம், மானம், தவம் ஞானம் முதலிய யாவும் பெற்றவர். சுந்தரால் புகழ்ந்து பாடப்பெற்றவர் தில்லைக்குத் தீக்ஷதர்கள் என்ற பழமொழி இவர்களால் வழங்கப் பெறுகிறது.

ஓமக்கரண்டி. கமண்டலம், கிரிகிடம்.

3. திருநீலகண்ட நாயனார்:—

இவர் சிதம்பர தலத்தில் குலாலர் குலத்தில் அவதரித்தவர். சிவன் அடியார்களுக்குத் திருவோடு தந்து சரியை வழி நின்று அறம் புரிந்தவர் சிற்றின்பம் விட்டு முதுமையடைந்தபின் முதுமை நீங்கி இளமை எய்தல் எம்பிரானால் கைகூடும் என்பதனை சங்கமவழிபாட்டின் தின்றே உலகிற்குக் காட்டிப் புகழ் பெற்றவர்.

அஞ்சலி அஸ்தம் : ஜடைமுடி.

4. இயற்பகை நாயனார்:—

இவ்சோழநாட்டில் காவிரிப்பூம்பட்டினத்தில் வணிகர் குலத்தில் பிறந்தவர் சரியை மார்க்கத்தவர். அடியார் வழிபாடு செய்தவர். உலக இயல்புக்கு (தமிழ் நாட்டு ஒழுக்கத்திற்கு) மாறாக விளங்கிப் பெருமான் அருளை உலகில் விளக்கிச் சிவனடியாராகிப் புகழ் பெற்றவர்.

அஞ்சலி அஸ்தம் கிரிகிடம்

5. இளையான்குடிமாற நாயனார்:—

இவர் பாண்டிய நாட்டில் இளையான்குடி என்ற ஊரில் வேளாளர் குலத்தில் மாறநாயனார் என்பாருக்குக் குமாரராகத் தோன்றியவர் சரியைமார்க்கத்தில் ஒழுகி அடியார்களை உபசரித்தவர் ஏழையாகியும் விருந்தோம்பலின் சிறப்பை உலகில் விளக்கிச் சிவனடியாராகிப் புகழ்பெற்றவர்.

அஞ்சலி அஸ்தம் வலது பக்கம் சாய்ந்த ஜடை முடி.

6. மெய்ப்பொருள் நாயனார்:—

இவர் சேதி நாட்டு அரசர். திருக்கோவலூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு சரியை நெறியைக் கடைப்பிடித்துச் சிவனடியாராகிச் சிவனடியார்க்கு வேண்டிய வேண்டியாங்கு உதவினவர். அடியார் சிவச்சின்னங்களையே மெய்ப்பொருளாகக் கருதி ஒழுகி திருநீற்றின் பெருமையை உலகில் விளக்கிப் புகழ் பெற்றவர்.

அஞ்சலி அஸ்தம்: உத்திராக்ஷ முடி.

## 7. விறன்மிண்ட நாயனார்:—

இவர் மலைநாட்டில் திருச்செங்குன்றூரில் வேளாளர் மரபில் தோன்றிச் சிவனடியாரானவர் அடியார் பக்தியில் சிறந்து சரியை மார்க்கத்தை மேற்கொண்டவர் அடியாரை வணங்காமைபற்றிச் சுந்தரரை பகைத்துப்பின் அச் சுந்தரரையே திருத்தொண்டத்தொகை பாடச் செய்து புகழ்பெற்றுச் சிவகணத் தலைவரானவர்.

அஞ்சலி அஸ்தம்: இடது பக்கம் அக்கலத்தில். அங்குசம்: கிரிகிடம்.

## 8. அமர் நீதி நாயனார்:—

இவர் சோழநாட்டில் பழையாறை என்னும் ஊரில் வணிகர் மரபில் பிறந்து சிவனடியாரானவர் வணிகத்தொழில் மேற்கொண்டு சரியை மார்க்கத்தில் நின்று அடியார்க்கு போர்வை, கோவணம், அரைஞான் என்பன தந்து வழிபட்டு, முடிவில் பெருமான் அருள் பெற்றுச் சிவலோகம் சென்றவர்.

அஞ்சலி அஸ்தம்: இடதுபக்கம் அக்கலத்தில் யேடு குல்லாய் முடி.

## 9. எறிபத்த நாயனார்:—

இவர் சோழ நாட்டில் கருவூரில் ஆனிலை என்னும் கோயிலில் இலிங்கவழிபாடு செய்து சரியை மார்க்கத்தில் ஒழுகிச் சிவனடியாரானவர் சிவனடியாரின் பகைவரைக் கொன்று சைவத்தை வளர்க்க மழுப்படை ஏந்தியவர். சிவத் தொண்டின் பெருமையை உலகறியச் செய்து புகழ்பெற்றவர்.

அஞ்சலி அஸ்தம்: இடது அக்கலத்தில் கண்டகோடாலி ஜடைமுடி.

## 10. ஏனாதி நாயனார்:—

இவர் சோழநாட்டில் எயினனூரில் சான்றார் குலத்தில் தோன்றியவர். சரியை வழி நின்று வாட்பயிற்சி வழி பொருள்

தேடி அடியாரை ஆதரித்துச் சிவனடியாரானவர் வெண்ணீ றணிந்தாரே சிறந்தவர் என்பதனை உலகில் நிலைநாட்டிப்புக ழெய்தியவர்.

அஞ்சலி அஸ்தம்: இடது அக்கலத்தில் கத்தி.

ஜடைமுடி வலது பக்கம் சாய்ந்தது.

## 11. கண்ணப்ப நாயனார்:—

இவர் தொண்டை (பொத்தப்பி) நாட்டில் உடுப்பூரில் நாகன் தத்தை என்ற சதிபதிகளுக்குத் திண்ணன் என்ற பெயர் கொண்டு பிறந்து சிவனடியாரான அன்பே சிவம் என்பதனை உலகில் விளக்கி ஆறுநாட்களில் அன்பின் பெருக்கால் இலிங்கவழிபாடு செய்து பெருமானுக்குத் தன் கண்களையும் தந்து பிறவாப் பெரும் பேறெய்தியவர்.

அஞ்சலி அஸ்தம்: அக்கலத்தில் அம்பு வில்லு,

ஜடைமுடி வலதுபக்கம் சாய்ந்தது.

## 12. குங்குலியக்கலய நாயனார்:—

இவர் சோழ நாட்டில் திருக்கடவூர் என்ற தலத்தில் மறையோர் மரபில் தோன்றினவர்' இலிங்க வழிபாடு செய்யும் முறையில் குங்கிலியத்தூபத் தொண்டு பூண்டு சிவனடியாரா னவர் ஒன்றுனும் நிமிராத லிங்கத்தைத் தம் கழுத்தில் கயிறிட்டு இழுத்து நிமிர்த்தி இலிங்கவழி பாட்டின் சிறப்பை உலகுக் குணர்த்திப் புகழ்பெற்றவர்.

அஞ்சலி அஸ்தம்: வலது அக்கலத்தில் கதை குல்லாய் முடி.

## 13. மானக்கஞ்சார நாயனார்:—

இவர் சோழநாட்டில் கஞ்சனூரில் வேளாளர் மரபில் சேனாதிபதி தொழிற் குடியிலே தோன்றியவர் அடியார் வழிபாட்டில் ஒழுகிச் சரியை மார்க்கத்தை மேற்கொண்டு

சிவனடியாரானவர் சிவனடியாரின் விருப்பத்திற் கிணங்கித்தன் மகளின் (மணமாகுமுன்) நீண்ட கூந்தலை யளித்து அடியார் பக்தி. யின் சிறப்பை உலகில் நிலைநாட்டிப் புகழ் பெற்றவர்.

அஞ்சலி அஸ்தம்: ஜடை முடி வலது பக்கம் சாய்ந்தது.

## 14. அரிவாட்டாய நாயனார்:—

இவர் சோழநாட்டில் கணமங்கலம் என்னும் ஊரில் வேளாளர் குலத்தில் தாயனார் என்ற பெயருடன் இல்லறம் நடத்தியும் சிவபிரானுக்கு செந்நெல்லரிசி. செங்கீரை, மாம் பிஞ்சும் படைத்துச் சிவனடியாரானவர் பெருமான் சோதனை யால் வறுமை வர பூசைப்பொருள்கள் தரையில் விழ. இவர் அரிவாளால் தம் கழுத்தை அறுக்கத் துணிந்தவர். அதனால் இப்பெயர் பெற்றார்.

அஞ்சலி அஸ்தம்: அக்கலத்தில் அரிவாள்.

ஜடை முடி வலது பக்கம் சாய்ந்தது.

## 15. ஆனாய நாயனார்:—

இவர் மழநாட்டில் மங்கல ஊரில் ஆயர்குலத்தில் தோன்றியவர் இலிங்க வழிபாட்டில் மிக்குக் குழலூதி பஞ்சாக் கரம் இசைத்து ஆனிரை மேய்த்துச் சிவனடியாரானவர் சிவபிரான் கட்டளைப்படி பெருமான் பக்கல் குழல் இசைத்துக் கொண்டே கைலாயம் அடைந்தவர்.

ஜடை முடி புல்லாங்குழல் வாசிப்பதுபோல இடது கால் மடித்தது பாதம் நின்ற இடத்தில் குடுவை.

## 16. மூர்த்தி நாயனார்:—

இவர் பாண்டிய நாட்டில் மதுரையம்பதியில் வணிகர் குலத்தில் தோன்றிய வர். சரிவையில் நின்று சந்தனம் அரைத்து சிவபிரானுக்களித்துச் சிவனடியாரானவர் சமணத் தால் சந்தனக்கட்டை வாங்கமுடியாமல் தன் கையையே உறைத்துக் கடவுள் காட்சி பெற்றுப்பின் அரசனாகி வாழ்ந்தவர்.

அஞ்சலி அஸ்தம்: திரிதிடம்.

## 17. முருக நாயனார்:—

இவர் சோழநாட்டில் திருப்புகலூர் என்னும் ஊரில் அந்தணர் குலத்தில் அவதரித்தவர். சிவபிரானுக்கு மலர்மாலை தொடுத்து வழிபடும் சரியை மார்க்கத்தை மேற்கொண்டு சிவனடியாரானவர் சம்பந்தர் மணத்தின்போது சிவபிரான் திருவடியை அடைந்தவர்.

அஞ்சலி அஸ்தம்: வலது அக்கலத்தில் தொரடு பூபொட்டி குல்லாய் முடி.

## 18. உருத்திர பசுபதி நாயனார்:—

இவர் சோழநாட்டில் திருத்தலையூரில் அந்தணர் குலத்தில் பிறந்தவர் சிவனடியாரானவர் இலிங்கவழிபாடுடையவர். யோகமார்க்கத்தில் நின்று உருத்திர மந்திரங்களை ஜெபித்து முக்தியடைந்தவர். மந்திர ரூபத்தில் உள்ள கடவுள் நிலையை இவர் உலகில் விளக்கினவர்.

அஞ்சலி அஸ்தம்: குல்லாய் முடி.

## 19. திருநாளைப்போவார் நாயனார்:—

இவர் சோழநாட்டு ஆதனூரில் புலையர் குலத்தில் உதித்துச் சிவனடியாரானவர் இலிங்கவழிபாடுடையவராய் சரியை மார்க்கத்திலொழுகி சிவாலய வாத்தியங்களுக்கு வேண்டிய தோல் முதலிய உதவினவர் தில்லையையே நினைத்திருந்து சென்று சிவபிரான் வாக்குப்படித் தீ மூழ்கி வேதியராகி இன்ப நிலை அடைந்தவர்.

அஞ்சலி அஸ்தம் : தரையில் கமண்டலம்.

மொட்ட தலையில் உத்திராக்ஷம்.

## 20. திருக்குறிப்புத் தொண்ட நாயனார்:—

இவர் தொண்டை நாட்டில் காஞ்சீபுரத்தில் ஏகாலியர் (வண்ணார்) குலத்தில் பிறந்தவர் சரிவை வழி நின்று அடியார் தொண்டு பூண்டு ஆடைகளை அழுக்கு நீக்கித் தந்து சிவனடி

யாரானவர் அடியார் பக்தியை ஆண்டவன் பக்தியினும் சிறந்தது என்பதனை உலகில் பரப்பி இறைவன் அருள் பெற்றவர்.

அஞ்சலி அஸ்தம்: மொட்டதலை.

## 21. சண்டேஸ்வர நாயனார்:—

இவர் சோழநாட்டில் திருச்சேய்ஞலூரில் காசிப கோத்திர அந்தணராகிய எச்சதத்தன் என்பாருக்கு பவித்திரை என்ற மனைவியின் வயிற்றுதித்தவர் விசார சருமர் என்ற நாமங் கொண்டு இலிங்கவழிபாடு செய்து சிவனடியாரானவர். சிவபூசைக்குரிய பாற்குடங்களை உதைத்த தன் தந்தையின் காலை வெட்டினவர். தந்தையினும் மேலானது தம்பிரான் பூசை என்பதனை உலகிற்குணர்த்திப் புகழ் பெற்றவர்.

அஞ்சலி அஸ்தம்: இடது அக்கலத்தில் அங்குசம் கிரிகிடம்.

## 22. திருநாவுக்கரசு சுவாமிகள்:—

இவர் திருமுனைப்பாடி நாட்டில் திருவாமூரில் வேளாளர் குல குறுக்கையர் குடியரான புகழனார் மனைவி மாதினியார் வயிற்றுதித்தவர் பிள்ளைத்திருநாமம் மருணீக்கியார் என்பது சமணம்புக்குத் தருமசேனர் எனப்பட்டம் பெற்றவர் பின் அச்சமயம் நீங்கிச் சிவபிரானால் நாவுக்கரசு என்னும், சம்பந்தரால் அப்பர் என்றும் நாமம் பெற்றனர். சைவரும் தமிழும் தழைக்கத் தேவாரம் பாடியவர். குருவழிபாடுசெய்து சரியை மார்க்கத்தில் நின்று என்றும் மாருப் புகழ் பெற்றர்.

அஞ்சலி அஸ்தம்: வலது அக்கலத்தில் பில் செதுக்கி.

மொட்டதலையில் உத்திராக்ஷம்.

## 23. குலச்சிறை நாயனார்:—

இவர் பாண்டிய நாட்டில் மனமேற்குடி என்னும் ஊரில் வாழ்ந்தவர். சரியை நெறி கடைப்பிடித்து அதன் புறத் தொழில்களைக் கொண்ட அடியார்க்குதவி அமைச்சராயிருந்து

மங்கையர்க் கரசிக்குத் துணை பூண்டு குருவழிபாடு கொண்டு சிவனடியாரானவர் சுந்தரராலே பெருநம்பி என்று வியத்து பாராட்டப்பட்டவர், சிவவழிபாடும் அச்சின்ன மணிதலுமே மேன்மை என்பதலை உலகிற் காட்டினவர்.

அஞ்சலி அஸ்தம்: ஜடை முடி.

## 24. பெருமிழலைக்குறும்ப நாயனார்:—

இவர் மிழலை நாட்டிலே பெருமிழலை எனுமூரில் பிறந்தவர் யோகமார்க்கத்தில் நின்றவர். சுந்தரரிடம் குருவழிபாடு மிக்கவர் சுந்தரரைப்பிரியாது சிவபிரான் அடிசேரத் தன் பிரமரந்திர வாயிலைத் திறந்துகொண்டு சென்று புகழ் பெற்றவர். (பிரமரந்திரம் அறிந்தவராதலால் இவரே பிராமணராவார்).

அஞ்சலி அஸ்தம்: மொட்டதலையில் உத்திராக்ஷம்.

## 25. காரைக்காலம்மையார்:—

இவ்வம்மையார் சோழநாட்டில் காரைக்காலில் வைசியர் குலத்தில் தனதத்தன் என்பவருக்கு அவதரித்துச் சிவனடியாராகியவர் சங்கம வழிபாடுடையவர் இறைவனருளால் மாங்கனிபெற்றுக் கற்பின் பெருமையையும் இறைவனிடத்துப் பக்தியின் சிறப்பையும் உலகில் விளக்கிப் புகழ் பெற்றவர். இறைவனால் 'அம்மையே' என்றழைக்கப்பட்டவர்.

கையில் தாளம் தசையில்லா ஜடலம் மொட்டதலை உட்கார்ந்தது.

## 26. அப்பூதியடிகள் நாயனார்:—

இவர் சோனாட்டுத் திங்களூரில் அந்தணர்குலத்தில் தோன்றிச்சிவனடியாரரனவர் குருவழிபாடுடையவர். அப்பர் பால் பக்திபூண்டவர்' அவர் பெயரை ஓதிச் சிவப் பேறு பெற்றவர்.

அஞ்சலி அஸ்தம்: மொட்டதலையில் உத்திராக்ஷம்.

## 27. திருநீலநக்க நாயனர்:—

இவர் சோணுட்டில் சாத்தமங்கை எனு நகரில் அந்தணர் குலத்தில் தோன்றியவர்' இலிங்கவழிபாடுடையவர் மகிமை தருவது வருணமன்று பத்தியே என்பதனை பாணர் மூலம் அறிந்தவர். சப்பந்தர் மணத்தின்போது சிவப் பேறு பெற்றவர்

அஞ்சலி அஸ்தம் குல்லாய் முடி.

## 28. நமிநந்தி யடிகள் நாயனர்:—

இவர் சோழநாட்டிலே ஏமம்பேறூரில் அந்தணர் குலத்திலே தோன்றி இலிங்கவழிபாட்டில் நீங்கா தொழுகிச் சிவனடியரரானவர். ஆரூரில் அறநெறி ஆலயத்துள் நீரினல் விளக்கெரித்தவர் தண்டியடிகளால் சமணம் அழிந்தபின் வாண்மீகநாதர் ஆலயத்து அத்யக்ஷரானவர். ஆரூரிற் பிறந்தார் யாவரும் சிவகணங்கள் என ஐயனுல் தெளிந்து தீண்டாமையை விட்டவர். நாவுக்கரசராலே "ஆணிப்பொன்" என்ற பதிகத்தால் பாராட்டப்பட்டவர் இங்ஙனம் லிங்கவழி பாட்டின் பெருமையை உலகிற்கு விளக்கிப் புகழ்பெற்றவர்.

அஞ்சலி அஸ்தம்: மொட்டதலையில் உத்திராக்ஷம்.

## 29. திருஞானசம்பந்தர்:—

இவர் சோழ மண்டலத்தில் பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம் பூந்தாராய்'. சிரபுரம், புறவம், சண்பை, கொச்சைவயம் கழுமலம் எனப்பல் பெயர் பூண்ட சீர்காழியில் அந்தணர் மரபில் கௌணியர் கோத்திரத்தில் சிவபாத விருதயர் என்பாருக்கு பகவதியார் என்ற அம்மையாரிடத்து அவதரித் தவர். கருவிலே திருவுடையார். மூன்றும் ஆண்டில் அம்மை வண்ணத்திற் சிவஞானம் குழைத்துத் தந்த உண்ணு முலைப்பாலுண்டவர்' திருக்கடைக்காப்புப்பாடி உலகை உய்வித் தவர்; ஆண்டவனுல் முத்துச்சிவிகையும் குடையும் சின்னங் களும் பெற்றவர்; உபநயனம் செய்யவந்த அந்தணர்களுக்கு வேதங்களை ஐயந்திரிபற உணர்த்தினவர்; முயலகன் என்ற நோய் தீர்த்தும் பனிப்பிணி போக்கியும் யாகத்திற்கும் பொன் வருவித்துத் தந்தும் யாழ்முறிபாடியும், என்னப்ப பெண்ணுக்

கியும் அரவால் இறந்தவனை எழுப்பியும். வாசிதீரக் காசு பெற்றும், மறைக்கதவு திறக்கவும், அனல்வாதம், புனல்வாதம் செய்து சமணரை வாதில் வென்று பாண்டியன் வெப்பு நோய் தீர்த்தும் ஆண்பனையைப் பெண்பனையாக்கியும் ஆய இங்ஙனம் பல அற்புதகங்களை நிகழ்த்தியவர். குருவழிபாட்டுடன் ஞானமார்க்கத்தை மேற்கொண்டவர் சைவரும் தமிழும் தழைத்த புகழ் பெற்றவர். தம் திருக்கல்யாண காலத்து யாவரையும் சோதியுட் புகச் செய்தவர்.

கையில் தாளம் நிர்வாணம் ஜடை முடி வலது பக்கம் சாய்ந்தது.

## 30. ஏயர்கோன்கலிக்காம நாயனார்:—

இவர் சோழநாட்டில் பெருமங்கலத்தில் வேளாளர் குலத்தில் சேனாதிபதி தொழில் பூண்ட ஏயர்குடியிலேதோன்றிச் சிவனடியாரானவர். குருலிங்க சங்கம பக்தியிலே சிறந்தவர் சரியை மார்க்கத்தில் ஒழுகினவர். சிவபெருமானைத் தூதனுப் பின்மை கருதிச் சுந்தரரை வெறுத்தவர் தன் தவறுணர்ந்து இறைவனிடம் விண்ணப்பித்த சுந்தரரை நட்பாகுமாறு கலிக்காமர் நோய் நீக்கச் செல்லுமாறு பணிக்க அவர் வர வறிந்து அவரைகாண வெறுத்துத்தாமே தம் வயிற்றை கிழித்து கொண்டிறந்தவர் அது சென்று கண்ட சுந்தரரும் இறக்கத் துணிய உடனே பிரானருளால் கலிக்காமர் உயிர்பெற்றெழத் இருவரும் நட்புக்கொண்டனர். பின்பலகாலம் சிவத்தொண்டு பூண்டிருந்து சிவபதமடைந்தவர்.

அஞ்சலி அஸ்தம்: கிரிகிடம்.

## 31. திருமூல நாயனார்—

இவர் கைலாயத்திலே வசித்த நந்திதேவர் மாணவர்களிலே ஒருவராகிய சிவயோகியராவார். இவர் அகத்தியரிடம் நட்பினாலே சிலகாலம் இருக்க நினைந்து. வந்து கேதாரம் முதல் சிதம்பரம் வரையிலுள்ள பலதலங்களைத் தரிசித்துக்கொண்டு திருவாவடுதுறை யடைந்தார். பின் அதனை அசன்று செல்லு கையில் காளிரிக்கரை சாத்தனூர் வாசியாகிய பசுக்களை மேய்க்கும் மூலன் என்னும் இடையன் இறந்து கிடக்க பசுக்கள் அழுது கொண்டிருக்கக்கண்டார். ஆனிரையின் குறைபோக்க

இவர்தம் உடலை ஓரிடத்து மறைத்து அம்மூலன் உடலிற் புக்குத் திருமூலர் என்றெழுந்தார். கண்ட பசுக்கள் களித்து மேய்ந்தன மாலை ஊர்புக்குப் பசுக்களை விடுத்து தம் இல்லம் புகாது வெளிநிற்க. மூலன் மனைவி. அவரை நெருங்க அவர். உனக்கு என்னோடு தொடர்பில்லை என்று மடமொன்றில் வசிந்திருந்து சிவயோகத்தில்மர்ந்தார், பின்பு இவர் தம் உடலைத் தேடிக்காணாது. இது இறைவன் திருவருள் என உன்னி ஆவடுதுறையில் ஓர் அரசின் கீழ் மூவாயிரவருடம் தங்கி மூவாயிரம் பாட்டுக்களால் சரியை கிரியை யோகம் ஞானம் என்று சைவாகமங்களில் பேசப்படுகின்றவைகளைத் திருமந்திரம் என்னும் பெயரால் தமிழில் பாடிப்பின் கைலையடைந்தார் அவைகளுள்:—

**சரியையாவது—**

இறைவனுடைய சகளரூப சரீரத்தைக் குறித்து ஞானுந்த மாகிய சரீர வியாபார ரூபமான சரீரசுத்தி சிவச்சின்னமணிதல் சந்தியாவந்தனம், இலிங்கபூஜை தோத்திரம் ஜெபம் முதலிய புறத்தொழிலாற் செய்யும் சேவை.

**கிரியையாவது—**

இறைவனுடைய சகள. நிட்கள ரூபா ரூப சரீரத்தைக் குறித்து ஞானங்கமாகிய மனோ வியாபார ரூபமான சாகார சிவத்தியானம், உட்பூசை முதலிய அகத்தொழில், மேற்கூறிய புறத்தொழில் என்னுமிரண்டினாலும் செய்யும் சேவை.

**யோகமாவது—**

இறைவனுடைய நீட்கள அரூபசரீரத்தைக் குறித்து ஞானங்கமாகிய மேற்கூறிய அகத்தொழிலினாலே செய்யுன் சேகர்.

**ஞானமாவது—**

பதி பசு பாசங்களின் சுவட ரூபங்களை உள்ளவாறறிந்து பாசநீக்கத்தில் விருப்பமுடையராய் பரசிவத்தினிடத்திலே சிற்சத்தி வியாபார ரூபமாகிய நிராகார சிவபாவனை முதலிய அறிவுத் தொழில் மாத்திரத்தாலே செய்யுன் சேவை.

இவை சிவஞானசுவாமிகள் அருளியவாறு கூறப்பட்டன.

அஞ்சலி அஸ்தம்: இடது அக்கலத்தில் யேடு ஜடை தொங்கியது.

## 31. தண்டி அடிகள் நாயனார்:—

இவர் சோழமண்டலத்தில் திருவாரூரில் வசித்து வந்தவர்; பிறவிக்குருடர். அகக்கண்ணுடையவர் சரியை மார்க்கத்தின் நெறியைக் கைப்பற்றினவர்; இலிங்கவழிபாடுடையவர் தம்பிறவி கடைத்தேற ஏதேனும் வழி கூறவேண்டும் என்று அந்நகர்க்கண் வதிந்த அந்தணஉத்தமர் ஒருவர்பால் அணுகி. அவரால் நல்லுரை பெற்றவர். அதனால் தம்மாலியன்ற ஏதேனும் ஓர் தொண்டு செய்ய நினைந்து அவ்வூர் ஆலய மேற்றிசை திருக்குளம் சமணர்களால் பாழிகளாகி நீர் குறையுணர்ந்து அதன்ப் போக்க கீழ் மேல் கரைக்குக் கம்பு நட்டுக் கயிறுகட்டி அதனை வழியாகக் கைப்பற்றி கமலாலயக் கயத்தைத் திருத்துவாயினர். சமணர் அவர்க்கு இடையூறு செய்து எள்ளி நகையாடினர். அப்பொழுதுஅவர்களுள் நடந்த சபதத்தால்இவர் மனமுடைந்து எம்பிரானை வேண்டிக் கரையில் துயில. இறைவன் கனவில் இட்டவன் கட்டளைப்படி அரசன் வந்து வினவியபின் இவர் ஐந்தெழுத்தோதிக் குளத்தில் மூழ்கிக் கண் பெற்றார். சமணர் குருடர்களாகி சபதப்படி ஊர்விட்டோடினர். இங்ஙனம் தொண்டாற்றிப் புகழ்பெற்றுச் சிவபதம் அடைந்தார்.

அஞ்சலி அஸ்தம்: வலது முழங்கையில் கமண்டலம் மொட்ட தலையில் உத்ராக்ஷம்.

## 32. மூர்க்க நாயனார்:—

இவர் தொண்டை நாட்டிலே திருவேற்காடு என்னும் ஊரில் வேளாளர் குலத்திற் பிறந்து சிவனடியாரானவர். இவர் சரியை மார்க்கத்தில் நின்று சங்கம வழிபாடு செய்து சிவனடியார் களைச் சிவபிரானெனவே கருதி நாடோறும் விருந்தோம்பி மகேச்சுர பூசை நடத்தினவர். நாளடைவில் பூசைக்கு முட்டுப் பாடு வர பொருள் யாவும் குறைந்துபட தான் முன் பயின்ற சூதினால் பொருளீட்டி அப்பூசை முடித்தவர். இங்ஙனம் தலம் பல தரிசித்துச் சென்று கும்பகோணத்தை யடைந்து அங்கும் சூதால் பூசை செய்தார். சூதில் மறுத்தாரை உடைவாளால் குத்தினவர் ஆதலின் இவர் நற்சூதர் மூர்க்கர் என்னும் பெயர் களைப் பெற்றார். பூசையின் மூடிவிலே கடைப்பந்தியில் உண்ணுங் கருத்தாகவே இருந்து சிவபதமடைந்தனர்.

அஞ்சலி அஸ்தம்: மொட்ட தலையில் உத்ராக்ஷம்,

## 33. சோமாசி நாயனர் :—

இவர் சோழ நாட்டில் திருவம்பர் என்ற ஊரில் அந்தணர் குலத்திலவதரித்துச் சிவனடியாரானவர் :—கங்கைவார் சடைக் கணிந்தார்க்கன்பராகில் அவர் கண்டீர் யாம் வணங்கும் அடிகளாவர் என்ற திருவாக்கிற்கிணங்க இவர் குருவழிபாடுடையவராய்க் கிரியை மார்க்கத்திலொழுகி வேள்வி பல இயற்றியவர். ஆரூர்புக்குச் சுந்தரர் அடிகள் பக்தி கொண்டிருந்து சிப்பே ரெய்தியவர்.

வலது ஓமக்கரண்டு. இடது கடிகாஸ்தம், மொட்டதலை.

## 34. சாக்கிய நாயனர் :—

இவர் நாட்டில் திருச்சங்க மங்கை எனும் ஊரில் வேளாளர் குலத்திலுத்து பௌத்த மதத்தைத் தழுவியிருந்து சிவனடியாரானவா. இவர் பௌத்த சமய நூல்களேயன்றி மற்றச் சமய நூல்களாய்ந்து முடிவில் சைவ சமயமே சனமயம் எனக் கண்டு சரியை மார்க்கத் தினின்று இலிங்கவழிபாடியற்றியவர் துவராடையணிந்தவராகவே பௌத்த வேடத்தைத் துறவரது சிவசாதாக்கியம், அமூர்த்திசாத்தாக்கியம், மூர்த்தி சாதாக்கியம், கர்த்திரு சாதாக்கியம் கர்மசாதாக்கியம் என்னும் பஞ்ச சாதாக்கியங்களுள் கர்மசாதாக்கிய மகிமை யறிந்து நாடொறும் சிவலிங்கதரிசனம் செய்தே பின் உண்பாராயினர். 'மாசற்ற நெஞ்சுடையார் துவன் சொல் இன்பம் பயப்பது பேல் இவர் கற்களேயே மலராகச் கருதி லிங்கத்தின் மேலெறிந்து வந்தமை இறைவனுக்கு இன்பம் பயப்பண வாயின. ஓர் நாள் மறந்து உண்ணச் சென்ற இவர் பின் நினைவு வரச் சென்று கல்மலர் சொரிப்து லிங்கத்தை அர்ச்சித்தபோது இறைவன் வரலேறு மீது காட்சி தந்து ஆட்கொண்டார், எம் முறையில் பூசிக்கினும் அண்பின்வழியது ஆண்டவனுக்கு உந்த தாம் என்பதனை உலகுக்கு விளக்கிப் புகழ்பெற்றவர் இவர்.

அஞ்சலி அஸ்தம் ஜடை தொங்கியது.

## 35. சிறப்புலி நாயனர் :—

இவர் சோழநாட்டில் சிறப்பித்துக்கூறப்பட்ட சம்பந்தரால் நன்மை சார்ந்த வேதியர் என்று திரு ஆக்கூரில் அந்தணர்

குலத்திலே தோன்றிச் சரியை மார்க்கத்தினின்று இலிங்கவழி பாடுசெய்து சிவனடியாரானவர் சிவபக்தி அடியார் பக்தியில் சிறந்தவர். அடியார்களுக்கு அன்னமளித்து பசளித்தலைத்தம் இன்பத் தொழிலாகக்கொண்டு பஞ்சாக்கர மோதியும் வேள்வி யரிந்தும் அப்பயனை சிவனுக்கே யாக்கி அவர் திருவடி அடைந் தவர்.

அஞ்சலி அஸ்தம்: மொட்டதலை.

## 36. சிறுதொண்ட நாயனார்:—

இவர் சோழநாட்டில் திருச்செங்காட்டங்குடியில் மகா— மாத்திரர் குலத்தில் சிவமுயன்றடையுஞ் தெய்வக்கலை பலதிருந்த ஓதியவரும், கவனவாம் புரவி யானை தேர் படைத் தொழில்களோடு ஆயுள் வேதங்களினும் வல்லவரகிப் பரஞ் சோதியார் என்ற பெயருடன் அரசனிடம் அமைச்சராயிருந் தவர் உத்தரவாதாபியை வென்றவரும் இவரே. கலிப்பகையார் இப்போரில் வீரராகச் சென்று போர்செய்து மாண்டனர்: அரசன் பரஞ்சோதியார் முக்திமார்க்கத்தையடைய (அடியார்) சங்கம் வழிபாடு செய்யும் உத்தமர் என்பதனை மற்ற அமைச்சர்களால் உணர்ந்த அரசன் இவரைப் பணிந்து நிதி மிகத்தந்து சிவத் தொண்டில் ஈடுபடச் செய்தனன் இவர் வெண்காட்டுநங்கையை மணந்து சரியையில் நின்று இல்லிருந்து விருந்தோம்பி அடி யார்களுக்கு வேளாண்மை செய்து வந்துதார் (கணபதீச்சுரர் கருணையால் சீராள தேவர் புத்திரரானார்) அன்பர்க்கெளியேன்' என்ற கருத்துடைய சிறுத்தொண்டர் அன்பை உவகிலுணர்த்த இறைவன் திருவுளங்கொண்டு சைவம், பாசுபதம், மாவிரதம், காளாமுகம், வாமம், வைரம்' எனும் உட்சமயங்கள் ஆறனுள் ஒன்ருகிய வைரவத்திற்குரிய தமருகமும் சிலம்பும் தரித்த மூர்த்தியாய் அவரை நேர்ந்து பிள்ளைக்கறி வேண்டஅங்ஙனமே வெண்காட்டு நங்கையால் மற்றை அங்க பதார்த்தமும் தோழி சந்தண நங்கையால் தலை பதார்த்தமும் படைக்க இவர் 'நான்தனித்துண்ணேன் நீரும் 'உண்ணும் என்றும் உன் மகனை அழையும் எனவும். தொண்டர் அவன் இப்போதுதவான் என அவன் வந்தாலன்றி உண்ணேன்' என மறுக்க அவர் ஏவலின் நின்றுதாயுடன் தந்தை மகனைக் கூவ. மகன் பள்ளி யினின்று வரவும் கண்டு களித்து கொண்டு உட்புக அங்கு வைரவர் மறைந்தனர். அதுகண்டு கலங்கிய சிறுத்தொண்டர் தேடிவெளிச் செல்ல அங்குத் தேவர் புடைசூழ நாதன் தரிசனத்

தர வணங்கி உடன் கைலைபுக்கு தாம் செய்வது நிஷித்தானுஷ்டானமாயினும் சிவானந்தானுபவம் மேலிட்டு நிற்கையால் கருவிகரணங்கள் தற்போதமாய்ச் செய்யாது சிவபோதச் சீவிதமாய் செய்யின் அதனை விகிதானுஷ்டானமாகவே இறைவன் கொண்டருளுவார் என்பதனை உலகில் மெய்ப்பித்துப் புகழ் பெற்றவர் இவர்.

அஞ்சலி அஸ்தம்: மொட்டதலை,

## 37. கழறிற்றறிவார் நாயனார் :—

இவர் மலைநாட்டில் மகோதை என்னும் கொடுங்கோளூரில் சேரர் குடியில் பெருமாக்கோதையார் என்னும் நாமம் பூண்டவராய்ப் பிறந்து சிவனடியாரானவர் இவர் சனனவைராக்யம், தேகவைராக்யம, ஐசுவரிய வைராக்யம், பிரபஞ்சவைராக்யம், திரவியவைராக்யம். ஜங்கவைராக்யம், ஸ்த்ரீவைராக்யம், அசன வைராக்யம், பிரதிக்கிரகவைராக்யம், வைராக்யம் என்னும் பத்து வகைகளிலும் இறுதியான உத்தம வைராக்யமுடையவராய்ச் (விராகமது இச்சை இன்மை) சரிவைமார்க்கதினின்று ஸ்நானம், அநுட்டானம், நந்தவனம் வைத்தல். திருமாலைகட்டல்திருவல கிடல், திருமெழுக்கிடல் திருப்பாட்டுப்பாடல் முதலிய தொண்டு மேற்கொண்டு அரசதொழில் விடுத்து, திருவஞ்சைக் கணத்தில் வதிந்தவர். செங்கோற்பொறைவன் என்ற சேரன் பற்று நீங்கி யோகத்திலாழ அரசிற்கு அடியாரை வேண்ட இவர் ஆண்டவன் ஏவலால் அரசு மேற் கொண்டவர் மழையால் நனைந்து உவர் மண் வெளுத்த வண்ணானைச் சிவவேடமென்று வணங்க அவன் அடிவண்ணான் என இவர் அடிச்சேரன் என்று சகஷி விடுத்தவர். இவர் பூசை முடிவில் சபாநாயகர் பாதச்சிலம் பொலி கேட்பவர். உயிர்கள் பேசுவனவற்றை அறிவும் அறிவைப் பெற்றமையின் இவர் கழறிற்றறிவார் எனப் பெயர் பெற்றார் சொக்கநாதப்பெருமான் ஓலைப்படி பாணபத்திரர்க்குப் பொருளீந்தவர் இறைவனால் சுந்தரர் பெருமைகேட்டு அவருடன் நட்புபூண்டவர் சிதம்பரத்தில் பொன்வண்ணத்தந்தாதியும், ஆரூரில் மும்மணிக்கோவையும் வேதாரணியத்தில் அந்தாதியும் பாடியவர், சுந்தரமூர்த்திநாயனார் சிவபிரானால் அனுப்பப்பட்ட வெள்ளை யானை மீதேறிக்கொண்டு கைலை செல்லுகையில் தானும் குதிரை ஒன்றில் அமர்ந்து அதன் காதில் பஞ்சாக்கர மோதி யானையின் முன் சென்றவர். அதுகண்ட படைவீரரும் தங்கள் உடலை வீழ்த்தி அவருடன் செல்ல

வாயலில் இவர் தடைபட்டு நிற்க சுந்தரர் உட்புக்கு இறைவனை வேண்டியபின் கட்டளைப்படி உட்புகுந்து கைலாய ஞான உலா அரங்கேற்றி சிவகண நாதரானவர்.

அஞ்சலி அஸ்தம்: வலது அக்கலத்தில் கத்தி கிரிகிடம்.

## 38. கணநாத நாயனார்:—

இவர் சோழநாட்டில் சீர்காழியில் அந்தணர் குலத்தில் தோன்றி குரு வழிபாடு செய்து சிவனடியாரானவர். தன்னை யடைந்தவர்களைச் சரியை மார்க்கத்தில் ஒழுகச் செய்ய அவர்களைச் சிவனடியாரர்க்குவார். ஞானசம்பந்தரை முப்போதும் வழிபடுவார். இல்லறத்தில் நின்று தோணிப்பாருக் இப்பணிகள் செய்திருந்து அதனால் கைலை சேர்ந்து கணங்களுக்கு நாதரானவர்.

அஞ்சலி அஸ்தம்: மொட்டதலை.

## 39. கூற்றுவ நாயனார்:—

இவர் திருக்கரக்கோயில் கொண்ட தென்கனந்தையில் குறுநிலமன்னர் குடியில் தோன்றி சரியை மார்க்கத்திலிருந்து லிங்கவழிபாடுசெய்து சிவனடியாரானவர். பலநாட்டவர்களையும் வென்றவ, நடராஜப்பெருமானது திருவடிகளையே தனக்கு முடியாகப் பெற்றவர். பலதலங்களையும் தரிசித்துச் சிவபதமடைந்தவர்.

அஞ்சலி அஸ்தம்: இடது அக்கலத்தில் கத்தி கிரிகிடம்.

## 40. பொய்யடிமையில்லாத புலவர்கள்:—

இவர்கள் மதுரை சோமசுந்தரக் கடவுளால் சங்கப்பலகை யேற்றுத் தமிழை வளர்த்த கடைச்சங்கப் புலவர்கள் நக்கீரர் முதலான நாற்பத்தொன்பதின்மர் என்ப. இவர்கள் சிவச் சின்னமுடைவராய் இலக்கணம் கற்று பரமனையே பாடி பொய் முமையில்லாத புலவர் எனப்புகழ் பெற்றுச் சிவபதமடைந்னர்கள்.

அஞ்சலி அஸ்தம்: மொட்டதலை.

## 41. புகழ்ச் சோழ நாயனார் :—

இவர் சோழநாட்டில் உறையூரிலே அரசர்மரபிலே தோன்றி சரியை நெறிபற்றிச் சங்கமவழிபாடியற்றிச் சிவனடியாரானவர் இவர் அரசாளுநாளில் மற்றையாவரும் தன்னடி பணியபணியாத அதிகன்மேல் போர் தொடுக்கவும் அவன் ஓடி ஒளிய மற்றைய வீரர்களை வெட்டி அவர் தலைகளைக் கொணர்ந்து இவர் அமுது வைக்கவும் அவைகளுள் ஒன்று சடையோடிருத்தலைச் கண்டு வருத்தி அத்தலையுடன் தீ மூழ்கிச் சிவனடி சேர்ந்து புகழ் பெற்றவர்.

அஞ்சலி அஸ்தம்: இடது க்கலத்தில் கத்தி கிரிகிடம்.

## 42. நரசிங்கமுனையரைய நாயனார்:—

இவர் திருமுனைப்பாடி நாட்டில் குருநில மன்னர் மரபில் தோன்றி சங்கமவழிபாடு செய்து சிவனடியாரானவர். ஆன் மாக்கள் சைவநெறி யொழுகி முக்தியடையவேண்டும் எனும் கருத்துடையராய் போர்வென்று அரசாண்டவர். விபூதியே செல்வம் இறைவடியே பேறு என இருந்தவர், ஆதிரை தோறும் அடியாரை உபசரித்து 100 பொன்னத்தவர். விபூதி யணிந்து பொன்னுசைபற்றிவந்த தூர்த்தனைத் திருத்தியவர்.

அஞ்சலி அஸ்தம்:இடது பக்கம் அக்கலத்தில் கத்தி கிரிகிடம்

## 43. அதிபத்த நாயனார் :—

இவர் சோணாடு நாகையில் கடற்கரை நுளைப்பாடியில் பரத வர்குலத்தில் தோன்றி கிரியையில் நின்று அகத்தொழில் பூண்டு சிவனடியாரானவர். தம் தொழில் மீன் பிடித்தலே யாயினும் கிடைக்கும் முதல் மீனை இறைவனுக்கு என்று கடலில் விடுவார். இவர் அன்பை விளக்க இவருக்குப் பலநாளும் ஒரு மீனே கிடைக்கச் செய்தார் அண்ணல் ஆயினும் இவர் தன்னெறியில் நெகிழவில்லை. வறுமையுற்று மேனி தளர்தும் தன்னெறி பிறழ இவருக்குப் பொன் மீன் ஒன்று ஓர் நாள் அகப்பட அதனைக் கடவுளுக்கென்றே கடலில் விடவும் அங்கு இடபாரூடர் காட்சி பெற்றவர். சாரூபபதவி ஏற்றவர் இவர்.

அஞ்சலி அஸ்தம் ஜடைமுடி.

44. கலிக்கம்ப நாயனார் :—

இவர் நடு நாட்டில் திருப்பெண்ணாகடம் எனும் ஊரில் வைசியர் குலத்தில் தோன்றித் தூங்கானை மாடத்து இறைவனை வழிபட்டுக்கொண்டு அடியர் வழிபாட்டிற் சிறந்திருந்து சிவனடியாரானவர், தன் பால் வேலையினீங்கிய பணியாளன் ஒருவன் சிவனடியார்களுடன் சிவச்சின்னங்களணிந்து வரவும் அன்னாரை இன்னாரென மனைவி கூறி தான் விளக்க நீர் வார்க்கத் தாழ்க்க சிவனடியார் சேவையே பேறெனக்கொண்ட அவர் அவள் கரத்தைச் சோதித்துத் தாமே நீர் வார்த்து விளக்கி வேண்டுவ புரிந்து விடுத்தவர். அங்ஙனமே பலகாலம் அடியார் வழிபாடியற்றிப் புகழ்பெற்றவர்.

அஞ்சலி அஸ்தம் மொட்டதலை.

45. கலிய நாயனார் :—

இவர் வரலாற்றைக் குறித்து வேறுவகை கூறுவாருமுளர் அது, காட்டில் லிங்கங்கண்டு ஆலயங்கட்டிக் காத்தும் தீவர்த்தி எரித்தும் எண்ணெய்வாங்க இயலாவளவில் விறகு எரித்தும், அதுவும் கிடைக்காதபோது தலைமயிரை எரித்தும் காட்சி பெற்று இவர் வேண்டுகோட்கிணங்கி இறைவன் கோயிலுடன் புஷ்பவிமானத்தில் கைலை யடைந்தார் என்பது.

இவர் தொண்டைநாட்டில் திருஒற்றியூரில் சக்கரப்பாடி வீதியில் எண்ணெய் வணிகர் (செக்கார்) குலத்தில் தோன்றிச் செல்வராகி இளமை நீரிற்குமிழி, செல்வம் நீர்த்திரைகள் போன்றவை என உணர்ந்து, அறம் இன்னேசெய்க என்று ஒற்றி ஆலய உள்ளும் புறமும் எண்ணிறந்த ஒளி விளக்கேற்றி, லிங்க வழிபாட்டுடன் சிவனடியாரானவர்.

இறைவன் இவர் தொண்டின் பெருமையைப் புலப்படுத்த முதலில் செல்வத்தைப் போக்கினார். அந்நாளில் கூலிக்கு எண்ணெய் விற்றும் அதன்பின் செக்கினிடம் செய்யும் தொழில் செய்தும் வந்தார். அத்தொழிலும் கிடைக்காதொழியவும் மனையாள விற்கத்தொடங்கினார். எவரும் வாங்காமையால் திருவிளக்கு தொண்டுகெடின் தானும் மாள்வதாக் கூறி அகலில் எண்ணெய்க்குப் பிரதி இரத்தம் சொரியத் தம் கழுத்தை அருக்கத்தொடங்கினார். அப்போது மங்கைபாகன் அங்குத் தோன்ற வணங்கி அருள் பெற்றார்.

அஞ்சலி அஸ்தம், இடது முழங்கையில் கமண்டலம் முடி வலது பக்கம் சாய்ந்தது.

46. அத்தி நாயனர் :—

இவர் சேரநாட்டில் வரிஞ்சியூரில் வேளாளர் குலத்தில் தோன்றிச் சங்கவழி பாடியற்றிச் சிவனடியாரானவர். அடியார் களைப் பழித்தார் நாவினை யருத்து அருள் பெற்றவர். நாவை அருத்த சத்தியால் இப்பெயர் பெற்ருர்.

அஞ்சலி அஸ்தம், ஜடைமுடி வலதுபக்கம் சாய்ந்தது.

47. ஐயடிகள்காடவர் கோண நாயனர் :—

இவர் தொண்டைநாட்டில் காஞ்சிபுரத்திலே பல்லவர் குலத் திலே தோன்றி அரசியற்றிச் சைவம் ஓங்க, லிங்க வழிபாடு செய்து சிவனடியாரானவர். முடிவில் பற்று நீங்கி அரசு துறந்து தலம் பல நடந்து வழிபட்டுப் பணியாற்றி தலமொன்றிற்கு வெண்பா ஒன்று பாடிச் சிவபத மடைந்தவர்.

அஞ்சலி அஸ்தம் இடது அக்கத்தில் யேடு கிரிகிடம்.

48. கணம் புல்ல நாயனர் :—

இவர் சோழநாட்டில் வெள்ளாற்றுக்கரை இருக்குவேளூரிலே தோன்றி சரியை நெறியில் இலிங்க வழிபாடியற்றிச் சிவனடியா ரானவர் வறுமைவர தில்லையெய்தி தரிசித்துப்பின் வீட்டிலுள்ள பொருள்களை விற்றுத் திருப்பில்லீச்சுரத்தில் விளக்கெரித்தவர், பொருள் யாவும் நீங்கக் கணம்புல் அரிந்து விற்று விளக் கேற்றியும், அது விலைபோகாதுழி அப்புல்லையே எரித்தும் அது போதாமையால் தம் தலைமுடியை மடுத்து எரித்தும் புகழ் பெற்றவர்.

அஞ்சலி அஸ்தம் குல்லாய் முடி.

49. காரி நாயனர் :—

இவர் சோழநாட்டில் திருக்கடவூரில் அந்தனர் குலத்தில் தோன்றி இலிங்மவழிபாடு செய்து சிவனடியாரானவர்; தமிழ் வல்லுனர் காரிக்கோவை எனும்நூலியற்றி மூவேந்தபாக் சென்று கூறிப் பொருள் பெற்று ஆலயம் பல அமைத்தும் அடியாரைப் பேணியும் இறைவனருள் பெற்று உடலோடு கைலையெய்தியவர்.

அஞ்சலி அஸ்தம், குல்லாய்முடி, இடது அக்கலத்தில் யேடு.

## 50. நின்ற சீர் நெடுமாற நாயனர் :—

இவர் பாண்டி மண்டலத்தை மதுரையிலிருந்து கொண்டு அரசாண்டவர். சந்துரு சாதனபாண்டியர் இவரது தந்தை யாவார். இவருக்குக் கூன் இருந்தமை பற்றிக் கூன்பாண்டியன் என்னும் பெயர் இருந்தது. சமணராயிருந்து தன் மனைவி மங்கையர்க் கரசியாலும் அமைச்சர் குலச்சிறை நாயனராலும் சைவராகிக் குருவழிபாடு செய்து சிவனடியாரானவர். ஞான தன் உடலிற்றடலிய திருநீற்றல் கூன் நிமிரப்பெற்று நெடு மாறன் எனப்பெயர் பெற்றவர். வடபுலவரசரை திருநெல்வேலிப் போர்க் களத்தில் வென்று சைவம் பரப்பி ஆண்டு சிவபதம் அடைந்தவர்.

அஞ்சலி அஸ்தம் வலது அக்கலத்தில் அரிவால் கிரிகிடம்.

## 51. வாயிலார் நாயனர் :—

இவர் தொண்டைநாட்டிலே திருமயிலையில் வேளாளர் குலத்தில் தோன்றிச் சிவனடியாரானவர். இல்லற தருமம் மேற் கொண்டு ஞானநெறி பற்றி ஆன்மார்த்த லிங்கபூசை செய்பவ ராய் மனக்கோயிலின்கண் ஞானச்சுடர் விளக்கேற்றிஇறைவனைத் தரிசிக்கி ஆனந்ததீர்த்தமாட்டி அன்பெனு மமுதூட்டி நெடுநாள் அந்நெறியில நின்று சிவபதம் அடைந்தவர்.

அஞ்சலி அஸ்தம் மொட்டதலை.

## 52. முனையாடுவார் நாயனர் :—

இவர் சோழநாட்டில் திருநீடூரில் வேளாளர் குலத்தில் பிறந்து சரியை நெறி நின்று அடியார் வழிபாடியற்றிச் சிவனடி யாரானவர். இவர் போர்முனையில் கூலிப்படைரில் ஒருவராகச் சென்று பொருது அவ்வழியால் வந்த பொருள் கொண்டு அடியார் தொண்டு செய்தவர் அதனல் இவருக்கு இப்பெயர் வழங்கலா யிற்று. இங்ஙனம் ஒழுகிச் சிவனருள் பெற்றுப் புகழ் எய்தினர்.

அஞ்லி அஸ்தம். இடது பக்கம் கதை கிரிகிடம்.

## 53. கழற்சிங்க நாயனர் :—

இவர் பல்லவர் மரபில் தோன்றியவர். வடநாடு வென்று முறைப்படி அரசாண்டு லிங்கவழிபாடியற்றி சிவனடியாரானவர்

தலயாத்திரை செய்கையில் திருஆரூரில் ஆலய தரிசனத்தின் போது இவர் மனைவி திருமாலை மண்டபத்தின் கண் இருந்த புஷ்ப மொன்றை எடுத்து மோந்தமைக்காக அங்கு தொண்டு பூண்டிருந்த செருத்துணை நாயனார் என்பவரை சினத்துஅவ்வம் மையின் மூக்கைச் சேதிக்கவும் கழற்சிங்கர் அங்கு வந்து செய்தி யுணர்ந்து மலரை எடுத்த கரத்தையன்றே முன்னதாகச்சேதிக்க வேண்டும் என்று அடியார்க் குரைத்து அவரே அவ்வம்மையின் கரத்தைச் சேதித்தார். இங்ஙனம் சிவநெறியில் ஆழ்ந்தொழு கியவராகிப் புகழ் பெற்று இறைவனடி நிழலையடைந்தார்.

அஞ்சலி அஸ்தம், இடது பக்கம் கத்தி கிரிகிடம்.

## 54. இடங்கழி நாயனார் :—

இவர் கோனாட்டில் கொடும்பாளூரில் குறுநில மன்னர் மரபில் பொன்னம்பலம் வேய்ந்த ஆதித்தன் குடியிலே தோன்றி சிவனடியாரானவர். சைவ நெறி தழைக்கவும், சிவாகம விதிப்படி ஆலயங்கள் நடைபெறவும் முறை கெடாது ஆட்சி புரிந்து சரியை நெறி யொழுகி சங்கம வழிபாடு செய்து வந்தவர். மகே சுவர பூஜைக்கு முட்டுப்பாடுற்ற சிவனடியார் ஒருவர் இவர் நெற் கூட்டில் புக்கு நெல் முகந்தெடுக்கக் காவலாளர் அவரைக் கொண்டு நாயனார் முன் விடுக்க அவர் நெற் கவர்ந்த காரணம் வினவி செய்தி யுணர்ந்து நெல்லே யன்றி மற்றை நிதிகளையும் எடுத்துக்கொள்ளுமாறு எங்கும் பறையறைவித்தவர். இங்ஙனம் பன் னெடுங்காலம் அரசியற்றிப் புகழ் கொண்டு சிவப்பேறு பெற்றவர்.

அஞ்சலி அஸ்தம். ஜடைமுடி வலதுபக்கம் சாய்ந்தது.

## 55. செருத்துணை நாயனார்:—

இவர் சோழமண்டல மருக நாட்டில் தஞ்சாவூரில் வேளாளர் குலத்துதித்து சிவனடியாரானவர்.ஆரூரில் வன்மீகரை வணங்கி இலிங்கவழிபாடியற்றிவர். கிரியை மார்க்கத்தில் நின்று வாடா ததும், கீழ் வீழாததும், நகத்தாற் கிள்ளாததும், வண்டு முகராததும் ஆகிய் நறுமலர் பல ஆய்ந்தெடுத்து இன்டை, தொடை, தாமம், கண்ணி என்பன போன்ற பன்மாலை புனைந்து பரமனுக்கு அளித்து ஏத்தி ஒழுகினார். மலர் மண்டப மருங்கி சிதறி வீழ்ந்திருந்த மலர் ஒன்றை எடுத்து மோந்த கழற்சிங்க நாயனாரது மாதேவி (மற்றவள்) தன் கருமென் கூந்தல்; பிடித்

தீர்த்துப்படியில் வீழ்த்தி மணிமூக்கைப்பற்றிப் "பரமர் செய்ய சடைமுடியில் ஏறுந் திருப்பூ மண்டபத்து மலர் மோந்திடும் மூக்கைத்தடிவன்" என்று தடிந்தவர் இவரே.

அஞ்சலி அஸ்தம்: இடது கையில் குடை மாட்டியது. ஜடைமுடி.

## 56. புகழ்த்துணை நாயனர்;—

இவர் செருவிலி புத்தூரில் ஆதி சைவர் குலத்தில் தோன்றி கிரியை நெறியின் நின்று இலிங்க வழிபாடு செய்து சிவனடியாரானவர். பஞ்சம் திக்குப் பசியால் வாட்டமுற்ற காலத்தும் இவர் அர்ச்சனையை விடா நெறிகொண்டவர். நேய புகழ்த் துணையார் நீராட்டுங்கை தளர்ந்து உன் றூய முடிமேல் வீழ்ந்தார்" என்று மாதவச் சிவஞான யோகிகள் கூறியாங்கு. பசிப்பிணியுடன் மஞ்சனமாட்டுங்கால் சோர்ந்து கவசம் முடிமேல் விழ இவர் அவர் அடிமேல் விழுந்து சோர அங்கு அப்பன் சொப்பனத்தில் அருளியவாறு பஞ்சம் நீங்கும் வரையில் பீடத்தினிடம் நாடேறும் ஒரு பொற்காசு இருக்கப் பெற்று நீடு தொண்டு பூண்டு சிவனடி நிழலெய்தியவர்.

அஞ்சலி அஸ்தம்; கால் மத்தியில் கலசம். மொட்டதலை.

## 57. கோட்புலி நாயனர்:—

இவர் சோழ நாட்டில் நாட்டியத்தான் குடியில் வேளாளர் குலத்தில் தோன்றிச் சிவனடியாரானவர்; சேனை தலைமை பூண்டு ஊதியம் பெற்று அதுகொண்டு நெல் வாங்கிச் சேர்த்தும் இலிங்க வழிபாடு செய்தும் ஒழுகி வந்தவர். இவர் ஒருமுறை போர் மேற்செல்லுகையில் இறைவனுக்கெனக் கட்டிய நெற்கூட்டினின்று எவரும் தம் உரிமைக்கென நெல்லை எடுக்கலாகாதென சுற்றத்திற்குப் பணித்தேகினுர். இடையில் பஞ்சம வர. அச்சுற்றத்தார் கட்டளை கடந்து நெற்கொண்டு பிழைத் திருந்தனர். போர் முடிந்து மீண்டவர் அச்செய்தி யுணர்ந்து தாய் தந்தை சோதரர் மனைவி பணியாளர் ஆகிய யாவரையும் கொண்டு ஓரிடத்திருத்தி கோட்புலியன் என்பானைக் காவல் வைத்து பின் அவர்களை தம் வாளுக்கிரையாக்கினுர் அக்காலை. காவலாளன் ஆண்டிருந்த ஆண் குழவி யொன்றை பேணும் விடுக்க எண்ணி. "இக்குழவி அவ்வண்ணமுண்டிலது இதனைக் கோறன்மின்" என இவர் அவ்வண்ணமுண்டாள் முலைப்பாலை

யுண்டதன்றோ எனக்கூறித் தன் வாளால் அதனைத் துணிக்க. இடபாரூடர் எதிர் தோன்றி "அன்பநின் வாளுக் கிரையானார். பவநீங்கிச் சுவர்க்கமடைய நீ இங்ஙன வருக" எனக் கருணை பாலிக்கப் புகழ் எய்தினார்.

அஞ்சலி அஸ்தம் : கிரிகிடம்.

வலது அஸ்தம் : அக்கலத்தில் அரிவாள்.

## 58. பூசலார் நாயனார்:—

இவர் தொண்டை மண்டலத்தில் திருநின்ற வூரில் அந்தணர் குலத்தில் தோன்றியவர், அடியாரைப் பூசிக்கவும், ஆலயம் அமைக்கவும் முயற்சித்துப் பயனெய்தாமையால் மனக் கோயில் கட்டியவர். காடவர் கோனுக்குக் கனவில் தோன்றி யான் நாளை பூசலன் கோயிலுப் போவேன். ஆதலால் நின் கோயிலின் பிரதிட்டையை நாளை யொழித்துப் பின் கொள்வாய்" என இறைவன் கூறிய அவ்வளவு நின்மல ஆன்மார்த்த ஞான பூசையுடையவர்.

அஞ்சலி அஸ்தம்: மொட்டதலை:

## 59. மங்கையற்கரசியார் :—

இவர் சோணாட்டு மன்னன் மகள் பாண்டியன் நெடுமாறன் மனைவியார். ஞானசம்மந்தரால் பாராட்டப் பெற்றவர். தம் கணவனாரைச் சமணத்தினின்றும் மீட்டுச் சைவ நெறியில் இருத்தி அவர் அடித்தொண்டு பூண்டு நாயகரோடு சிவபதமடைந்தவர்.

அஞ்சலி அஸ்தம்: வலது பக்கம் கொண்டை.

## 60. நேச நாயனார்:—

இவர் காம்பீலி நகரில் சாலியர் மரபிலுதித்தவர். திரிகரணத் தானும் சிவனுக்கடிமை பூண்டு சிவனடியாரானவர். அடியார் களுக்கு வேண்டும் கோவணம், அரைஞாண், போர்வை முதலிய நெய்து தந்திருந்து சிவபதமடைந்தவர்.

அஞ்சலி அஸ்தம்: குல்லாய் முடி.

## 61. கோச்செங்கட்சோழ நாயனர் :—

இவர் பண்டு சோழ நாட்டின்கண் சந்திர தீர்த்தத்தின் அருகில் வனத்துள் வெண்ணுவல் மர நிழலிலிருந்து இலிங்கத்தைப் பூசித்த சிலந்சியாவார். .யானையும் பூசித்தயையால் இதன் யானைக் காணப்பட்டது. சுபதேவன், கமலவதி இவர் பெற்ரோர்கள். அரசு உரிமை மேற்கொண்டும் தன் பழம் பிறப்புணர்ந்து ஸ்தலங்கள் பலவற்றிற்குத் திருப்பணிகளை செய்வித்தவர் யானைக்காவின் முழு பணியும் ஏற்றவர். அப் பணியில் எம்பெருமானே ஓர் மதிலை எடுத்தும் அதன்மீது ஏறி அழித்தியும் சென்ருர் என்பதும் வரலாறு. இலிங்க வழிபாடு உடையராகிச் சிவனடிமை பூண்டு சிவபதமடைந்தவர்.

அஞ்சலி அஸ்தம்: கிரிகிடம்.

## 62. திருநீலகண்ட யாழ்பாண நாயனர் :—

இவர் நடுநாட்டில் திரு எருக்கத்தம் புலியூரில் பாணர் குடியில் தோன்றிச் சிவனடியாாரனவர். குருவழிபாடுடையவர். சிவபிரானுடைய திருப்புகழை யாழில் வாசித்தவர். மதுரை இறைவன் பணிந்தவாறு பொற்பலகை தர அதன்மீதிலிருந்து யாழிசைத்தவர். ஞானசம்பந்தர் தேவாரங்களை யாழில் அமைத்துப் பாடியவர், சம்பந்தருடன் ஸ்தல யாத்திரை செய்து அவர் மணத்தின்போது ஜோதியிற் புகுந்து புகழ் பெற்றவர்.

அஞ்சலி அஸ்தம்: இடது அக்கலத்தில் யாழ்,குல்லாய் மூடி

திருநாவலூரில் ஆதி சைவ குலத்தில் தோன்றியவர்.

## 63. சடைய நாயனர் :—

இவர் சுந்தரர் தந்தை தம் குலம் விளங்க இல்லற வாழ்வில் திளைத்துப் புகழ் பெற்றவர்.

அஞ்சலி அஸ்தம்: மொட்டதலை.

ஷை அறுபத்தி மூன்று நாயன்மார்களுக்குப் பின்பு
தோன்றியவர்கள் பத்து பெயர்கள்

இவர்களை தொகை அடியார் என்றும் கூறுவர்

1. இயற்பகை நாயனர்
அஞ்சலி அஸ்தம் - கிரிகிடம்

2. பக்தராய் பணிவார் நாயனர்
அஞ்சலி அஸ்தம் - கிரிகிடம்

3. பரமனையே பாடுந் நாயனர்
அஞ்சலி அஸ்தம்-வலது அக்கலத்தில் தம்புருகிரிகிடம்

4. சித்தத்தை சிவன்பால் வைத்த நாயனர்
அஞ்சலி அஸ்தம் - கிரிகிடம்

5. முப்பொழுதுந் திருமேனி தீண்டுந் நாயனர்
அஞ்சலி அஸ்தம் - கிரிகிடம்

6. முழுநீறு பூசிய முனிவர்
அஞ்சலி அஸ்தம் - கிரிகிடம்

7. அப்பாலுமடிச் சார்ந்தார்
அஞ்சலி அஸ்தம் - கிரிகிடம்

8. திருவாரூர் பிறந்த நாயனர்
அஞ்சலி அஸ்தம் - கிரிகிடம்

9. இசை ஞானியார்
அஞ்சலி அஸ்தம் - வுலது பக்கம சாய்ந்த கொண்டை

10. சேக்கிழார்
வலது அஸ்தம்: உத்ராக்ஷம.
இடது அஸ்தம்: புஸ்தகம். மொட்டதலை.

**மாணிக்கவாசகர் :—**

இவர் பாண்டிய மண்டலத்தில் திருவாதவூரில் அமாத்தியப் பிராமண குலத்தில் தோன்றியவர்: சம்புபாதரசிழிதர். சிவ ஞானவதியார் என்பார் பெற்ரூர்களாவார்; இவருக்குத் திருவாதவூரர் என்பது பிள்ளைத் திருநாமம்; இவர் அரிமர்த்தன பாண்டியனிடம அமைச்சருரிமை பூண்டும் பௌத்த மதத்தைப் பரிகரித்துச் சைவத்தை வளர்த்துச்சிவனடியாரானவர்; ஞான மார்க்கத்தைக் கடைப்பிடித்தவர். இறைவனுல் மாணிக்கவாசகர் என்றுஅழைக்கப்பட்டவர்.இவரை நந்திதேவரது அம்ஸமென்பர் வரசஞர் தென்னவன் பிரமராயன் என்ற பட்டம் பெற்றவர். இவரது பெருமையை உலகுக்கு விளக்க ஆண்டவன் பரிகள். கொணர்ந்தும் நரிபரியாக்கியும், பிட்டுக்கு மண் சுமந்தும், பிரம்படி உலகம் எங்கும பெறச் செய்தும் வையைப் பெருக்கியும் காட்டினுர். சிவபெருமானிடத்தே ஞானுபதேசம் பெற்றவர். ஊமைபெண்ணை பேச வைத்தார். தில்லையில் ஆண்டவனே வேதியனுக வந்து திருவாசகம் திருக்கோவையும் எழுதிக் கொண்டதீ பெருமையுடையவர், தில்லையில் அடியார் காண திருவாசகப் பொருள் இவரேயென இறைவனைக்காட்டி அங்கு இரண்டறக்கலந்தவர்.

இவர் நால்வரில் ஒருவராவர்.

---

## 95. வீரபத்திர அம்சம் : 8-ம் ஆயுத விபரமும்

1. நிருத்த ரூபருக்கு

வலது அஸ்தம் : கத்தி, பாணம்.
இடது அஸ்தம் : கேடயம், வில்லு.
நான்கு அஸ்தம் , நின்ற கோலம்.

2. தக்ஷண ரூபருக்கு

வலது அஸ்தம் : மழு, கத்தி, பாணம்.
இடது அஸ்தம் : மான், கேடயம், வில்லு,
ஆறு அஸ்தம் : நின்ற கோலம்.

• ருத்திரபாகருக்கு

வலது அஸ்தம் : கத்தி, பாணம், மழு, சூலம், மணி.
இடது அஸ்தம் : கேடயம், வில்லு, மான் டமுரகம்.

எட்டு அஸ்தம் நின்ற கோலம்.

4. அகோர வீரபத்திரருக்கு

வலது அஸ்தம் : கத்தி, பாணம், மழு, சூலம், மணி.
இடது அஸ்தம் : கேடயம், வில்லு, மான், டமுரகம், கபாலம்.

பத்து அஸ்தம் நின்ற கோலம்.

5. அஷ்டகாச ரூபருக்கு

வலது அஸ்தம் : கத்தி, பாணம், மழு, சூலம், மணி, தோமரம்.

இடது அஸ்தம்: கேடயம், வில்லு, மான், டமுரகம், கபாலம், படமரம்.

பன்னிரெண்டு அஸ்தம் நின்ற கோலம்.

6. மஹா வீரிய ரூபருக்கு

வலது அஸ்தம் : கத்தி, பாணம், மழு, சூலம், மணி, தோமரம், முசலம்.

இடது அஸ்தம் : கேடயம், வில்லு, மான், டமுரகம், கபாலம், படமரம், பிண்டி, பாலம்.

பதினான்கு அஸ்தம் நின்ற கோலம்.

7. தெட்சயெக்கிய ரூபருக்கு

வலது அஸ்தம் : கத்தி, பாணம், மழு, சூலம், மணி, தோமரம், முசலம், தண்டு.

இடது அஸ்தம் : கேடயம், வில்லு, மான், டமுரகம், கபாலம், படமரம், பிண்டி, பாலம், பாசம்.

பதினாறு அஸ்தம் நின்ற கோலம்.

8. அகோர அஸ்திர ரூபருக்கு

வலது அஸ்தம் : கத்தி, பாணம், மழு, சூலம், மணி, தோமரம், முசலம். தெண்டு, பரசு.

இடது அஸ்தம் : கேடயம், வில்லு, மான், டமுரகம், கபாலம், படமரம், பிண்டி பாலம், பாசம், பேதாளம்.

பதினெட்டு அஸ்தம் நின்ற கோலம்.

---

## 96. காளி அம்சம் 8-ம் அதன் ஆயுத விபரம்

1. பத்திரகாளி

வலது அஸ்தம் ; கண்ட கோடாலி, கெதை, வஜ்ஜிரம், கத்தி, சூலம்.

இடது அஸ்தம் : பாசம், தாமரைப்பூ, கத்தி, கேடயம், கபாலம்.

பத்து அஸ்தம் வீற்றிருந்த கோலம்.

2. மகா காளி

வலது அஸ்தம் : சக்கரம், வஜ்ஜிரம், கோடாலி, கெதை, பாணம், சூலம்.

இடது அஸ்தம் : தாமரைப்பூ, சத்தி, பாசம், மணி, வில்லு, கபாலம்.

பன்னிரெண்டு அஸ்தம் வீற்றிருந்த கோலம்.

3. சற்சண்டிகை

வலது அஸ்தம் : வஜ்ஜிரம், ஈட்டி, சக்கரம், உடுக்கை, பாணம், கண்ட கோடாலி.

இடது அஸ்தம் : கத்தி, வாங்கு, மணி, நாகபாஷம், வில்லு, பாசம்,

பன்னிரெண்டு அஸ்தம் வீற்றிருந்த கோலம்.

4. பையிரவி

வலது அஸ்தம் : சக்கரம், அங்குசம், வளரி, கத்தி, வஜ்ஜிரம், உலக்கை, கெதை, சூலம்.

இடது அஸ்தம் : வேதாளம், பாசம், கண்ட கோடாலி, மணி, சத்தி, கபாலம், கேடயம். கபாலம்.

பதினெட்டு அஸ்தம் வீற்றிருந்த கோலம்.

5. சாமுண்டி

வலது அஸ்தம் : சூலம், கத்தி, அங்குசம், வஜ்ஜிரம்.
இடது அஸ்தம் : கபாலம், கேடயம், பாசம், மணி.

எட்டு அஸ்தம் வீற்றிருந்த கோலம்.

6. சர்வமயமண்டி

வலது அஸ்தம் : சூலம், சக்கரம், வஜ்ஜிரம், பாணம்,
இடது அஸ்தம் : கபாலம், சங்கு. சத்தி, வில்லு.

எட்டு அஸ்தம் வீற்றிருந்த கோலம்.

7. காலாந்திரி

வலது அஸ்தம் : தெண்டு, கட்வாங்கு கத்தி, சூலம்.
இடது அஸ்தம் : வளரி, பாசம், கேடயம், கபாலம்.

எட்டு அஸ்தம் வீற்றிருந்த கோலம்.

8. காளி

வலது அஸ்தம் ; சூலம், டமுரகம், கத்தி, சக்கரம்.
இடது அஸ்தம் : கபாலம், பாசம், கேடயம், மணி.

## 97. சப்தமாதா அம்சம் 7-ம் அதன் ஆயுத விபரமும்

### 1. பிராமணி

வலது அஸ்தம் : அக்ஷயமாலே, அபயம்,கெண்டி, வரதம்.

இடது அஸ்தம் : நான்கு முகம், சதுர்புஜம், ஜடாமகுடம், அம்சம் வாகனம் சாம்பல் நிறம்.

### 2. மகேஸ்வரி

வலது அஸ்தம் : மான், அபயம், வரதம்.

இடது அஸ்தம்: டமுரகம், ஐந்து முகம், சதுர் புஜம், ஜடா மகுடம், ரிஷப வாகனம், மேக நிறம்.

### 3. கௌமாரி

வலது அஸ்தம் : வஜ்ஜிரம், அபயம்.

இடது அஸ்தம் : வேலு, வரதம். ஏக முகம், சதுர் புஜம், சருண்ட மகுடம், மயில் வாகனம், நீல நிறம்.

### 4. வைஷ்ணவி

வலது அஸ்தம் : சக்கரம், அபயம்.

இடது அஸ்தம் : சங்கு, வரதம், ஏக முகம், சதுர் புஜம்' ரத்தின மகுடம், கெருடவாகனம், பச்சை நிறம்.

### 5. வராகி

வலது அஸ்தம் : உலக்கை, அபயம்.

இடது அஸ்தம் : கலப்பை, வரதம், சதுர்புஜம், பன்றி முகம், கரண்டிகா மகுடம், சிம்ம வாகனம், குங்கும நிறம்,

### 6. மகேந்திரி

வலது அஸ்தம் : வஜ்ஜிரம், அபயம்.

இடது அஸ்தம் : வேலு, வரதம், நாக முகம், சதுர் புஜம், சறக்கியான மகுடம், கெஜ வாகனம், நீல வர்ணம்.

7. சாமுண்டி

வலது அஸ்தம் :—வஜ்ஜிரம், அபயம்.

இடது அஸ்தம் :— தந்தம், வரதம்,
ஏகமுகம். சதுர்புஜம், கரண்டிகா மகுடம், மேகநிறம்.

கிங்கினிமாலை, பூதவாகனம்.

---

## 98. அஷ்டதிக்கு பாலகர் அம்சம் 8-ம் அதன் விபரம்

1. இந்திரன்

வலது அஸ்தம் :—வஜ்ஜிரம், அபயம்.
இடது அஸ்தம் :—கத்தி, வரதம்.

வெள்ளை யானைவாகனம், திக்கு கிழக்கு.

2. அக்கினி

வலது அஸ்தம் :—வஜ்ஜிரம், சங்கு, விசிறி. ஓமக்கரண்டி
இடது அஸ்தம் :—கத்தி, சக்கரம். ஓமக்கரண்டி
தலை 2 கால் 3 கை 7.

ஆட்டு கிடா வாகனம், திக்கு தென்கிழக்கு.

3. எமன்

வலது அஸ்தம் :—பாசம், கெதை.
இடது அஸ்தம் :—அங்குஷம், சூலம்.

எருமைக்கிடா வாகனம். திக்கு தெற்கு.

4. நிருதி

வலது அஸ்தம் :—கத்தி, அபயம்.
இடது அஸதம் :—கேடயம், வரதம்.

வாகனம் தண்டிகை (பூதவாகனம்) திக்கு தென்மேற்கு.

5. வருணன்

வலது அஸ்தம் :—விசிறி, அபயம்.
இடது அஸ்தம் :—விசிறி, வரதம்.

வாகனம் முதலை. (யாளி) திக்கு மேற்கு.

6. வாயு

வலது அஸ்தம் :—கார், அபயம்.
இடது அஸ்தம் :—கலப்பை, வரதம்.

வாகனம், கலைமான். திக்கு வடமேற்கு.

7. குபேரன்

வலது அஸ்தம் :—கெதை, அபயம்.
இடது அஸ்தம் :—மழு, வரதம்.
வாகனம். குதிரை திக்கு வடக்கு.

8. ஈசான்யன்

வலது அஸ்தம் :—சூலம், அபயம்.
இடது அஸ்தம் :—மழு, வரதம்.
வாகனம். ரிஷபம் திக்கு வடகிழக்கு.

---

## 99. நவகிரகம் அம்சம் 9-ம் அதன் ஆயுத விபரம்

1. சூரியன்

வலது அஸ்தம் :—கமலம்.
இடது அஸ்தம் :—கமலம்

வாகனம் 7 குதிரை பூட்டிய ரதம், சூரிய பீடம் சிகப்பு நிறம்

2. சந்திரன்

வலது அஸ்தம் :—மொக்கு.

இடது அஸ்தம் :—மொக்கு.
வெண்மை நிறம். வாகனம். ஜம்புகம் (சந்திர பீடம்.)

3. அங்காரகன்

வலது அஸ்தம் :—சத்தி, அபயம்.

இடது அஸ்தம் :—வேலு, கெதை.
அன்ன வாகனம்.—சிகப்பு—நிறம்,

4. புதன்

வலது அஸ்தம் :—சத்தி, அபயம்.

இடது அஸ்தம் :—படமரம், வரதம்.
குதிரை வாகனம் பச்சை நிறம்,

5. குரு

வலது அஸ்தம் :—ஜெபமாலை, அபயம்.

இடது அஸ்தம் :—சொம்பு, கெதை.
யானை வாகனம். வெண்மை நிறம்.

6. சுக்கிரன்

வலது அஸ்தம் :—ஜெபமாலை, கெதை.

இடது அஸ்தம் :—சொம்பு, வரதம்.
கெருட வாகனம். வெண்மை நிறம்,

7. சனிஸ்வரன்

வலது அஸ்தம் :—பாணம், சூலம்.

இடது அஸ்தம் :—வில், வரதம்.
காக்கை வாகனம், கருப்பு நிறம்,

8. ராகு

அஞ்சலி அஸ்தம் :—வலது அக்கலத்தில், பாம்பு.
சிம்ம வாகனம். கருப்பு நிறம்,

9. கேது

அஞ்சலி அஸ்தம் :—வலது அக்கலத்தில் சிம்மம்.
ஆடுவாகனம். சிகப்பு நிறம்.

---

## 100. விஷ்ணு அம்சங்களின் ஒரு பகுதி ஆயுதங்களின் விபரம்

1. திரு நாராயணன்

வலது அஸ்தம் :—சக்கரம், அபயம்.

இடது அஸ்தம் :—சங்கு, கெதை, கிரிகிடம், அம்மன் பாதத்தில் நின்றது.

2. வரதராஜீலு

வலது அஸ்தம் :—சக்கரம், அபயம்.
இடது அஸ்தம் :—சங்கு, கெதை.

3. திருவேங்கிடமுடையான்

வலது அஸ்தம் :—சக்கரம், வரதம்.
இடது அஸ்தம் :—சங்கு, கடிக அஸ்தம். வலது மார்பில் லக்ஷிமி.

4. வைகுந்தவாசகர்

வலது அஸ்தம் :—சக்கரம், அபயம்.
இடது அஸ்தம் :—சங்கு, கடிகாஸ்தம். நாகவாகனம்.

5. உலகளந்தப்பெருமாள்

வலது அஸ்தம் :—சக்கரம், சூசித அஸ்தம்.

இடது அஸ்தம் :—சங்கு, அர்த்த பதாஸ்தம். வலது கால் தூக்கியது.

6. ரங்கநாதர்சயனம்

வலது அஸ்தம் :—சக்கரம், கெதை.

இடது அஸ்தம் :—சங்கு, தாமரைப்பூ. நாகத்தின் மீது சயனம். பாதத்தண்டை சீதேவி, பூதேவி, உட்கார்ந்தது. உந்தி கமலத்தில் சதுர்முகபிர்மா.

7. சக்கரத்தாழ்வார் (ஸுதர்சனமூர்த்தி)

சக்கரத்துக்குள், 6. கோணம் அதன் மத்தியில் நின்றது.

வலது அஸ்தம் :—சக்கரம், அம்பு, புல்லாங்குழல்.

இடதுஅஸ்தம் :—சங்கு, வில்லு, கெதை.

மற்றும் வேறுவிதம்

வலது அஸ்தம்:—சக்கரம், சூலம், அங்குசம், கமலம், அபயம்

இடது அஸ்தம் :—சங்கு, டமுரகம், தண்டு, பாசம், புல்லாங்குழல், சீதேவி, பூதேவி, அம்மன் இருபுறம் நின்றது.

மற்றும் வேறுவிதம்

வலது அஸ்தம் :—சக்கரம், அம்பு, கத்தி, அபயம்.

இடது அஸ்தம் :—சங்கு, வில்லு, கேடயம், கெதை.

8. விஷ்ணு(பெருமாள்)

வலது அஸ்தம் :—சக்கரம், அபயம்.

இடது அஸ்தம்:—சங்கு, வரதம்.

9. தாயார் (லக்ஷ்மி)

வலது அஸ்தம்:—கமலம், அபயம்.
இடது அஸ்தம்:--கமலம், வரதம்.
கிரிகிடம், வீற்றிருந்த திருக்கோலம். (பத்மாசனம்.)

10. ஆண்டாள்

வலது அஸ்தம் :--கமலம். (கிளி)
இடது அஸ்தம் :--சிம்மமுக அஸ்தமாக தொங்கிய கை.
நின்றகோலம், வலது பக்கம் சாய்ந்த ஜடைமுடி.

11. உடையவர்

அஞ்சலி அஸ்தம் :--வலது பக்க அக்கலத்தில் கொடி.
வயிர முடி இடது பக்கம் சாய்ந்தது:

12. நம்மாழ்வார்

வலது அஸ்தம் :--ஜெபமாலே பிடித்தது
இடது அஸ்தம் :--கடிக அஸ்தம்
வீற்றிருந்த திருக்கோலம். மரம் இடது பக்கம் சாய்ந்தது.

13. கேருடன்

அஞ்சலி அஸ்தம் : நாகம் 8 கங்கணமாக உள்ளது.
கிரிகிடம்.

14. பக்தி ஆஞ்சனேயர்

அஞ்சலி அஸ்தம் :—நின்ற கோலம்.

தற்சமயம் பழக்கத்திலுள்ள தேவதைகளும் அதன் ஆயுதமும்.

## 101. ஈஸ்வர அம்சங்களின் ஒரு பகுதி ஆயுதங்களின் விபரம்

1. ஈஸ்வரர்

வல துஅஸ்தம் :—மழு, அபயம்.
இடது அஸ்தம் :—மான், வரதம்.

2. அம்மன் (ஈஸ்வரி)
வலது அஸ்தம் :--அங்குசம், அபயம்.
இடது அஸ்தம் :--பாசம், வரதம்.

3. பிரமா
வலது அஸ்தம் :--ஜெபமாலே, அபயம்.
இடது அஸ்தம் :--சொம்பு, (கண்டிகை) வரதம்.

4. சரஸ்வதி
வலது அஸ்தம் :--ஜெபமாலே, வீணை வாசிக்கும் கை.
இடது அஸ்தம் :--புஸ்தகம், வீணை தாங்கிவாசிக்கும் கை.

5. ரேணுகை
வலதுஅஸ்தம் :—டமுருகம், கத்தி.
இடது அஸ்தம் :--பாசம், கபாலம்.
சுவாலே மகுடம், சிரசில் 5 தலே நாகம்.
உட்கார்ந்த கோலம்.

6. கெங்கை
வலது அஸ்தம் :--சூலம், அபயம்.
இடது அஸ்தம் :--பாசம், வரதம்.
ஜடாமுடி, உட்கார்ந்த கோலம்.

7. துர்கை
வலது அஸ்தம் :--சக்கரம், அபயம்.
இடது அஸ்தம் :--சங்கு, கடிகை, அஸ்தம்.
பாதத்தின் கீழ்ஆட்டுத்தலே, நின்ற கோலம்.

8. ராஜேஸ்வரி
வலது அஸ்தம் :—கமலம், அங்குசம்.
இடது அஸ்தம் :--இரும்புவில், பாசம்.
உட்கார்ந்த கோலம்.
ஏகசக்கரக்குடை, சிம்மாசனம்.
இருபுறம் லட்சுமி, சரஸ்வதி.

முன் பக்கங்களில் சொல்லி உள்ள, அளவு பிரகாரமாய் செய்யப்பட்ட மூல விக்கிரகத்தை, ஆரம்பத்தில் ஜலாதிவாசம் செய்விக்கவேண்டும்.

செய்யும் கிரிகையாவன :

செய்யும் சமயத்திலுள்ள தேசகாலாதிகளைச் சொல்லி, ஏவம் குணவிசேஷண விசிஷ்டாயா,மாபுண்ய சுபமுஹூர்த்தேன அஸ்யாம் சுபதிதௌ.........கர்ஷுணுதிதோஷ நிவர்த்யர்த்தம், ஜலாதிவாசம் கர்ஷ்யே.

என்று சங்கல்பம் சொல்லி ஒரு பாத்திரத்தில் கெங்கை ஜலமும், பஞ்சகவ்யமும், விபூதியும், போட்டு அதில் ஷை விக்கிரகத்திற்கு இரண்டு தர்பையுடன் இரண்டு வஸ்திரம் சுற்றி பாத்திரத்தில் வைத்து, இடது கையினுல் பாத்திரத்தைப் பிடித்து (அந்த தேவதைக்குள்ள, மந்திரமாகிய பஞ்சாக்ஷரமோ) சடாக்ஷரமோ) அஷ்டாக்ஷரமோ) எதையாவது, 108 தடவை ஜபித்து 1வாரமோ, 1பக்ஷமோ, 1மண்டலமோ, இப்படி அவரவர்கள் சவுகரியம்போல் செய்துவருவதோடு, தினம் தினம் ஜலத்தை அப்புறப்படுத்துவதோடு, ஷை மந்திரத் தையும் ஜபித்து வரவும், பிறகு குறித்த தினத்தில் ஷைவிக்கிரகத்தைப் பாத்திரத்திலிருந்து எடுத்து வஸ்திரத்தையும் தர்பையையும், அவிழ்த்து, சுத்தோதகாபிஷேகம் செய்து பஞ்சோப சாரத்தால் பூஜித்து, பிறகுதான்யாதிவாசம் செய்யவும்.

இந்த இடத்தில் ஜலத்தில் வைக்கும் விக்கிரகத்தின் பெயரை சொல்லவும். (கங்கா ஜலத்துக்கு ஒப்பான சுத்தமான ஜலம்.)

## தான்யாதி வாசம் குறிப்பிட்ட தினத்துக்குமேல் பிறகு செய்தல் வேண்டும்

செய்யும் கிரிகையாவன :

தேச காலாதிகளைச் சொல்லி ஏவம் குண விசேஷண விசிஷ்டாயா மாபா புண்யசுப முஹூர்த்தேன அஸ்யாம் சுபதிதௌ....................தேவதா பிருத்வ சித்தியர்த்தம் தான் யாதிவாசம் கரிஷ்யே. என்று சங்கல்பம் சொல்லி, ஈசான்ய திக்கில் பூமியை சுத்திசெய்து அஷ்டதள கமலக்கோலமிட்டு அதன்பேரில் நெல்(அரிசி) நிறைந்த பாத்திரத்தை வைத்து ஷை

விக்கிரகத்தை தர்பை, வஸ்திரம், இவைகளினால் சுற்றி கிழக்கு திக்கில் சிரசு இருக்கும்படியும், முகம் தெற்கு நோக்கியபடியும் வைத்து.

மந்திரம்

அர்ச்சனா விதியில் சொன்ன மந்திரபூர்வமாக பூஜித்து தான்ய பாத்திரத்தில் படுக்க வைத்து அதை இடது கையில் பிடித்து பிராணாயாமம் செய்து 108 தடவை, ஜலாதி வாசத்தில் சொல்லிய மந்திர பிரகாரம் தினம் தினம் ஜபித்து, குறித்த காலத்தில் எடுத்து பஞ்சப்பிரம்ம மந்திரங்களினால் ஜலாபிஷேகம் செய்து, மூலஸ்தானத்திலுள்ள அலங்கார பீடத்தில் இருத்தி ஜடி பந்தனம் (திரிபந்தனம்) செய்தல் வேண்டும்.

ஜடிபந்தனம் (விக்கிரகத்தை படியவைக்கும் விபரம்)

அலங்கார ஆசனத்தில் படியவைக்குமுன் ஷை விக்கிர கத்துக்குடைய வசிய யந்திரத்தை வைத்து, பாதரசம், நவ ரத்தினம் (அதாவது) 1. மாணிக்கம் 2. முத்து 3. பவழம் 4. பச்சை 5. புஷ்பராகம் 6. வைரம் 7. நீலம் 8. கோமே தகம் 9. வைடூரியம். ஆக ஒன்பதும் ஊசிகாந்தம் முதலியவைகளை வைத்து, திரிபந்தன மருந்தாகிய வாழைப் பழம், நாட்டுச் சக்கரை, கல்சுண்ணாம்பு நீர் ஜலித்தது. இவை களை, கூட்டி வைத்து ஷை விக்கிரத்தை சம பார்வையாக படிய வைத்தல் வேண்டும்.

இதுவு மது

வஜ்ர பந்தனம்

சர்க்கரை பாதரசம் இவற்றை சமபாகமாக சேர்த்து பொடி செய்து, எருமை வெண்ணெயினால் சேர்த்து இடித்து யந்திரத்தை வைத்து ஸ்தாபனம் செய்ய வேண்டும் என ஆகம முதலிய நூல்களில் கூறுகிறது.

---

## 101. பிரதிஷ்டைகள் நான்கும் அதன் விபரமும்

1. ஆவர்த்தனப் பிரதிஷ்டை

ஆரம்பத்தில் இளங்கோயிலாக இருந்து மறுபடியும் ஆலய முறைப்படி கோயில் அமைத்து இளங்கோயிலுள்ள பிம்பத்தை

முறைப்படி அமைத்தகோயில் (அல்லது)நூதனமாக திருவுருவம் அமைத்து பிரதிஷ்டை செய்வதாகும்.



2. அனுவர்த்தனப் பிரதிஷ்டை

நித்திய பூஜைகள் நடந்து வருங்கால் இடையில் ஏதாவது தோஷங்கள் ஏற்பட்டால் தோஷ பரிஹாரமாகப் பிரதிஷ்டை செய்வதாகும்.

3. புனராவர்த்தனப் பிரதிஷ்டை

பழமையாயுள்ள ஆலயத்தில் ஜீரணம் ஏற்பட்டால் அதைப் புதுப்பித்து பிரதிஷ்டை செய்வதாகும்.

4. அந்தரீதகப் பிரதிஷ்டை

ஆலயத்தில் ஏதாவது ஒருபாகம் பின்னம் அடைந்தோ அல்லது பிம்பத்தில் ஏதாவது ஒருபாகம் பின்னம் அடைந்தோ இருப்பவைகளை புதுப்பித்து பிரதிஷ்டை செய்வதாகும்.

---

## 102. கும்பாபிஷேக பூர்வாங்க கிரிகையின் விபரம்

1. தனபூஜை

கும்பாபிஷேகத்தை முன்னிட்டு திரவியங்களை பூஜித்து தேவதா பிரதிஷ்டைக்கு அர்ப்பணம் செய்வதாக இறைவனிடம் விண்ணப்பித்துக் கொள்வது.

2. அநுக்ஞை

இறைவனிடம் யான் எடுத்துக்கொண்ட இக் கும்பாபிஷேகம் சுபகரமாக முடியவேண்டும் எனப்பிரார்த்தித்து உத்திரவு பெருதல்.

3. விக்னேஸ்வர பூஜை

யான் எடுத்துக்கொண்ட இக் கும்பாபிஷேகம் இடையூறின்றி முற்றுபெற முதல் தெய்வமான ஸ்ரீ விக்னேஸ்வரரை பூஜிப்பது.



4. பிரவேச பலி

அஷ்ட திக்குகளில் கிழக்கு முதல் ஈசான்யம் வரையில் முறையே உள்ள. 1. யக்ஷ, 2. ராக்ஷஸ, 3. பூதம், 4. பிசாசு, 5. பிரம ராக்ஷஸன், 6. காளி, 7. சரளி, 8 பைரவர் இவைகளைப் பூஜித்து அதற்குள்ள ஆகாரங்களையும் கொடுத்து அவரவர்கள் இருப்பிடம் போகச் செய்தல்.

5. ரக்ஷோக்ன ஓமம்

எட்டு திக்கிலுள்ளமேல்படி தேவதைகள் போகாமல் இன்னும் ஆகாரம் கிடைக்கும் என நினைத்து இருக்கும். ஆதலால் ஓமம் செய்வதின் மூலம் சக்தி கிடைக்கப் பெற்று அவைகளை சங்கரித்தல்.

6. வாஸ்து சாந்தி

வாஸ்து புருஷனையும் பிரம்மாவையும் பூஜித்து ஆலயம் பிரகாரம் யாகசாலை, வீதி முதலியவைகளை சுத்தப்படுத்துவதாகும்.

7. மிருத்ஸங்கிரஹணம்

கும்பாபிஷேகம் மங்களகரமாக முடிவதற்கு விதை தெளிக்க பாலிகைகளில் மண்ணை நிறப்புவதற்கு பூமிதேவியை பூஜித்து உத்திரவு பெற்று மண்ணெடுத்தல்.

8. அங்குரார்ப்பணம்

கும்பாபிஷேகத்தில் ஏற்படும் சுபாசுபங்களை அறிந்து சுபமாக நடத்துவதற்கு சூரிய சந்திரனை பூஜித்து முளை இடுதலாகும்.

9. ரக்ஷாபந்தனம்

சிவாச்சார்யர்களுக்கு அசுத்தி ஏற்படாமல் எப்போதும் சுத்தனாக இருக்கும் பொருட்டு ரக்ஷாரூபமான கங்கணத்தை வலது கையில் தரிப்பதாகும்.

## 10. கும்பாலங்காரம்

தேஜோமயனுன இறைவனை சுவர்ண மயமான கும்பத்தில் அழைப்பதற்கு கும்பத்தை நிர்மலமான மந்திரமய தேவதாசரீர மாகவும் கும்பத்தில் சுற்றப்படும் ஐவகைப்பட்டு நூல்களை நாடி களாகவும். சாந்தியதீதாதிகளை சிரசு முதலான அங்கங்களா கவும், வஸ்திரம், தேங்காய், மாவிலை, கூர்ச்சம் முதலானதுகளை தோல் எலும்பு கூந்தல் முதலானதுகளாகவும், தத்வம், புவனம், வர்ணம் பதம், மந்திரம், முதலானதுகளை அஸ்தி, ரோமம் மாம்ஸம் ரத்தம் சதை, கொழுப்பு, மேதஸ் முதலானதாகவும் நவரத்தினங்கள், சுவர்ண புஷ்பங்கள் முதலானதை சுக்கில மாகவும் அந்த தீர்த்தத்தை அமிருத ரூபமாகவும் பாவித்து பூஜித்து அலங்கரிப்பது.

## 11. கும்பாகர்ஷணம்

அலங்கரிக்கப்பட்ட கும்பத்தை தேவதா சந்நிதியில் ஸ்தா பித்து இறைவனை பூஜித்து கும்பத்தில் வந்து சேரும்படி செய்தல்.

## 12. யாகசாலா பிரவேசம்

யாகசாலையானது தேவாலயம் போன்றது அதிலுள்ள வேதிகையானது இறைவன் அமர்ந்து இருக்கும் அலங்கார ஆசன பீடமாகவும் அங்குள்ள குண்டங்களெல்லாம் வேள்விக் குரிய அக்கினிகளை ஸ்தாபிதம் இடமாகவும் இவ்விதமான யாக சாலைக்கு இறைவனை யாகத்தில் வாசம் செய்யும் பொருட்டு பிரார்த்தித்து அழைத்து ஆசனத்தில் அமர்த்தி இருக்கும்படி செய்தல்.

## 13. யாகபூஜைஹோமம் பூர்ணாஹுதி

யாகபூஜை முதலியவைகள் காலையிலும் மாலையிலும் இரண்டுகாலம் முதல் பதினெட்டு காலம்வரை சக்திக்குத் தக்கபடி செய்வதாகும். வேதிகையை சுற்றி இருக்கும் ஏக குண்டம் அல்லது பஞ்சகுண்டம் அல்லது நவகுண்டம் இவை களில் ஏதாவது அமைத்து அக்கினிகளை பூஜித்து பிரதான இறைவனையும் ப்ருதிவீ, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், சூரியன் சந்திரன், எஜமானன் என்னும்எட்டு மூர்த்திகளையும் ஷ இறை

வனுக்கு பரிவார தேவதைகளையும் பூஜித்து பசுவின் நெய் யினாலும் ஸமித்துக்களாலும் நாநாவிதமான அன்னங்களாலும் பழவர்க்கங் களாலும், த்ரான்ய வர்க்கங்களாலும் வாசனை திர வியங்களாலும் கிழங்கு வர்க்கங்களாலும் ஆயிரக்கணக்காக ஹோமம் செய்வது, ஹோம பூர்த்தியில் சம்பூர்ணமான நெய் யினால் இடைவிடாது அக்கினி மத்தியில் இறைவனிடம் சேர்ப்பது பூர்ணாஹூதி ஆகும். இதன்படி ஒவ்வொரு காலமும் செய்தல். அக்கினியில் எந்த தேவதைகளுக்கு நெய்யும் ஓம திரவியங்களும் சேர்க்கின்றோமோ, அதை அக்கினி தேவன் ஷி தேவதையிடம் சேர்ப்பிக்கிறார்.

கீழ்வரும் வேதப்பாட்டில் காண்க

அக்கினி தேவயான் அளிக்குமிச் சமிதையை
மிக்குநீ யேற்று மிளிரழல் குதிப்பதி
தூயநற்புகையொடு துரகமே யென்ன
வாயகன் வான்த்துயர் முகடெட்டிப்
பகலோன் கதிரொடுபத முறக்கலப்பாய்
இகலெமக்கின்றியே இனிய நன்மழையுங்
குறையாவுணவுங் குடிநனிபானமும்
இறையாய் நின்றுநீ இனியெமெக்கருள்வாய்
தேவரின் இளையோய் தேர்ந்துணர் மேலோய்
ஏவிய சுரர்க்கும் எமக்கும் மேவியதூதனாய் மிகுநலன் புரிவையே

---

## 14. அஷ்டபந்தனம் (எட்டுவிதமான திரவியங்கள்)

1. சுக்கான்கல் பங்கு 6
2. காவி பங்கு 1
3. கொம்பரக்கு பங்கு 2
4. கருங்குங்கிலியம் பங்கு 4
5. மெழுகு பங்கு 2
6. லிங்கம் பங்கு 2
7. செம்பஞ்சு பங்கு 1
8. வெண்ணெ பங்கு 1

இதன்படி வாங்கி சுக்கான்கல், காவி, கொம்பரக்கு கருங்குங் கிலியம். லிங்கம் இவைகளை உரலில் இடித்து வஸ்திரகாயம் செய்து மெழுகை வங்காய பிரைபோல் சீவி இத்துடன் கலந்து உரலில் இட்டு பஞ்சு வெண்ணெயைச் சேர்த்து இடித்து எடுத்த மருந்தினால் அசையாமலிருக்கும்படிச் செய்வது.

## 15. பிம்பசுத்தி

உருவத்தை செய்யும்போதும் மருந்து சாத்தும்போது பிம்பத்தை பலர் தொடுவதினால் உண்டான தோஷத்தைப் போக்க தீர்த்தத்தில் அநேகமூலிகைகளையும் திரவியங்களையும் சேர்த்து மந்திர பூர்வமாக அபிஷேகம் செய்து பூஜித்தல்.

## 16. பிம்பரக்ஷா பந்தனம்

கும்பாபிஷேகத்திலுள்ள கிரிகைகள் முடியும் வரைக்கும் தவிர இறைவனுக்கு மண்டல பூஜை முடியும்வரைக்கும் இந்த ரட்சையானதுதரிக்க தக்கது இவை திருஷ்டி தோஷ நிவர்த்தியின் பொருட்டு செய்வது

## 17. நாடீசந்தானம்

சந்நிதியில் பிரதிஷ்டை செய்யப்பட்ட திருவுருவத்துக்கும் யாகசாலையிலுள்ள கும்பத்துக்கும் குண்டத்துக்கும் சுவர்னம், பட்டு, தர்ப்பை இவைகளில் ஏதாவது ஒரு சூத்திரத்தினால் ஸந்தானம் செய்து அதின் வழியாக மின்சாரம் போல் முப்பத்தாறு தத்துவங்களையும் பிம்பத்தில் சேர்ப்பித்தல்.

## 18. மூலாலய பிரவேசம்

இறைவனையாக சாலையிலிருந்து ஆலய வலமாக மந்திர கோஷத்தோடு நானாவித கீத வாத்திய கோஷத்தோடும் அநேக உபசாரங்களோடும் அன்போடு திருக்கோயிலுக்குள் அழைத்து போவது

## 19. கும்பாபிஷேகம்

கும்பத்தில் அமிருதஸ்வருபமாய் விளங்கும் இறைவனை பிம்பத்தில் வந்து சேரும்படி பூஜித்து மந்திரமயமாயும் அமிருதயமமாயுமுள்ள கும்பதீர்த்தத்தை அபிஷேகம் செய்வது

## 20. மகா அபிஷேகம்

கீழ்க்கண்ட அபிஷேக வகைகளால் இறைவனை அபிஷேகித்து பூஜித்தல்.

(அபிஷேக வகை. 32. ஆவண)

1. சுத்த ஜலம்
2. நல்லெண்ணை
3. அரிசி மாவு
4. மஞ்சள் தூள்
5. திருமஞ்சன பொடி
6. பஞ்ச கௌவியம்
7. பஞ்சாமிர்தம்
8. நெய்
9. பால்
10. தயிர்
11. தேன்
12. கரும்பு
13. பலாப்பழம்
14. மாம்பழம்
15. வாழைப்பழம்
16. விளாம்பழம்
17. எலுமிச்சம்பழம்
18. நாரத்தம்பழம்
19. தமரத்தைபழம்
20. பொம்மலிமாசுபழம்
21. குளஞ்சிபழம்
22. இளநீர்
23. வெந்நீர்
24. அன்னம் வடைமாலை
25. புனுகு கோரோஜனம்
26. சொர்ணம்
27. வலம்புரிசங்கு
28. ஏகதாரை (ஆயிர தாரை) (பசுவின் கொம்பு)
29. பன்னீர்
30. விபூதி
31. சந்தனம்
32 ஸ்தபனம்.

## 21, மகோற்ஸவம்

மூர்த்திகளை வாஹனாருடர்களாக அலங்கரித்து உபசாரத்துடன் திருவீதிகளில் ஸர்வஜன அனுக்கிரகத்தின் பொருட்டு எழுந்தருளச் செய்வதாகும்

## 22. அங்குர ரக்ஷா விஸர்ஜனம்

யாகசாலையில் ஓங்கிவளர்ந்த முளைகளோடு கூடின பாலிகையை நதி அல்லது குளம் முதலிய இடங்களுக்குபோய் பாலிகையிலுள்ள முளைகளை தீர்த்தத்தில்களைந்து கையில் தரித்திருந்த கங்கணத்தையும் களைந்து அத்தீர்த்தத்தில் விடுவதாகும்

## 23. ஆசார்ய உத்ஸவம்

சர்வஜன க்ஷேமங்களைப் பிரார்த்தித்து இறைவனிடம் கும்பாபிஷேக மகிழ்ச்சியை அர்ப்பணம் செய்த ஆசார்ய சாதகர்களை

ஆலயவிருதுகளுடன் பக்தர்கள் சூழ அவர்களது மனை சேர்ப்
களிப்பதாகும்

24. மண்டல பூஜை

கும்பாபிஷே மறுதின முதல் 48 தினங்களுக்கு ஸ்த
பூஜை ஹோமம் முதலானது செய்து இறையவனுக்குஅபிஷே
செய்து உபசரிப்பதாகும்

## 103. ஆலய திருப்பணி செய்பவர்கள் பலன்

" புல்லினுல் வருடம்கோடி புதுமண்ணுல் நூறுகோடி
துல்லிய செங்கல்லாலே தூய முன்னூறுகோடி
அல்லியங் கோதே கேளாய் அருத்தரும் ஆலயங்கள்
கல்லினுல் அமைத்தபேர்கள் கைலைவைகுந்தம் மீந்தார் "

## 104. திருவுருவம் செய்விக்கு முன் சிற்பி கவனிக்கவேண்டிய சில முக்கிய விதிகள்

1. உருவபேதம் :—சிற்பன் தன்மனதை ஒரு முகப்படுத்
செய்யும் திருவுருவங்களை தன்மனக்கண்ணில் பதியவைத்த
பின்னரே வேலை செய்யதுடங்க வேண்டும் (அதாவது) பலமா
பாடுகள் கொண்ட உருவங்களின் தோற்றங்களை உருவபேத
தால் உணர்தல் வேண்டும்

2. பிரமாணம் :—உருவங்களின் அமைப்புக் குரிய அள
கலைப்பாகுபாடு செய்துக் கொள்ளவேண்டும்

3. பாவம் :—உருவ அமைப்பில் அதற்குள்ள நெகிழ்ச்சிக
வெளிப்படும்படி அமைத்தல் வேண்டும்

4. லாவண்ணியம் : அழகு வசீகரம், ஒயில் முதலிய லட்
ணங்களை பொருந்தும்படி செய்தல் வேண்டும்

5. ஒப்புமை :—அதாவது சில்பங்களில் கூறிய மூர்த்
களுடைய ரூபதியானத்துக்கு தக்கபடி உருவங்கள் அமைந்
இருக்கும்படி செய்தல் வேண்டும்

6. வர்ணம் :—அந்தந்த ரூபங்களுக்கு வர்ணங்கள் சில
தாம்பரம், தவிற மற்றவகையில் செய்யும் உருவங்களுக்கு எ
செய்தல் வேண்டும்